வெண்மையான, சுத்தமான
லக்ஸ் டாய்லட் சோப்பின்
நுரை மிகவும் மிருதுவானது,
நறுமணம் கமழ்வது..."




என்று கூறுகிறார் **நிகார்**

நிகார் கூறுவதாவது: "இந்த சுத்தமான, வெண்மையான லக்ஸ் டாய்லட் சோப் என் சருமத்தில் அற்புதமான மாறுதலை ஏற்படுத்தியிருக்கிறது. அதன் சுருசுருப்பான ஆழப்புகுந்து சுத்தம் செய்யும் நுரை என் சருமத்தை பட்டுப்போல் மிருதுவாகவும், நான் முழுதும் கவர்ச்சியாகவும் இருக்கச் செய்கிறது. அன்றியும் என் வதனத்திற்கு காந்தியும், புதுப் பொலிவும் தருகிறது."



"...அதனால் தான் லக்ஸ் டாய்லட் சோப்பை எனது பூரண அழகு பராமரிப்பாக தேர்ந்தெடுத்திருக்கிறேன்."

சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப் ★

LTS. 413-50 TM

# கல்கி பொருளடக்கம்

மலர் 13 இதழ் 34 | 1954 மார்ச் 21 | விஜயஆண்டு பங்குனி 8

சரித்திரம்
கண்டும், கேட்டுமிராத
புதுமை!

சென்னையில் மட்டும்
ஒரே வாரத்தில்
ரூ 84,002-7-6!!

20,00,000
கண்கள் கண்டு களித்த
அற்புத சித்திரம்



தமிழர் பண்பாட்டுக்கு
ஓர் எடுத்துக்காட்டு
தமிழகமே பூரித்து
பெருமை கொள்ள
வீர உலா வருகிறான்

மனோகர் பிக்சர்ஸ்

# மனோகரா

திரைக்கதை வசனம்
கலைஞர்
மு.கருணாநிதி

பிரசாத்... எம்.சோமசுந்தரம்... நெப்ட்யூன்

RIGHTS CONTROLLED BY
ராதாகிருஷ்ணா பிலிம்ஸ் லிமிடெட் ஆலப்புழை




மலர் 13 | தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 34

# திருவாங்கூர் காங்கிரஸின் விவேக முடிவு

திருவாங்கூர் – கொச்சி இராஜ்யத்தின் காங்கிரஸ் தலைவர்களுக்குக் கடைசியாக நல்ல புத்தி ஏற்பட்டிருக்கிறது என்று அறிந்து மிக்க மகிழ்ச்சி அடைகிறோம். பிரஜா சோஷலிஸ்ட் கட்சியார் அங்கு மந்திரி சபை அமைத்தால் அதற்கு ஆதரவு கொடுப்போம் என்று காங்கிரஸ் தலைவர்கள் முன் வந்திருப்பது மிக்க விவேகமான காரியமாகும்.

திருவாங்கூர் – கொச்சி அரசியலில் ஏற்பட்டிருந்த குழப்ப நிலைமைக்குப் பெரிதும் காரணமா யிருந்தவர்கள் அந்த இராஜ்யத்தின் காங்கிரஸ் தலைவர்கள்தான். அங்கு நிலையான அரசாங்கம் நடைபெற முடியாமல் இரண்டு வருஷத்துக்குள் மறுபடியும் பொதுத் தேர்தல் நடத்துவதற்கு அவசியம் நேர்ந்தது மேற்படி காங்கிரஸ் நிர்வாகிகளின் தீர்க்க திருஷ்டிக் குறைவினாலேயே என்று கூறலாம்.

திருவாங்கூரில் நடந்து வந்த காங்கிரஸ் ஆட்சி பொதுமக்களிடையில் எவ்வளவு உற்சாகத்தை அளித்திருந்தது என்பதை இந்தப் பொதுத் தேர்தலில் கண்டோம்.

வடநாட்டிலிருந்து புகழ் பெற்ற காங்கிரஸ் தலைவர்களான பண்டித ஜவாஹர்லால் நேரு, ஸ்ரீ கைலாஸநாத் கட்ஜு, பம்பாய் முதன் மந்திரி ஸ்ரீ மொரார்ஜி தேஸாய், தேர்தல் நடத்துவதில் அஸகாய சூரர் எனப் பெயர் வாங்கிய பம்பாய் ஸ்ரீ எஸ். கே. பாடில் ஆகியவர்கள் காங்கிரஸின் சார்பாகத் தேர்தல் பிரசாரத்துக்கு வந்திருந்தார்கள். நம் ராஜாஜி அவர்களும் சென்றிருந்தார்கள்.

இவ்வளவு பெரியவர்கள் சென்று பேசியும் பொது மக்களிடையில் ஏற்பட்டிருந்த காங்கிரஸ் விரோத உணர்ச்சியை அடியோடு போக்க முடியவில்லை.

நேருஜி, ராஜாஜி போன்றவர்களிடம் திருவாங்கூர்ப் பொது மக்களுக்குப் பக்தி இல்லாமற் போகவில்லை. மற்ற இடங்களில் போலவே திருவாங்கூரிலும் நேருஜி, ராஜாஜி போன்ற தலைவர்கள் பேசிய பொதுக் கூட்டங்களுக்கு லட்சக் கணக்கில் ஜனங்கள் கூடி யிருந்தார்கள். தலைவர்களின் உபதேசங்களைச் சிரத்தையுடன் கேட்டார்கள். ஆனால் பொதுக் கூட்டத்திலிருந்து திரும்பிப் போகும்போது, "அவர்கள் பெரியவர்கள்தான்! ஆனால் நாம் இங்கே படும் கஷ்டம் அவர்களுக்கு என்ன தெரியும்? எடுத்துச் சொல்லுவோர் யார்?" என்று பேசிக்கொண்டு போனார்கள்.

திருவாங்கூர்ச் சட்டசபையின் மொத்தம் 117 ஸ்தானங்களில் 45 ஸ்தானங்களைத்தான் காங்கிரஸ் கைப்பற்ற இயன்றது. மேற் கூறிய தலைவர்கள் படையெடுத்து வந்து பிரசாரம் செய்திரா விட்டால், இவ்வளவு ஸ்தானங்கள் கூடக் கிடைத்திருக்க முடியாது.

நாகர் கோயில் பகுதியில் உள்ள உண்மையான காங்கிரஸ் பற்று வாய்ந்த தமிழர்களின் நியாயமான உரிமைகள் எப்படி நெடுகிலும் புறக்கணிக்கப்பட்டு வந்தன என்பதையும், அதன் விளைவாக அந்தப் பகுதிகளில் காங்கிரஸ் அபேட்சகர் ஒருவர் கூட வெற்றி பெற முடியாமற் போயிற்று என்பதையும் பார்த்தோம்.

பொதுத் தேர்தலின்போது திருவாங்கூருக்குப் பிரசாரத்துக்காகப் படை யெடுத்து வந்த அகில இந்தியத் தலைவர்கள் கொஞ்சம் முன்னதாகவே அங்கே சென்று, காங்கிரஸின் செல்வாக்கைப் பலப்படுத்துவதற்குரிய யோசனைகளைச் சொல்லி வழி முறைகளை வகுத்திருந்தால் நன்றாயிருந்திருக்கும். பெரிய அகில இந்திய காங்கிரஸ் தலைவர்கள் அவ்வாறு செய்யத் தவறி விட்டார்கள்.

மேற்படி தவறுகளுக்கெல்லாம் பிராயச் சித்தம் செய்வது போல் இப்போது திருவாங்கூர் காங்கிரஸ் தலைவர்கள் பிரஜா - சோஷலிஸ்ட் கட்சியை ஆதரிக்க முன் வந்திருப்பதைப் பெரிதும் பாராட்டுகிறோம்.

* * * * * *

திருவாங்கூர் பொதுத் தேர்தலின் விளைவாக ஏற்பட்ட நிலைமையினால், பிரஜா–சோஷலிஸ்ட் கட்சி மிக்க அரசியல் முக்கியத்தைப் பெற்றது. அந்த இராஜ்யத்திலேதான் முதன் முதலாகப் பிரஜா-சோஷலிஸ்ட் கட்சியினர் கணிசமான ஸ்தானங்களைச் சட்ட

# ஆடு பத்திரம்!




அமெரிக்கா-பாகிஸ்தான் இராணுவ உதவி ஒப்பந்தத்தினால் பாகிஸ்தானுக்கே அபாயம் விளையலாம் என்று உலகெங்கும் பலர் எச்சரிக்கை செய்திருக்கிறார்கள்.

---

சபையில் பெற்றனர். அவர்கள் பெற்ற ஸ்தானங்கள் பத்தொன்பது தான் என்றாலும், அவர்கள் இன்றி வேறு எந்தக் கட்சியும் மந்திரி சபை அமைக்க முடியாத நிலைமை ஏற்பட்டது.

திருவாங்கூர் பொதுத் தேர்தலில் பிரஜா-சோஷலிஸ்ட் கட்சி இவ்வளவு பலம் அடைந்ததற்கு முக்கிய காரணமாயிருந்தவர் பழைய காங்கிரஸ் தலைவரான ஸ்ரீ பட்டம் தாணுப் பிள்ளை அவர்கள் தான். அவருடைய அமைப்புத் திறன், நிர்வாக ஆற்றல், பொது ஜனத் தொண்டினால் அவர் அடைந்திருந்த செல்வாக்கு, முன் யோசனையுடன் திட்டம் வகுக்கும் சக்தி,—ஆகிய இவ்வளவும் சேர்ந்து பிரஜா-சோஷலிஸ்டு கட்சிக்கு இவ்வளவு பலம் ஏற்படக் காரணமாயிருந்தன.

இந்தியாவில் உள்ள பெரிய அரசியல் கட்சிகளுக்குள்ளே பண வசதி கொஞ்சமும் இல்லாத கட்சி பிரஜா-சோஷலிஸ்டு கட்சிதான். அக் கட்சியின் தலைவர்கள் ஏழ்மை விரதம் கொண்டவர்கள். முதலாளிகள்—பணக்காரர்களின் ஆதரவு இல்லாதவர்கள். அக் கட்சியின் வேலைத் திட்டமே பணக்காரர்களின் ஆதரவைத் தேடித் தரக்கூடியது அல்லதானே!

இதை யெல்லாம் முன்னிட்டு, திருவாங்கூர் பிரஜா-சோஷலிஸ்டுகள் பொதுத் தேர்தலின் போது கம்யூனிஸ்டுகளுடன் ஓர் தாற்காலிக ஏற்பாடு செய்து கொண்டார்கள். காங்கிரஸ் அபேட்சகர்களை எதிர்க்க அபேட்சகர்களை நியமிக்கும் போது, சோஷலிஸ்டுகள் சில தொகுதிகளிலும் கம்யூனிஸ்டுகள் வேறு தொகுதிகளிலும் அபேட்சகர்களை நியமிக்கத் தீர்மானித்தார்கள். காங்கிரஸுக்கு எதிரான வோட்டுக்கள் சிதறிப் போகாமல் இருப்பதற்கே இந்தத் தாற்காலிக ஏற்பாட்டைச் செய்து கொண்டார்கள். இதைக்கூடப் பிரபல அகில இந்திய சோஷலிஸ்ட் தலைவர்கள் சிலர் ஒப்புக் கொள்ள வில்லை யென்பது அப்போதே வெளியாயிற்று.

தேர்தல் முடிவு தெரிந்த பின்னர் கெட்டிக்காரர்களான கம்யூனிஸ்ட் தலைவர்கள் வீண் காலம் போக்காமல் பிரஜா-சோஷலிஸ்ட் கட்சித் தலைவரான ஸ்ரீ பட்டம் தாணுப்பிள்ளை அவர்களையே, கூட்டு மந்திரி சபை அமைக்கும் நோக்கத்துடன், தங்கள் தலைவராகவும் தேர்ந்தெடுத்தார்கள்.

ஸ்ரீ பட்டம் தாணுப்பிள்ளைக்கு இது ஒரு பெரிய சோதனையாக ஏற்பட்டது. ஐம்பத்தொன்பது அங்கத்தினர் அடங்கிய கூட்டுக் கட்சிக்குத் தம்மைத் தலைவராகத் தேர்ந்தெடுத்ததும் ஸ்ரீ தாணுப் பிள்ளை பெரிய தர்ம சங்கடத்தில் அகப்பட்டுக் கொண்டார். மிகப் பெரும்பாலான அரசியல்வாதிகள் இத்தகைய நிலைமையில் "உடனே அதிகாரத்தைக் கைப் பற்றலாம்; மற்றதை யெல்லாம் பிற்பாடு பார்த்துக் கொள்ளலாம்" என்றுதான் முடிவு செய்திருப்பார்கள். ஸ்ரீ பட்டம் தாணுப் பிள்ளை அவ்வாறு முடிவு செய்வதற்கு வேண்டிய தூண்டுதல்களைக் கம்யூனிஸ்டுகள் உள்ளிட்ட ஐக்கிய இடதுசாரிக் கட்சியார் அளித்து வந்தார்கள்.

ஸ்ரீ பட்டம் தாணுப்பிள்ளைக்கு ஏற்பட்ட இத்தகைய சோதனையை அவரே சமாளித்துக் கொள்ளட்டும் என்று அகில இந்திய பிரஜா-சோஷலிஸ்ட் தலைவர்கள் சும்மா இருந்துவிடவில்லை. தேசத்தின் பொது நலத்திலும் கட்சியின் வருங் காலத்திலும் கவலை கொண்டவர்களான ஆச்சாரிய கிருபளானி, ஸ்ரீ அசோக மேத்தா, டாக்டர் லோஹியா, டாக்டர் பி. ஸி. கோஷ்

முதலியவர்கள் விரைந்து சென்னைக்கு வந்தார்கள். பிரஜா-சோஷலிஸ்ட் கட்சியின் நிர்வாகக் கூட்டத்தை நடத்தினார்கள். ஸ்ரீ பட்டம் தாணுப் பிள்ளையும் இக் கூட்டத்துக்கு வந்திருந்தார்.

அரசியல் உலகில் முதன் முதலாகப் பிரஜா-சோஷலிஸ்ட் தலைவர்களின் கூட்டம் மிக்க முக்கியத்துவத்தை அடைந்தது. இக் கூட்டத்தில் என்ன முடிவு செய்யப் போகிறார்கள் என்பதை அகில இந்தியாவும் ஆவலுடன் எதிர்பார்த்தது.

"கம்யூனிஸ்டுகளுடன் சேர்ந்து கூட்டு மந்திரி சபை அமைத்தால் என்ன மோசம் வந்துவிடும்!" என்ற மனப்பான்மையை மேற்படி கூட்டத்திற்கு வந்திருந்த பொறுப்புவாய்ந்த சோஷலிஸ்ட் தலைவர்கள் ஒப்புக் கொள்ளவில்லை.

நீர்க்கமான வாதப் பிரதிவாதங்களுக்குப் பின்னர், "பிரஜா-சோஷலிஸ்ட் கட்சி மந்திரி சபை அமைக்கும்படி அழைக்கப் பட்டால், அது ஏற்றுக் கொள்ளப்படும்" என்று ரத்தினச் சுருக்கமாகத் தீர்மானம் செய்தார்கள்.

இது தேச நன்மைக்கு உகந்த முறையில் தீர்க்க திருஷ்டியுடன் செய்யப்பட்ட தீர்மானமாகும்.

எப்படியும் அதிகாரத்தைக் கைப்பற்றினால் போதும் என்கிற மனப்பான்மை மிகுந்திருந்தால், கூட்டுச் சேர்ந்து மந்திரி சபை அமைக்கலாம் என்று தீர்மானித்திருப்பார்கள் அல்லவா!

பத்தொன்பது பேர் அடங்கிய கட்சியை மந்திரி சபை அமைக்கும்படி அழைப்பது துர்லபம் என்று தெரிந்திருந்தும், அவ்வாறு தீர்மானம் செய்தது. "பிரஜா-சோஷலிஸ்ட் கட்சிக்கு அதன் கொள்கைகளும் திட்டங்களும் முக்கியமே தவிர, மந்திரி பதவியை அடைவது முக்கியமில்லை" என்பதை வற்புறுத்தி எடுத்துக் காட்டுவதாயிற்று.

"பிரஜா — சோஷலிஸ்டுகள் கம்யூனிஸ்டுகளின் வலையில் சிக்கிவிடப் போகிறார்கள்! சிக்கி அநியாயமாய்ப் போய்விடப் போகிறார்கள்!" என்றெல்

தலைவர்கள் ஒப்புக் கொள்ளவில்லை.

நீர்க்கமான வாதப் பிரதிவாதங்களுக்குப் பின்னர், "பிரஜா-சோஷலிஸ்ட் கட்சி மந்திரி சபை அமைக்கும்படி அழைக்கப் பட்டால், அது ஏற்றுக் கொள்ளப்படும்" என்று ரத்தினச் சுருக்கமாகத் தீர்மானம் செய்தார்கள்.

இது தேச நன்மைக்கு உகந்த முறையில் தீர்க்க திருஷ்டியுடன் செய்யப்பட்ட தீர்மானமாகும்.

எப்படியும் அதிகாரத்தைக் கைப்பற்றினால் போதும் என்கிற மனப்பான்மை மிகுந்திருந்தால், கூட்டுச் சேர்ந்து மந்திரி சபை அமைக்கலாம் என்று தீர்மானித்திருப்பார்கள் அல்லவா!

பத்தொன்பது பேர் அடங்கிய கட்சியை மந்திரி சபை அமைக்கும்படி அழைப்பது துர்லபம் என்று தெரிந்திருந்தும், அவ்வாறு தீர்மானம் செய்தது. "பிரஜா-சோஷலிஸ்ட் கட்சிக்கு அதன் கொள்கைகளும் திட்டங்களும் முக்கியமே தவிர, மந்திரி பதவியை அடைவது முக்கியமில்லை" என்பதை வற்புறுத்தி எடுத்துக் காட்டுவதாயிற்று.

"பிரஜா — சோஷலிஸ்டுகள் கம்யூனிஸ்டுகளின் வலையில் சிக்கிவிடப் போகிறார்கள்! சிக்கி அநியாயமாய்ப் போய்விடப் போகிறார்கள்!" என்றெல்
லாம் பரிதாபப் பட்டுக் கொண்டிருந்தவர்கள், அவ்வாறு பரிதாபப் படவேண்டிய அவசியம் இல்லை என்று ஏற்பட்டது.

பிரஜா — சோஷலிஸ்டுகள் இவ்வாறு தங்கள் கடமையை நிறைவேற்றி, நாடெங்குமுள்ள தேச பக்தர்களின் நன்மதிப்புக்குப் பாத்திரமானார்கள்.

இதன் பயனாக, திருவாங்கூர் காங்கிரஸ் தலைவர்களுக்கு ஒரு பெரிய சோதனை ஏற்பட்டது.

"கம்யூனிஸ்டுகளிடம் அரசாங்கம் ஒருமுறை போய் விட்டால் அதோகதி தான்!" என்று சொல்லிக் கொண்டிருந்தவர்கள், இப்போது அந்த விபத்து நேராமல் தடுப்பதற்கு முன் வரப்போகிறார்களா என்ற கேள்வி எழுந்தது.

அந்தக் கேள்விக்குத் தக்க முறையில் பதில் வந்து விட்டது. திருவாங்கூர் காங்கிரஸ் தலைவர்கள் சோதனையில் தேறி விட்டார்கள்.

"நாங்கள் அதிகாரத்துக்கு வரவில்லை என்றால், தேசம் எக்கேடாவது கெட்டுப் போகட்டும்" என்ற மனப்பான்மையை அவர்கள் வெளியிட வில்லை.

"பிரஜா — சோஷலிஸ்டு கட்சியார் மந்திரி சபை அமைத்து நடத்தட்டும்; அந்த மந்திரி சபையை நாங்கள் ஆதரிக்கிறோம்" என்று தாராள மனப்பான்மையுடன் சொல்ல முன் வந்தார்கள்.

இதன் பலனாகப் பிரஜா-சோஷலிஸ்டு கட்சித் தலைவரான ஸ்ரீ பட்டம் தாணுப் பிள்ளையை ராஜப் பிரமுகர் அழைத்து மந்திரி சபையை அமைக்கும்படி கேட்டுக் கொண்டார்.

அதற்கிணங்க ஸ்ரீ பட்டம் தாணுப் பிள்ளை திருவாங்கூர் கொச்சி முதல் மந்திரியாக நியமிக்கப் பட்டதைக் குறித்து மகிழ்ச்சி அடைகிறோம். ஸ்ரீ தாணுப் பிள்ளை மற்றக் கட்சிகளின் ஒத்துழைப்புடன் நிலையான மந்திரி சபையை அமைக்க முடியும் என்ற நம்பிக்கையை வெளியிட்டுள்ளார்.

இந்தச் சுமுக மனப்பான்மையும், சிநேகச் சூழ்நிலையும் நிலைத்திருக்க வேண்டும் என்று விரும்புகிறோம். பிரஜா — சோஷலிஸ்ட் கட்சியார் தங்கள்

வர்கள் சோதனையில் தேறி விட்டார்கள்.

"நாங்கள் அதிகாரத்துக்கு வரவில்லை என்றால், தேசம் எக்கேடாவது கெட்டுப் போகட்டும்" என்ற மனப்பான்மையை அவர்கள் வெளியிட வில்லை.

"பிரஜா — சோஷலிஸ்டு கட்சியார் மந்திரி சபை அமைத்து நடத்தட்டும்; அந்த மந்திரி சபையை நாங்கள் ஆதரிக்கிறோம்" என்று தாராள மனப்பான்மையுடன் சொல்ல முன் வந்தார்கள்.

இதன் பலனாகப் பிரஜா-சோஷலிஸ்டு கட்சித் தலைவரான ஸ்ரீ பட்டம் தாணுப் பிள்ளையை ராஜப் பிரமுகர் அழைத்து மந்திரி சபையை அமைக்கும்படி கேட்டுக் கொண்டார்.

அதற்கிணங்க ஸ்ரீ பட்டம் தாணுப் பிள்ளை திருவாங்கூர் கொச்சி முதல் மந்திரியாக நியமிக்கப் பட்டதைக் குறித்து மகிழ்ச்சி அடைகிறோம். ஸ்ரீ தாணுப் பிள்ளை மற்றக் கட்சிகளின் ஒத்துழைப்புடன் நிலையான மந்திரி சபையை அமைக்க முடியும் என்ற நம்பிக்கையை வெளியிட்டுள்ளார்.

இந்தச் சுமுக மனப்பான்மையும், சிநேகச் சூழ்நிலையும் நிலைத்திருக்க வேண்டும் என்று விரும்புகிறோம். பிரஜா — சோஷலிஸ்ட் கட்சியார் தங்கள்
கொள்கைகளையும் திட்டங்களையும் காரியத்தில் நடத்திக் காட்டுவதற்கு அவகாசம் அவர்களுக்கு அளிக்கப்படும் என்று நம்புகிறோம்.

# அழியாப் பழிக்கு ஆளாக நேரும்

ஆந்திர மாகாணம் ஏற்படுவதற்காக முன்பு ஸ்வாமி சீதாராம் உண்ணாவிரதம் இருந்தார். ஆனால், இப்போது ஆந்திர மாகாணம் ஏற்

அதற்கிணங்க, மது விலக்குச் சட்டத்தை ரத்து செய்து விட வேண்டும் என்று அக்கமிட்டியார் சிபார்சு செய்துள்ளனர். மேற்படி சிபார்சுகள்

உண்ணு விரதத்தை எவ்விதத்திலும் ஆட்சே பிக்க முடியாது. அதற்கு மாறாக, அவர்கள் ராம மூர்த்தி கமிட்டியின் அறிக்கையைக் குப்பைக் கூடையில் போட்டு விட்டு, சுவாமி சீதாராம் உண்ணாவிரதத்தைக் கைவிடும்படியான முறை களை உடனடியாகக் கைக்கொள்ள வேண்டும். சுவாமி சீதாராமின் நிலைமை கவலைக்கிடமாக இருப்பதால், ஆந்திர மாகாண சர்க்கார் அவ் விஷயத்தில் சிறிதும் தாமதிக்காமல் மதுவிலக் கைத் தீவிரமாக அமுல் நடத்த முன்வர வேண்டும்.

இல்லையேல், காந்தி மகான் வகுத்த வழியி லிருந்து தவறி, மதுவிலக்கை ரத்து செய்தார்கள் என்ற அழியாப் பழிக்கு ஆந்திர சர்க்கார் தலைவர்கள் இலக்காக நேரும்.

# எகிப்து நாடகத்தின் திரை விழுந்தது!

சில தினங்களுக்கு முன் எகிப்து நாட்டிலே நாடக தோரணையில் திடீர் திடீரென்று பல சம்பவங்கள் நிகழலாயின.

எகிப்தின் தலைசிறந்த தலைவர் என்று கருதப் பட்ட ஜெனரல் நாஜீப், அவர் வகித்து வந்த ஜனாதிபதி பதவியையும், பிரதம மந்திரி பதவியை யும் திடீரென்று ராஜினாமா செய்ய நேர்ந்தது. பிறகு அவர் அவரது ஜாகையிலேயே சிறை வைக்கப்பட்டிருப்பதாயும், அவர் வீட்டைச் சுற் றித் துருப்புகள் காவல் புரிந்து வருவதாயும் பத்திரிகைச் செய்திகள் கூறின.

மறு நாள் கர்னல் நாஸிர் பிரதம மந்திரி பத வியை ஏற்றுக் கொண்டார். எகிப்தின் நலனுக்கு விரோதமாக ஜெனரல் நாஜீப் நடந்து கொண்ட தாக அவர் குற்றம் சாட்டினர். நல்ல வேளையாக அவரது ஆட்சியிலிருந்து மக்கள் காப்பாற்றப் பட்டு விட்டதாயும் குறிப்பிட்டார்.

எனவே, எகிப்தில் ஜெனரல் நாஜீபின் செல் வாக்கு அஸ்தமித்து விட்டதாக உலகம் கருதியது.

ஆனல், அதற்கு மறுதினம் அதாவது சில மணி நேரத்தில் எகிப்து அரசியல் மேடையில் மற் றொரு அதிசயக் காட்சி ஆரம்பமாயிற்று.

கைது செய்யப்பட்ட ஜெனரல் நாஜீப் இழந்த ஜனாதிபதி பதவியை மறுபடியும் ஏற்றுக் கொண் டார். எகிப்தில் நடந்த மேற்படி சம்பவங்கள் எல்லாம் வெறும் குடும்பச் சண்டை என்று நாஜீப் சமாதானம் கூறினர்.

நாலு ஐந்து நாட்கள் கழித்து கர்னல் நாஸிர் எகிப்தின் இராணுவ கவர்னர் பதவியை ஏற்றுக் கொண்டிருப்பதாக ஒரு செய்தி கூறியது.

கடைசியாக ஜெனரல் நாஜீப் மறுபடியும் முன்பு இருந்ததைக் காட்டிலும் அதிக அதிகாரங் களுடன் எகிப்தின் ஜனாதிபதியாகவும் பிரதம மந்திரியாகவும் பதவி ஏற்றுக் கொண்டு விட்ட தாக, அதாவது தற்காலிகமாக எகிப்தின் சர்வாதி காரியாகி விட்டதாகச் செய்திகள் வெளியாயின.

அதன் பின் கர்னல் நாஸிர் அரசியலிலிருந்து விலகி ஓய்வு எடுத்துக் கொள்ளலாம் என்று பிறகு வந்த கெய்ரோச் செய்தி அறிவித்தது.

* * *

எகிப்தில் மின்னல் வேகத்தில் இத்தகைய மாறுதல்கள் ஏற்பட்டது இதுமுதல்தடவையல்ல.

சில மாதங்களுக்கு முன் பண்டித ஜவாஹர்லால் நேரு லண்டனுக்குச் சென்றிருந்தபோது எகிப்தில் இரண்டொரு தினங்கள் தங்கினர். அப்போது அந்த நாடு முடியரசாக இருந்தது.

சில தினங்களுக்குப் பின் அவர் லண்டனிலிருந்து திரும்பி வரும்போதும் எகிப்தில் தங்கினர். ஆனல் அப்போது, அந்த நாடு குடியரசாக மாறியிருந்தது!

எகிப்து இராணுவம் இரு கட்சிகளாகப் பிரிந்து நின்றதே, எகிப்தில் ஏற்பட்ட அரசியல் சூறா வளிக்குக் காரணம் என்று தெரிகிறது. ஜெனரல் நாஜீபை ஆதரித்து நின்ற படைப் பிரிவினரிடம் தாம் வெற்றி பெற முடியாது என்பதை உணர்ந்த கர்னல் நாஸிர் புத்திசாலித்தனமாகப் பணிந்து விட்டார். இல்லாவிடில் அங்கு கோரமான உள் நாட்டு யுத்தமே ஆரம்பமாகி யிருக்கலாம்.

"ஜெனரல் நாஜீப் மறுபடியும் சகல அதிகாரங் களுடனும் ஜனாதிபதி, பிரதம மந்திரி, எகிப்து இராணுவ கவர்னர் பதவிகளை ஏற்றுக் கொண்டு விட்டார்; கர்னல் நாஸிர் இப்போது உதவி பிரதம மந்திரியாக இருக்கிறர். இத்துடன் எகிப்து நாடகத்தின் திரை விழுகிறது" என்று இப்போது கிடைத்துள்ள செய்தி கூறுகிறது.

ஜனநாயக முறைக்கு முற்றிலும் விரோதமான பதவிப் போட்டியும் பலப் பரீட்சையும் ஒரு நாட்டை எவ்வளவு அல்லோல கல்லோலப் படுத்துகின்றன என்பதற்கு எகிப்து அரசியல் நாடகம் தருந்த சான்று ஆகும்.

# சென்னையில் பிரஜா-சோஷலிஸ்ட் தலைவர்கள்

அகில இந்திய பிரஜா - சோஷலிஸ்ட் கட்சியின் தலைவர்கள் மேற்படி கட்சியின் மத்திய நிர்வாகக் கமிட்டிக் கூட்டத்தை முன்னிட்டுச் சென்ற வாரம் சென்னைக்கு விஜயம் செய்திருந்தார்கள். காந்தி நகரில் "கல்கி" ஆசிரியர், அவர்களுக்கு அளித்த வரவேற்பில் கலந்து கொண்டு சிறப்பித்த வர்களில் சிலரை எதிரேயுள்ள படங்களில் காணலாம்.

1. ஆச்சாரிய கிருபளானியின் முகம் அன்றலர்ந்த செந்தாமரை போல் விளங்குவதில் ஆச்சரியம் இல்லை! அவருக்குப் பின்னல் அடக்கமாகக் குனிந்த தலையுடன் நடந்து வருகிறவரைக் கவனித்துக் கொள்ளுங்கள். அவர் திருவாங்கூரில் தமிழர் வாழும் பிரதேசத்தில் தி. த. நா. கா. அபேட்சகரை எதிர்த்து வெற்றி பெற்ற பிரஜா - சோஷலிஸ்ட் ஸ்ரீ டி. எஸ். ராமசாமிப் பிள்ளை; கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையின் நெருங்கிய உறவினர்.

2. ஸ்ரீ அசோக மேத்தாவின் முகத்தில் தாடி வளருகிறது; அவருடைய அகத்தில் எத்தனை எத்தனையோ சிந்தனைகள் வளருகின்றன.

3. திருவாங்கூர் பிரஜா - சோஷலிஸ்ட் தலைவருக்குக் "கல்கி" ஆசிரியர் வாழ்த்துக் கூறி வரவேற்கிறர்.

4. ஸ்ரீ பட்டம் தாணுப் பிள்ளை இப்போது சண்டைக்குத் தயாராகவில்லை; சாப்பாட்டுக் குத்தான் தயாராகிறர்!

5. வலது கோடியில் மேற்கு வங்காளத்தின் மாஜி காங்கிரஸ் பிரதமரும், தற்போது பிரஜா - சோஷலிஸ்ட் தலைவருமான டாக்டர் பி. ஸி. கோஷ் அவர்கள்.

# தீரர் தொண்டமான்

—கொழும்பு, மார்ச்சீ 13உ

இலங்கை இந்தியர்களின் நம்பிக்கைக்கும் நன்றிக்கும் தலைவர் ஸ்ரீ எஸ். தொண்டமான் எவ்வளவு தூரம் பாத்திரமாகி யிருக்கிறாரென்பதற்குக் காங்கிரஸ் தலைமைப் பதவியை மீண்டும் ஏக மனதாக அவருக்கு அளித்திருப்பது ஒரு அத்தாட்சி. தலைமைப் பதவிக்கு அபேட்சகர்களின் நியமனப் பத்திரங்களைத் தாக்கல் செய்ய வேண்டிய கடைசித் தினத்தில் ஸ்ரீ தொண்டமான் ஒருவருடைய பெயரைத் தவிர எவருடைய பெயரும் பிரேரேபிக்கப்படவில்லை. நெருக்கடியான சென்ற இரு வருடங்களிலும் திறமையுடன் தலைமை தாங்கிய ஸ்ரீ தொண்டமான் சோதனைகள் மலிந்திருக்கப் போகும் அடுத்த ஆண்டிலும் தலைமைப் பீடத்திலிருக்க வேண்டு மென மக்கள் ஏக மனதாகக் கூறியது பெரிதல்ல; அடுத்து நிகழப் போகும் சம்பவங்களையும் அவற்றைச் சமாளிக்க வேண்டிய பொறுப்புகளையும் உணர்ந்து ஸ்ரீ தொண்டமான் இன்னொரு வருடம் தலைமை வகிக்கச் சம்மதித்ததுதான் பெரிய காரியம்.



ஸ்ரீ தொண்டமான்

1945-ம் வருடம் முதல் 1947-ம் வருடம் வரை மூன்று வருட காலம் காங்கிரஸ் தலைவராயிருந்த ஸ்ரீ தொண்டமான் 1952-ம் வருட பிற்பகுதியில் ஸ்ரீபெரிசுந்திரம் சுகவீனம் காரணமாகத் தலைமைப் பதவியைத் துறந்த பொழுது மீண்டும் தலைவரானார். 1953-ம் ஆண்டிலும் தலைமைப் பொறுப்புகளை ஸ்ரீ தொண்டமான் மீது சுமத்தினார்கள். பல தோட்டங்களுக்குச் சொந்தக்காரரான இம் மனிதர் குஷாலாக மற்ற பணக்காரப் பெரிய மனிதர்களைப் போல ஒதுங்கி நிற்காமல் எதற்காக அரசியலில் மாட்டிக் கொண்டு அவதிப்பட வேண்டு மென்பது பல சிங்கள ராஜ தந்திரிகளுக்கு ஒரு விளங்காத புதிர். ஆனால் தோட்டத் தொழிலாளர்களோ ஸ்ரீ தொண்டமானை ஒரு தோட்ட முதலாளியாக நினைப்பதேயில்லை. காரணம் எளிய உடையணிந்து தொழிலாளரோடு தொழிலாளராக அவர் நெருங்கிப் பழகுவதுதான். இவ்வாரம் ஸ்ரீ தொண்டமான் பிரதம மந்திரி ஸர் ஜான் கொத்தலாவலையை உண்ணாவிரத மிருக்கும் ஒரு சிங்களத் தொழிலாளியின் சார்பாகக் கண்டு பேசிய பொழுது "லக்ஷாதிபதியான ஒரு மனிதர் பிக்ஷாண்டியின் சார்பாகப் பேச வந்திருப்பது விசித்திரமல்லவா!" என்றாராம் தோட்ட முதலாளியாகிய பிரதம மந்திரி!

ஏழை எளிய மக்களிடம் அனுதாபமும் இரக்க குணமும், தான தர்மங்களில் ஆசையும், மக்களுக்குச் சேவை புரிவதில் ஒரு பித்தும் கொண்ட ஸ்ரீ தொண்டமான் சென்ற சத்தியாக்கிரகத்தின் பொழுது அடிபட்டார்; அல்லல்பட்டார்! சோறு தண்ணீரில்லாமல் போலீஸ் 'வானில்' பல மணி நேரம் அடைபட்டுக் கிடந்தார். அதே போன்ற கஷ்ட நஷ்டங்களை முகமலர்ச்சியுடன் வரவேற்பதற்குத் தயாராக இப்பொழுது மீண்டும் தலைமைப் பதவியை ஏற்றுக் கொண்டிருக்கிறார். அவருக்குத் தீர்க்காயுளையும் மனோதிடத்தையும் கொடுத்து நல்வழி காட்ட வேண்டியது திக்கற்ற மக்களின் ஆபத்பாந்தவனாகிய ஆண்டவனின் பொறுப்பு.

## கம்பளை மகாநாடு

ஏப்ரல் 23, 24, 25ம் தேதிகளில் காங்கிரஸின் வருடாந்திர மகாநாடு கம்பளையில் நடைபெறுவதாயிருந்தது. ஆனால் நேருஜி 27-ம் தேதிக்கு இலங்கைக்கு வருவதையும், தமக்கு வசதிப்படும் தேதியில் மகாநாடு நடந்தால் மகாநாட்டில் பேசுவதாயும் தெரிவித்திருப்பதை முன்னிட்டுக் கம்பளை மகாநாட்டை மே முதல் தேதிக்கு ஒத்திவைக்க உத்தேசித்திருக்கிறார்கள். இலங்கை இந்தியர்களுக்காக இந்த மத்திய ஸ்தாபனத்தை நேருஜிதான் 1939-ம் வருடம் அங்குரார்ப்பணம் செய்து வைத்தார். 15 வருடங்களுக்குப் பின் இப்பொழுது மீண்டும் தோட்டத் தொழிலாளரை அவர் சந்தித்துப் பேசுகிறார். டில்லி ஒப்பந்தத்தைப் பற்றிப் பல தவறான அபிப்பிராயங்கள் நிலவும் இச்சமயத்தில் நேருஜியே தொழிலாளர் மத்தியில் நேரில் பேச விருப்பது விசேஷ முக்கியத்துவம் வாய்ந்தது.

## ஒரு பரபரப்பான சம்பவம்

இவ்வாரம் இலங்கை இந்தியர்களுக்கு மிகுந்த கவலையை அளிக்கக் கூடிய ஒரு பரபரப்பான சம்பவம் ரத்மலானை விமான நிலையத்தில் நடந்தது. ஏற்கனவே இலங்கைப் பிரஜைகளாகி யிருப்பவர்களை மட்டுமே அரசாங்க உத்தியோகங்களில் இனி நியமிக்க வேண்டு மென்று நிதி இலாகா பிறப்பித்துள்ள ஒரு உத்தரவை, விமான நிலையத்திலுள்ள மராமத்து இலாகா அதிகாரி யொருவர் தவறாக அர்த்தம் செய்து கொண்டு சுமார் 70 இந்தியர்களை வேலை நீக்கம் செய்யப் போவதாக அறிவித்தார். இந்த 70 இந்தியர்களும் பல வருட காலமாக அங்கு வேலை செய்பவர்கள். இலங்கைப் பிரஜா உரிமை பெறாவிட்டாலும் அவர்கள் இந்தியப் பிரஜைகளில்லை. ராஜ்யமற்றவர்களின் நிலைமையில் எவ்வித மாறுதலும் செய்யக்கூடாதென்பதுதான் டில்லி ஒப்பந்த உடன்பாடென்றும் அதற்கு மாறாக வேலை நீக்க நடவடிக்கைகளில் இறங்குவது ஒப்பந்தத்தை மீறுவதாகு மென்றும் இ. இ. கா. தலைவர்கள் கூப்பாடு போட்டதற் கிணங்க, அந்தத் தொழிலாளர்கள் வேலை நீக்கம் செய்யப்பட மாட்டார்களென்று அரசாங்கம் உறுதி கூறியிருக்கிறது. —ரஜனி.




## அத்தியாயம் 80

# நிலமகள் காதலன்

இளவரசிகள் வீற்றிருந்த பல்லக்கைப் பொன்னியின் செல்வரின் குதிரை நெருங்கியது.

சற்றுப் பின்னால் குதிரையை நிறுத்திய வந்தியத் தேவன், "ஜாக்கிரதை! இளவரசிகளின் அந்தப் பொல்லாத பல்லக்கு நம் சாதுக் குதிரையை மோதி விடப் போகிறது!" என்றான்.

கிட்டத் தட்ட அதே இடத்தில் முன்னொரு தடவை நந்தினியின் மூடு பல்லக்கின் மீது அவன் குதிரையைக் கொண்டு போய் மோதிவிட்டுக் "குதிரையைப் பல்லக்கு மோதுகிறது!" என்று கூக்குரலிட்டது அவனுக்கு நினைவு வந்தது. அச் சம்பவம் நடந்து ஆறு மாதம்கூட முழுமையாக ஆக வில்லை. ஆனால் இந்தச் சிறிய காலத்துக்குள் எத்தனை எத்தனை முக்கியமான நிகழ்ச்சிகள் நடந்தேறி விட்டன!

குந்தவை வந்தியத் தேவனுடைய வார்த்தைகளினால் ஏற்பட்ட பூரிப்பை அடக்கிக் கொண்டு, "தம்பி! உங்களைப் பார்த்தால் ஏதோ குதூகலமான விஷயத்தைப் பற்றிப் பேசிக் கொண்டு வருவதாகத் தோன்றுகிறதே! உங்களுடைய திரு முகங்கள் அவ்வளவு மலர்ச்சியுடன் விளங்குகின்றன!" என்றாள்.

"ஆம், அக்கா! குதூகலமான விஷயம் பற்றித்தான் பேசிக் கொண்டு வந்தோம். ஆனால் அது உன் தோழி வானதிக்கு அவ்வளவு குதூகலம் தராது. என்னுடைய திருமண நாள் நெருங்கி வந்து கொண்டிருக்கிறதல்லவா? நான் காதல் கொண்டு மணந்து கொள்ளப் போகும் மங்கையைப் பார்த்து மகிழ்ந்தோம். அவளுடைய ரூப லாவண்யங்களைப் பற்றிப் பேசிக் கொண்டு வருகிறோம்!" என்றார் பொன்னியின் செல்வர்.

சற்று முன் பிரகாசமாக விளங்கிய அந்த இரு பெண்களின் முகங்களும் உடனே வாட்டமுற்றன. வானதி தலையைக் குனிந்து கொண்டாள். குந்தவையின் முகத்தில் கோபம், வியப்பு, ஐயம், ஆத்திரம் முதலிய வெவ்வேறு பாவங்கள் தோன்றி மறைந்தன.

"இது என்ன வெட்கமற்ற பேச்சு? இந்தப் பெண்ணின் மனத்தை வருத்தப் படுத்துவதில் உனக்கு என்ன சந்தோஷம்?" என்றாள்.

வானதி குனிந்த தலையை நிமிர்த்திக் குந்தவையைப் பார்த்து, "அக்கா! இது என்ன வார்த்தை? எனக்கு எதற்காக வருத்தம்?" என்றாள்.

ஒன்றுக்கும் மறுமொழி சொல்லாமல் பொன்னியின் செல்வர் புன்னகை பூத்த முகத்துடன் நிற்பதைக் கண்ட இளைய பிராட்டி "கொள்ளிடக் கரைக்கல்லவா போய்த் திரும்புகிறீர்கள்? அங்கே எந்தப் பெண்ணைப் பார்த்தீர்கள்? எந்த ஊர்? என்ன பேர்? என்ன குலம்?" என்று கேட்டுக் கொண்டே போனாள்.

இப்போது வந்தியத் தேவன் குறுக்கிட்டு, "தேவி! இளவரசர் மணக்கப் போகும் குலமகள் யாரையும் நாங்கள் பார்த்துவிட்டு வரவில்லை. இந்தப் பஞ்ச நதி தீரத்தில் பொலிந்து விளங்கும் நில மாமகளைத்தான் நெடுகிலும் பார்த்து வியந்து கொண்டு வந்தோம். சோழ வள நாட்டின் இயற்கை அழகுகளைப் பற்றிப் பேசிக் கொண்டு வந்தோம். இளவரசர் இந்த அழகிய நாட்டின் சக்கரவர்த்தியாக முடிசூட்டிக் கொள்ளும் நாள் நெருங்கி வருகிறதல்லவா? இவர் இந்த இரு நில மடந்தையின் பேரில் கொண்ட காதலைப் பற்றித்தான் குறிப்பிட்டார்!" என்றான்.

"ஆகா! என் சகோதரனுக்கு இப்படியெல்லாம் விகசிதமாகப் பேச முன்னெல்லாம் தெரிந்திருக்க வில்லை. அவனுக்குத் தாங்கள் கற்றுக் கொடுத்திருக்கிறீர்கள் போலிருக்கிறது!" என்றாள்.

அருள்மொழிவர்மர் சிரித்து விட்டு, "நண்பரே! தங்களுக்கு நன்றாக வேண்டும்! தங்களுடைய சிநேகத்துக்குப் பிறகு எனக்குத் தந்திர மந்திரமெல்லாம் வந்திருக்கிறது என்று முன்னமே நான் சொல்ல வில்லையா? என் தமக்கையாருக்கும் அவ்விதமே தோன்றி யிருக்கிறது, பாருங்கள்!" என்றார்.

"இது என்ன வீண் பழி! தமக்கையும் தம்பியும் ஒத்துப்பேசிக்கொண்டதுபோல் ஒரே மாதிரி என்பேரில் குற்றம் சுமத்துகிறீர்களே?" என்றான் வந்தியத்தேவன்.

"இன்னும் தங்கள் பேரில் பல குற்றங்கள் இருக்கின்றன. என் தம்பி சொல்லி யிருக்க முடியாத குற்றங்களும் இருக்கின்றன. அவற்றை யெல்லாம் நடுச் சாலையில் நின்று சொல்ல முடியாது!" என்றாள் குந்தவை.

வந்தியத் தேவன், "நான் சந்தேகித்தது சரியாய்ப் போய்விட்டது!" என்றான்.

"என்ன சந்தேகித்தீர்கள்?"

"என்னை ஈழ நாட்டுப் படைக்குச் சேனாதிபதியாக்கி அனுப்புவது என் குற்றங்களுக்காக எனக்குத் தீவாந்தர சிட்சை விதிப்பதே யாகும் என்று சந்தேகித்தேன்."

"பார்த்தீர்களா, அக்கா! சோழகுலத்தாரின் நன்றியறிதலில் இவருக்கு எவ்வளவு நம்பிக்கை இருக்கிறது என்று தெரிகிறது அல்லவா?"

"நமக்கு இவரிடம் நன்றி சிறிதும் இல்லை என்பது உண்மைதான்!"

"இது என்ன, நீங்களும் இப்படிச் சொல்லுகிறீர்களே?"

"அன்னியர்கள் செய்யும் உதவிக்கு நன்றி செலுத்தலாம். நண்பர்களுக்குள் நன்றி எப்படி ஏற்படும்? திருவள்ளுவர் சொல்லி யிருப்பது ஞாபக மில்லையா? 'உடுக்கை இழந்தவன் கைபோல் இடுக்கண் களைவதாம் நட்பு!' நழுவிய உடையை எடுத்துக் கட்டி விட்டதற்காக இடை கைக்கு நன்றி செலுத்த வேணுமா?" என்றாள் குந்தவை.

"தேவி! நன்றி செலுத்த வேண்டியதே யில்லை. தண்டனை விதிக்காமலிருந்தால், அதுவே பெரிய நன்றியாகும்!"

"தம்பி! நீயும் சரி, இவரும் சரி, ஒன்று நினைவு வைத்துக் கொள்ளுங்கள். இவரை எனக்கு உதவியா யிருக்கும்படியாக நம் தமையன், வீர சொர்க்கம் எய்திய கரிகாலன், அனுப்பி வைத்தான். அந்தக் கடமையிலிருந்து இவரை நான் இன்னும் விடுதலை செய்து விடவில்லை!" என்றாள் குந்தவை.

"இவருக்கு விடுதலை தரவே வேண்டாம், அக்கா! ஆயுள் தண்டனையாகவே அளித்தாலும் எனக்குச் சம்மதந்தான்!" என்றார் இளவரசர்.

"இலங்கையில் இவரால் எனக்கு ஆக வேண்டிய காரியங்கள் சில இருக்கின்றன" என்றாள் குந்தவை.

"போவதற்கு முன்னால் தங்களிடம் விடை பெற்றுச் செல்வேன், தேவி!" என்றான் வந்தியத் தேவன்.

"அப்படியானால், பழையாறைக்குத் தாங்கள் வந்து என்னிடம் விடை பெறும்படி இருக்கும்" என்றாள் குந்தவைப் பிராட்டி.

"அக்கா! இப்போது எங்கே புறப்பட்டீர்கள்?" என்று அருள்மொழிவர்மர் சிறிது வியப்புடன் கேட்டார்.

"திருவையாற்றுக்குப் போகிறோம். இன்று மார்கழித் திருவாதிரைத் திருநாள் அல்லவா? செம்பியன் மாதேவியும் மதுராந்தகரும் பூங்குழலியும் காலையிலேயே சென்றார்கள். நீங்களும் வருகிறீர்களா?" என்றாள் குந்தவை.

"இல்லை; நாங்கள் இப்போது வரவில்லை. திருவையாறு நகருக்குள் போகக் கூடாதென்றுதான் ஆற்றங் கரையோடு மேற்கே சென்று திரும்பி வந்தோம்."

"அப்பர் பெருமான் திருவையாற்றில் கைலாசத்தையே கண்டு பரவசமடைந்தார். உங்களுக்கு அங்கே போகவே பிடிக்கவில்லை போலிருக்கிறது. ஒரு

வேளை நீங்களும் வீர வைஷ்ணவர்கள் ஆகி விட்டீர்களா, என்ன?''

''அப்படி யெல்லாம் ஒன்றுமில்லை. திருவையாறு சென்றால், அப்பர் பெருமானைப்போல் அங்கே போக வேண்டுமென்பது என் எண்ணம்.''

''அப்பர் எப்படிச் சென்றார்?''

''அவருடைய பாடலிலேயே சொல்லியிருக்கிறாரே! 'யாதும் சுவடுபடாமல்' சென்றார். ஆடம்பரம் எதுவுமில்லாமல், தாம் திருநாவுக்கரசர் என்பதைக் காட்டிக் கொள்ளாமல், பூஜைக்காகப் புஷ்பமும் நீரும் கொண்டு சென்ற அடியார் கூட்டத்தின் பின்னால் சென்றார். அதனால் திருவையாற்றில் கைலாசத்தையே அவர் காண முடிந்தது. நாம் அங்கே இந்த இராஜரீக ஆடம்பரங்களுடன் சென்றால், நாமும் இறைவனைத் தரிசிக்க முடியாது; ஜனங்களும் சுவாமி தரிசனத்தை மறந்துவிட்டு நம்மைச் சுற்றிச் சூழ்ந்து கொண்டு நிற்பார்கள்!......''

''ஆமாம், ஆமாம்! உன்னுடைய ஜாதக விசேஷம் அப்படி! உன்னைக் கண்டதும் மக்கள் சூழ்ந்து கொண்டு 'மன்னர் மன்னருக்கு ஜே! பொன்னியின் செல்வருக்கு ஜே!' என்று கோஷமிடத் தொடங்குவார்கள். ஆனால் எங்களுக்கு அவ்வளவு அபாயம் இல்லை. மேலும் நாங்கள் ஜனக் கூட்டத்துக்கு மத்தியில் போகவும் மாட்டோம். திருவாதிரைத் திருநாளுக்காகச் சுவாமி எழுந்தருளல் நடக்கும்போது, திருவையாற்றிலுள்ள நம் அரண்மனை மேல் மாடத்திலிருந்தே ஐயாறுடை இறைவனைத் தரிசித்துக் கொள்வோம்.''

''அக்கா! ஒரு பழம் பாடல் நினைவு இருக்கிறதா? அண்ட சராசரங்களையும், அகில புவனங்களையும், ஆகாச வெளியிலுள்ள எல்லா நட்சத்திரங்களையும் படைத்தவர் இறைவன். அவரை 'ஆதிரையான்' என்றும், 'திருவாதிரை நட்சத்திரத்துக்கு மட்டும் உரியவன்' என்றும் மக்கள் கருதுவது என்ன பேதைமை?–இப்படிப்பட்ட கருத்துள்ள அந்தப் பாடல் தங்களுக்கு நினைவு இருக்கிறதா?''

''நினைவிருக்கிறது, தம்பி! ஆனால் எல்லா நட்சத்திரங்களுக்கும் உரியவன் திருவாதிரைக்கும் உரியவன்தானே?''

''சரி, நீங்கள் போய் வாருங்கள்! எப்போது தஞ்சைக்குத் திரும்பிவருவீர்கள்?''

''தஞ்சைக்கு இப்போது நாங்கள் திரும்பப் போவதில்லை. திருவையாற்றிலிருந்து பழையாறை போகிறோம்.''

''என்ன, என்ன? என்னுடைய மகுடாபிஷேகத்துக்கு இல்லாமலா போகிறீர்கள்?'' என்றார் இளவரசர்.

''ஆம், ஆம்! உன்னுடைய மகுடாபிஷேக வைபவத்தில் எனக்கும் வானதிக்கும் என்ன வேலை?''

''அக்கா! தாங்கள் இல்லாமல் என்னுடைய பட்டாபிஷேகம் நடைபெறாது!''

''எல்லாம் நடைபெறும். ஏன் நடைபெறாது? பட்டாபிஷேகத்துக்கு நாள் வைத்துக் கொடுத்தவர் யார்? இராமருடைய பட்டாபிஷேகத்துக்கு நாள் பார்த்துச் சொன்னவரின் சந்ததியில் வந்தவர் அல்லவே?''

''எனக்கு நாள் நட்சத்திரம், சோதிடம்–ஆருடம் எதிலும் நம்பிக்கை இல்லை, அக்கா! நம் கடமையைச் செய்யும் எல்லா நாளும் நல்ல நாள்தான்; சோம்பியிருக்கும் நாட்களே கெட்ட நாட்கள்!'' என்றார் பொன்னியின் செல்வர்.

''உன்னுடைய வாழ் நாட்கள் எல்லாம் அத்தகைய நல்ல நாட்களாகவே இருக்கட்டும், தம்பி! நாங்கள் சென்று ஐயாறப்பரிடமும் அறம் வளர்த்த நாயகியிடமும் உனக்காகப் பிரார்த்தனை செய்கிறோம்!'' என்றாள் குந்தவை.

''எனக்காக என்ன பிரார்த்தனை செய்யப் போகிறீர்கள்?''

''நிலமகள் மேல் நீ கொண்டிருக்கும் காதல் பூர்த்தியாகட்டும்; உன் மகுடாபிஷேகம் விக்கினமின்றி நடைபெறட்டும் என்று ஐயாறுடைய இறைவரிடம் பிரார்த்திக்கிறோம். உன் உள்ளம் சோழர் தொல் குடிக்கு உரிய அற வழியிலிருந்து விலகாமலிருக்கட்டும் என்று அறம் வளர்த்த நாயகியின் சந்நிதியில் பிரார்த்தித்துக் கொள்கிறோம்.''

''அப்படியானால், நீங்கள் எனது பட்டாபிஷேகத்துக்கு நிச்சயமாக இருக்கப் போவதில்லையா?''

''பழையாறையிலிருந்து அகக் கண்ணால் கண்டு மகிழ்கிறோம்.''

''அக்கா! தாங்கள் இந்தக் கொடும்பாளூர்க் கோமகளின் பிடிவாதத்துக்குச் சப்பைக் கட்டுக் கட்டுகிறீர்கள். இவள் என்னுடன் சோழ சிங்காதனம் ஏறுவதற்கு மறுத்தால், உலகமே அஸ்தமித்து விடும் என்று எண்ணுகிறாள். இவளுடைய வீண் பிடிவாதம் விபரீதத்தில் முடியப் போகிறது. இவளுக்குப் பதிலாகச் சோழரின் சிங்காதனத்தில்

வேறொரு பெண் அமர்ந்துவிடப் போகிறாள்! அப்புறம் என்பேரில் குற்றம் சொல்லிப் பயன் ஒன்றுமில்லை" என்றார் இளவரசர் பொன்னியின் செல்வர்.

"நான் இவர் மீது என்றும் குற்றம் சொன்னதில்லை; இனிமேலும் குற்றம் சொல்லப் போவதில்லை, அக்கா!" என்றாள் கொடும்பாளூர் இளவரசி.

"நீ சொன்னாலும் பயனில்லை, வானதி! மண்ணாசை கொண்டவர்களின் காதில் வேறு எதுவும் ஏறாது!" என்றாள் இளைய பிராட்டி குந்தவை.

"இந்த மண்ணாசையை என் மனத்தில் உண்டாக்கியவர் தாங்கள்தான் என்பதை மறந்துவிட வேண்டாம். பெண்ணாய்ப் பிறந்த தாங்களே இந்த அழகிய சோழநாட்டை விட்டுப் போக மனம்வரவில்லை யென்றும், அதற்காகவே கலியாணம் செய்து கொள்ளப் போவதில்லை யென்றும் பலமுறை என்னிடம் சொன்னதில்லையா?" என்றார் அருள்மொழி.

"அப்போதெல்லாம் என் வார்த்தைகள் உன் காதில் ஏறவே இல்லை. உலகத்தில் இன்னும் எத்தனையோ அழகிய நாடுகள் இருக்கின்றன என்று சொல்லி வந்தாய்! இந்த வாணர் குலத்து வீரரின் போதனை தான் உன்னை இப்படி நிலமடந்தையின் காதலன் ஆக்கி விட்டது!" என்றாள் குந்தவைப் பிராட்டி.

"தெய்வமே! அந்தப் பழியும் என் பேரிலேதானா வந்து விழ வேண்டும்?" என்றான் வந்தியத் தேவன்.

"எவ்வளவோ பெரிய பயங்கரமான பழியைச் சுமந்தீர்களே? இந்தச் சிறிய பழிகளுக்கா பயந்துவிடப் போகிறீர்கள்? தம்பி! வெகு நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டோம்! சுவாமி எழுந்தருளும் நேரம் நெருங்கி விட்டது! போகிறோம்!" என்று கூறிக் குந்தவை தேவி சிவிகையாளருக்குச் சமிக்ஞைசெய்தாள்.

பல்லக்கு மேலே சென்றது.

சிறிதுநேரம் அங்கேயே நின்று பார்த்துக் கொண்டிருந்து விட்டுப் பொன்னியின் செல்வரும் தஞ்சையை நோக்கிக் குதிரையைச் செலுத்தினார்.

சற்றுத் தூரம் சென்றதும் பக்கத்தில் நெருங்கி வந்து கொண்டிருந்த வந்தியத் தேவனை நோக்கி, "நண்பரே! இந்தப் பெண்மணிகள் உண்மையில் சுவாமி தரிசனத்துக்குப் போகிறதாக எனக்குத் தோன்றவில்லை. குடந்தை சோதிடர் இப்போது திருவையாற்றுக்கு அருகில் குடி வந்து விட்டாராம்! அவரைப் பார்த்துச் சோதிடம் கேட்பதற்காகவே போகிறார்கள்!" என்றார்.

"ஐயா! குடந்தை சோதிடரை விடத் தாங்களே பெரிய சோதிடரா யிருக்கிறீர்களே!" என்றான் வந்தியத் தேவன்.

## அத்தியாயம் 81

# பூனையும் கிளியும்

பொன்னியின் செல்வர் ஊகித்து ஆருடம் கூறிய வண்ணமே நடந்தது.

குந்தவை தேவியும் வானதியும் திருவையாற்றிலிருந்த சோழ மாளிகை போய்ச் சேர்ந்ததும், அங்கேயே பல்லக்கையும் பரிவாரங்களையும் நிறுத்தினார்கள். செம்பியன்மா தேவியும் அவருடைய மகனும் மருமகளும் கோயிலுக்குச் சென்றிருப்பதைத் தெரிந்து கொண்டார்கள். தாங்களும் கோயிலுக்குப் போவதாக மாளிகைக் காவலர்களிடம் சொல்லி விட்டு, ஒரே ஒரு வீரனை மட்டும் துணைக்கு அழைத்துக் கொண்டு சோதிடர் வீட்டைத் தேடிச் சென்றார்கள்.

ஆம்; குடந்தை சோதிடர் அந்தே வெள்ளத்தில் தமது வீடு அடித்துக் கொண்டு போகப்பட்ட பிறகு திருவையாற்றுக்கு வந்து விட்டார். நகரின் கிழக்கு ஓரத்தில் காவேரிக் கரையில் சிறிய வீடு ஒன்று கட்டிக் கொண்டு அங்கே குடியிருக்கத் தொடங்கினார்.

இனிமேல் பழையாறை நகரைக் காட்டிலும் தஞ்சாவூர் அதிக முக்கியத்துவம் பெறலாம் என்று அவர் ஜோசியத்தின் மூலம் அறிந்து கொண்டதும், ஒரு வேளை அவர் திருவையாற்றுக்கு வந்து குடியேறியதற்குக் காரணமா யிருக்கலாம்.

ஜோசியர் வீட்டின் வாசற்படியில் அவர்கள் பிரவேசிக்கும்போதே, உள்ளே யிருந்து மிக இனிய மழலைக் குரலில், "வாருங்கள், ஆடலரசிகளே வாருங்கள்! நடன ராணிகளே, வாருங்கள்!" என்று யாரோ வரவேற்றதைக் கேட்டுத் தேவிமார்கள் இருவரும் வியப்படைந்தார்கள். முன்னே ஒரு முரட்டுச் சீடனைக் காவற்காரனாக வைத்திருந்தவர் இப்போது இப்படிப் பரிந்து உபசரித்து அழைப்பதற்கு

யாரை அமர்த்தியிருக்கிறார் என்ற எண்ணத்துடன் உள்ளே பிரவேசித்தார்கள்.

கூரையிலிருந்து தொங்கிய கூண்டில் அழகிய பச்சைக் கிளி ஒன்றைக் கண்டதும் அவர்களுடைய வியப்பு நீங்கியது. அந்தப் பச்சைக் கிளியும் தலையை இப்படியும் அப்படியும் அசைத்து, குன்றுமணி போன்ற அதன் சிறிய கண்களால் அவர்களை உற்றுப் பார்த்து விட்டு, மறுபடியும், "வாருங்கள், ஆடல் அரசிகளே, வாருங்கள்!" என்றது.

கிளியின் குரலையும் பெண்மணிகளின் பாதச் சிலம்பின் ஒலியையும் கேட்டு விட்டுச் சோதிடரும் உள்ளேயிருந்து கூடத்துக்கு வந்தார்.

தேவிமார்களைப் பார்த்துத் திடுக்கிட்டவராய், "வாருங்கள்! தேவிமார்களே! வாருங்கள்! இந்தக் குடிசை இன்றைக்குத்தான் பாக்கியம் செய்தது!" என்றார்.

பச்சைக் கிளியும் தன் பவள வாயைத் திறந்து "இந்தக் குடிசை இன்றைக்குத்தான் பாக்கியம் செய்தது!" என்றது.

சோதிடர் அதைப் பார்த்து, "சீச்சீ! சற்று நேரம் சும்மா இரு! வாயை மூடிக் கொள்!" என்றார்.

"ஐயா! அதை ஏன் கோபித்துக் கொள்கிறீர்கள்? வருகிறவர்களுக்கு நல்ல முறையில்தான் வரவேற்பு அளிக்கிறது! தினந் தினம் இங்கு பலர் வந்து இந்தக் குடிசையை 'இன்றைக்குத்தான் பாக்கியம் செய்த குடிசை'யாகச் செய்வார்கள் போலிருக்கிறது. அதிலும் இங்கே ராணிகளும் அரசிகளும் ஓயாமல் வந்து கொண்டிருப்பார்கள் போலிருக்கிறது!" என்றாள் இளையபிராட்டி குந்தவை.

"வாருங்கள்! நடன ராணிகளே! வாருங்கள்!" என்றது கிளி.

ஜோசியர் மறுபடியும் அதை அதட்டி விட்டு, "தேவிமார்களே! மன்னிக்க வேண்டும்! திருஞான சம்பந்தப் பெருமான் இந்தத் திருவையாற்றுக்கு வந்திருந்த போது வீதி தோறும் ஆடல் அரங்குகளைக் கண்டார். அவற்றில் மங்கைமார்கள் நடனம் பயிலும்போது பாதச் சதங்கைகள் கலீர் கலீர் என்று ஒலிப்பதையும் கேட்டார். அவருடைய தெய்வீகப் பாசுரங்களிலும் பாடியிருக்கிறார். அந்த நாளில் போலவே இன்றைக்கும் இந்தத் திருவையாற்றில் நடனக் கலை பயிலும் நங்கைமார்கள் எத்தனையோ பேர் இருக்கிறார்கள். அவர்கள் அடிக்கடி சோதிடம் கேட்க இந்தக் குடிசையைத் தேடி வருகிறார்கள்! அவர்களுக்கு உகப்பாக இருக்கட்டும் என்று இந்தக் கிளிக்கு இவ்வாறு சொல்லப் பழக்கி வைத்தேன்! தயவுசெய்து மன்னிக்க வேண்டும்!" என்றார்.

"இன்றைக்கு அந்த ஆடல் அரசிகள், நடன ராணிகள் யாரையும் இங்கே காணவில்லையே?" என்றாள் குந்தவை.

"தேவி! இன்றைக்குத் திருவாதிரைத் திரு நாள். ஆகையால் ஆடலரசிகளும் நடனராணிகளும் ஐயாற்று இறைவன் சந்நிதியில் சேவை செய்யப் போயிருப்பார்கள். ஆனால் உண்மை அரசிகளாகிய நீங்களே வந்து விட்டீர்கள். இந்தக் குடிசை பாக்கியம் செய்தது; நான் பாக்கியம் செய்தவன்!" என்று பரவசமாகக் கூறினார் சோதிடர்.

பிறகு, "தயவு செய்து அமருங்கள்! இந்த ஏழையிடம் என்ன கேட்க வந்தீர்களோ, அதைக் கேளுங்கள்! தெரிந்த வரையில் சொல்லுகிறேன்!" என்றார்.

இளவரசிகள் இருவரும் உட்கார்ந்தார்கள். குந்தவை ஒரு முறை பெருமூச்சு விட்டு, "சோதிடரே! என்னத்தைக் கேட்பது? இந்தச் சோதிட சாஸ்திரத்தில் ஏதேனும் உண்மை இருக்கிறதா?—என்ற கேள்வியைத்தான் முதலில் கேட்கத் தோன்றுகிறது!" என்றாள்.

"தேவி! தாங்கள் இப்படிக் கேட்டால், நான் என்ன சொல்லட்டும்? நம்பிக்கை உள்ளவர்களுக்குச் சோதிட சாஸ்திரம் உண்மை; நம்பிக்கை இல்லாதவர்களுக்கு அது பொய்தான்!" என்று சொன்னார் சோதிடர்.

"நான் சோதிட சாஸ்திரத்தில் பூரண நம்பிக்கை வைத்துத்தான் இருந்தேன். ஆனால் அந்தச் சாஸ்திரம்தான் என்னைக் கை விட்டு விட்டதே!"

"எந்த விதத்தில் தங்களைக் கைவிட்டு விட்டது, அம்மணி?"

"தாங்கள் சோதிடம் பார்த்துச் சொன்னபடி எது நடந்திருக்கிறது? என் தமையன் இப்படி அகால மரணம் அடைவான் என்று நீர் எப்போதாவது என்னிடம் சொன்னீரா?"

"நான் சொல்லலாமா, தேவி! தெரிந்திருந்தாலும் என் வாயைத் திறந்து சொல்லலாமா? சொல்லியிருந்தால், என்னையும் பாண்டிய நாட்டு ஆபத்துதவிகளுடனே சேர்த்திருக்க மாட்டார்களா? இராஜ குடும்பங்களையும் இராஜாங்க காரியங்களையும் பற்றி ஏதோ பொதுப் படையாகத்தான் சொல்லலாம். 'கண்டம்

இருக்கிறது' 'இடையூறு வருகிறது' 'கெட்டக்கிரஹம் பார்க்கிறது' என்று சொல்வதே ஆபத்தானது. மேலும் ஆதித்த கரிகாலரின் ஜாதகம் என்னிடம் இல்லவும் இல்லை; அதை நான் பார்த்ததும் இல்லை!" என்றார் சோதிடர்.

"நீங்கள் பார்த்திருந்தாலும் சொல்லியிருக்க மாட்டீர்கள்; சொல்லியிருந்தாலும் அந்த விபத்தைத் தடுத்திருக்க முடியாது அல்லவா?"

"அது எப்படி முடியும், தாயே! நான் என்ன பிரம்மாவா? எழுதின எழுத்தைப் பிரம்மாவினாலே தான் அழித்து எழுத முடியுமா?"

"அப்படியென்றால், சோதிடம் பார்ப்பதில் என்ன பயன், சோதிடரே!"

"தாயே! இது என்ன இப்படிக் கேட்கிறீர்கள்? தங்களைப் போன்றவர்கள் சோதிடம் பார்க்காவிட்டால், என்னைப் போன்றவர்கள் பிழைப்பது எப்படி? இந்த ஏழையின் குடிசையில் இராஜகுமாரிகளின் பாதங்கள் படுவதுதான் எப்படி?" என்றார் சோதிடர்.

இதைக் கேட்டுக் குந்தவை கலகலவென்று சிரித்து விட்டாள். வானதியின் முகத்திலும் புன்னகை அரும்பியது.

"சோதிடரே! இங்கே சோதிடம் கேட்க வருகிறவர்கள் எல்லாரிடமும் இப்படித்தான் சொல்லுவீர்களா?" என்று இளையபிராட்டி கேட்டாள்.

"எல்லாரிடமும் இப்படிச் சொல்லுவேனா? கலைமகளும் திருமகளும் ஓர் உருக் கொண்டு அவதரித்திருப்பதாகத் தங்களைப் பற்றி உலக மெல்லாம் புகழ் பரவியிருக்கிறது. அத்தகைய தங்களிடம் விவாதம் செய்து என்னால் சமாளிக்க முடியுமா? அதனாலே அவ்வாறு சொன்னேன். ஆனாலும், தாயே! நான் சோதிடம் பார்த்துச் சொல்லாததை வைத்துக்



கொண்டு சோதிட சாஸ்திரத்தின் உண்மையைத் தாங்கள் முடிவு கட்டலாமா? சொன்னதை வைத்துக் கொண்டு அல்லவா முடிவு கட்ட வேண்டும்? பொன்னியின் செல்வரின் அதிர்ஷ்ட ஜாதகத்தைப் பற்றிச் சொன்னேன். இடையில் என்னென்னமோ நேர்ந்து, கடைசியில் அவர் இந்தப் பூமண்டலத்தின் சக்கரவர்த்தியாகும் கட்டம் நெருங்கி விட்டதல்லவா? பட்டாபிஷேகத்துக்குக் கூட நாள் வைத்தாகி விட்டதாமே?'' என்றார் சோதிடர்.

''ஐயா! பொன்னியின் செல்வரின் பட்டாபிஷேகத்துக்கு நாள் பார்ப்பதற்குத் தங்களிடம் யாரும் வரவில்லையா?''

''இல்லை, தேவி! அதற்கு அரண்மனைப் புரோகிதர்கள் இருக்கிறார்களே! முதன் மந்திரி அநிருத்தரே சோதிட சாஸ்திரத்தில் வல்லவர் ஆயிற்றே!''

''ஆமாம்; தை மாதம் ஏழாம் தேதி நாள் குறிப்பிட்டிருக்கிறார்கள். அது நல்ல நாள்தானா, ஜோசியரே!''

''ரொம்ப நல்ல நாள், அம்மா! மிக நன்றாக ஆலோசித்துப் பார்த்துத்தான் குறிப்பிட்டிருக்கிறார்கள்.''





''பட்டாபிஷேகத்துக்கு உகந்த நல்ல நாளாக இருக்கலாம். ஆனால் பட்டாபிஷேகம் அன்று நிச்சயம் நடக்குமா என்று பார்த்துச் சொல்லுங்கள்!''

''இது என்ன கேள்வி, தேவி! ஏன் நடக்காமற் போக வேண்டும்?''

''ஸ்ரீ ராமருடைய பட்டாபிஷேகத்துக்கு நல்ல நாளாகத்தான் பார்த்துக் குறிப்பிட்டார்கள். ஆனால் அன்று அவருக்குப் பட்டாபிஷேகம் நடக்காமற் போய்விடவில்லையா?''

''தேவி! வெறும் பட்டாபிஷேகம் செய்து கொள்வதைக் காட்டிலும் கோடி மடங்கு பெருமை அன்று ஸ்ரீ ராமருக்கு ஏற்பட்டது. அதனாலேயே இராமாயணம் பிறந்தது! அது போகட்டும்! அம்மாதிரி சந்தேகம் தங்களுக்கு ஏன் இப்போது ஏற்படவேண்டும்? தாங்களே பட்டாபிஷேகம் அன்று நடைபெறக் கூடாது என்று விரும்புவதாகக் காண்கிறதே!''

''தங்கள் ஊகம் உண்மைதான்!''

''பொன்னியின் செல்வர் சிங்காதனம் ஏறுவதில் தங்களைக் காட்டிலும் ஆனந்தமடையக் கூடியவர் வேறு யாருமில்லை என்று அல்லவா உலகம் கருதுகிறது?''

''நியாயமாக நான் அத்தகைய ஆனந்தம் அடைய வேண்டியவள்தான். ஆனால் இந்தக் கொடும்பாளூர்ப் பெண்ணின் மூடப் பிடிவாதம் எனக்கு அதில் சந்தோஷம் இல்லாமற் செய்து விட்டது. குடந்தையில் தங்கள் வீட்டில் இவள் செய்த சபதம் நினைவிருக்கிறதா?''

''சபதமா? அன்று பல விபரீத சம்பவங்கள் நிகழ்ந்தன. ஒன்றும் சரியாக நினைவில் இல்லை!'' என்றார் சோதிடர்.

"இவளிடம் அசூயை கொண்ட ஓடக்காரப் பெண் பூங்குழலி ஏதோ சொன்னாள் என்பதற்காக இவள் ஒரு சபதம் செய்தாள். தன் உயிர் உள்ள வரையில் சிங்காதனம் ஏறுவதில்லையென்று கூறினாள்! உயிர் போன பிறகு சிங்காதனம் ஏற முடியுமா, சோதிடரே!"

"முடியாதுதான்!"

"அத்தகைய விபரீதமான சபதத்தைக் கேட்டு விட்டுத்தான் காவேரித் தாய் கோபங்கொண்டு பொங்கி வந்து இவளை வெள்ளத்தோடு அடித்துக் கொண்டு போகப் பார்த்தாள்!"

"ஆமாம்; எனக்குக்கூட நினைவு வருகிறது. அந்தச் சபதம் ஏதோ விளையாட்டு என்றல்லவா நினைத்தேன்?"

"அதுதான் இப்போது வினையாக முடிந்திருக்கிறது! இவள் சிங்காதனம் ஏற மாட்டாளாம் என் சகோதரனுடன் சிங்காதனம் ஏறிப் பட்டமகிஷியாக விளங்குவதற்கு வேறு யாரையாவது கலியாணம் செய்து கொள்ள வேண்டுமாம். இவள் அவனுடைய அரண்மனையில் தாதிகளோடு தாதியாக இருந்து தொண்டு செய்து வருவாளாம்! இதையெல்லாம் கேட்பதற்கே எனக்குச் சகிக்கவில்லை. சோதிடரே! தாங்கள் இந்தப் பெண்ணைப் பற்றிக் கூறியதெல்லாம் நினைவிருக்கிறதா?"

சோதிடர் முகமலர்ச்சியுடன் "நன்றாக நினைவிருக்கிறது. தேவி! நான் சேர்த்து வைத்திருந்த சோதிட நூல்களுடன் பற்பல தேசங்களின் இராஜ குமாரர்கள்—இராஜ குமாரிகளின் ஜாதகங்களையும் காவேரித்தாய் கொண்டுபோய்விட்டாள். ஆனால் இந்தப் பெண்ணரசியின் ஜாதகம் மட்டும் என் மனச் சுவடியில் படிந்திருக்கிறது. இவருடைய கையில் உள்ள ரேகைகள் என் கண் முன்னாலேயே நிற்கின்றன. அர்மணி! நான் கூறிய சோதிடத்தில் வேறு எது பலித்தாலும் பலிக்கா விட்டாலும் இவரைப் பற்றி நான் கூறியது பலிக்காமற் போகாது!"

"இந்தப் பெண்ணைப் பற்றி என்ன சொன்னீர்கள் என்பது தங்களுக்கு இப்போது நினைவிருக்கிறதா?"

"நன்றாக நினைவிருக்கிறது. இவரை மணந்து கொள்ளும் பாக்கியசாலி திருமடந்தையையும் நில மடந்தையையும் ஒருருவத்தில் மணந்து கொண்டவனாவான் என்று சொன்னேன். இந்த மாதரசியைப் பார்க்கும் பாக்கியத்துக்காகத் தேச தேசாந்தரங்களில் உள்ள பேரரசிமார்கள் தவங் கிடப்பார்கள் என்று கூறினேன். இவருடைய திருவயிற்றில் உதிக்கப் போகும் புதல்வன் பிறக்கும்போதே ஜயக் கொடி நாட்டிக் கொண்டு பிறப்பான், அவன் போகுமிடமெல்லாம், அவன் பார்க்குமிடமெல்லாம் வெற்றி என்று சொன்னேன்......"

"ஐயா! நீங்கள் இப்படியெல்லாம் சொல்லச் சொல்ல என்னுடைய கவலை தான் அதிகமாகிறது!"

சோதிடர் சட்டென்று நிமிர்ந்து உட்கார்ந்து, "தேவி! கவலையா? எதற்குக் கவலை? சோழ சாம்ராஜ்யத்துக்கும் சோழர் குலத்துக்கும் கவலைப் படவேண்டிய காலமெல்லாம் போய் விட்டது. இன்றைக்கு ஒரு விசேஷ நாள் என்பது நினைவிருக்கிறதா?"

"ஆம்; இன்றைக்கு மார்கழித் திருவாதிரை நாள்! சிவனுக்கு உகந்த திருநாள்!"

"இது சோழர் குலத்துக்கும் உகந்த நாள்; தெய்வத் தமிழகத்துக்கும் உகந்த நாள். தேவி! கேளுங்கள்! இதே மார்கழித் திருவாதிரையில் வருகிற ஆண்டுகளிலே ஒன்றில் ஓர் அற்புதம் நடக்கப் போகிறது! சங்கு சக்கரம் கையில் ஏந்தாமலே திருமாலின் பூரண அம்சமான குழந்தை ஒன்று உதிக்கப் போகிறது! அந்தக் குழந்தையின்மூலம் இந்தச் சோழ நாடு இதற்கு முன் என்றும் கண்டிராத மகோந்நதத்தை அடையப் போகிறது! ஆகா! என்னென்ன அதிசயங்கள் நடக்கப் போகின்றன? அவற்றைப் பார்க்க நான் ஒரு வேளை உயிரோடு இருக்கமாட்டேன்; தாங்கள் பார்த்து மகிழ்வதற்கு நீண்ட காலம் வாழ்வீர்கள்!"

இப்படிச் சோதிடர் ஆவேசம் வந்தவர் போல் பேசி வருகையில் குந்தவையும் மெய்மறந்து கேட்டுக் கொண்டிருந்தாள்.

திடீரென்று ஏதோ சத்தம் கேட்டு இருவரும் திரும்பிப் பார்த்தார்கள்.

கூண்டிலிருந்த கிளி சடசடவென்று சிறகுகளை அடித்துக் கொண்டிருந்தது. அதன்மேல் தாவ முயன்று கொண்டிருந்த பூனையின் மீது வானதி ஓர் ஓலைச் சுவடியை எடுத்து எறிந்தாள்!

எறிந்து விட்டு, "அக்கா! சோதிட சாஸ்திரம் பயனுள்ளதுதான். சோதிடச் சுவடியைக் கொண்டுதான் இந்த அழகான இனிய வார்த்தை பேசும் கிளியைக் காப்பாற்ற முடிந்தது! இல்லாவிட்டால் அதன் சிறகுகளைப் பூனை இத்தனை நேரம் பிய்த்துப் போட்டிருக்கும்!" என்றாள்.

# பிள்ளைக் கனி

'வியார்ஜி'




"உங்களைத்தானே, எதிர் வீட்டில் குழந்தை பிறந்திருக்கிறதுபோலிருக்கிறதே!"

"உம்..."

"அடுக்களையிலிருந்து வேலை மெனக் கெட்டு நான் ஒருத்தி வந்து கேட்கிறேன், என்னவோ அசுவாரசியமா 'உம்' கொட்டு றீர்களே"-இவ்வாறு சொல்லிக் கொண்டே என் மனைவி என் கையிலிருந்த காலைத் தின சரியை 'வெடுக்'கென்று பிடுங்கினாள்.

அப்பொழுதுதான் காப்பி சாப்பிட்டு விட்டுப் பத்திரிகையில் ஆழ்ந்திருந்த நான் நிமிர்ந்து மனைவியின் முகத்தைப் பார்த்தேன். "இதிலே என்ன சுவாரஸ்யமான விஷயம் இருக்கிறது? எனக் கொன்றும் தெரிய வில்லையே!" என்றேன்.

அப்போது மனைவியின் முகத்தில் தோன்றிய மாறுதலைக் கண்டு பேச்சைச் சட்டென்று நிறுத்திக் கொண்டேன். இரண்டு துளிக் கண்ணீர்கூட வந்து விட்டது அவள் கண்களில்.

"அடி அசடே! இதற்கா இப்படிக் கலங்கு கிறாய்? அப்பப்பா! ஆனாலும் இந்தப் பெண் களுக்கு அழுகை எப்படித்தான் இவ்வளவு சீக்கிரம் வந்து விடுகிறதோ தெரியவில்லையே!" என்று சொல்லிக் கொண்டே ராஜியின் கன்னத்தை என் விரல்களால் இலேசாகத் தட்டினேன்.

"போங்கள், உங்களுக்கு எப்பொழுது பார்த்தாலும் பரிகாசந் தான்" என்று பொய்க்கோபத்தோடு உள்ளே சென்று விட்டாள் ராஜி. அவள் மறைவதையே பார்த்துக் கொண்டிருந்த எனக்கு அவள் மேல் அநுதாபம்தான் ஏற்பட்டது.

கமலாவுக்குக் குழந்தை பிறந்திருப்பதைக் கேட்டு ராஜியைப் போல் சந்தோஷப் படக் கூடியவர்கள் யாரும் இருக்க முடியாது. அவள் கேள்வியில்தான் எவ்வளவு வாஞ்சை! உண்மையில் கமலாகூட இவ்வளவு மகிழ்ச்சி யடைந்திருப்பாளோ என்னவோ சந்தேகந் தான். அவள் உள்ளத்தில் எழுந்த ஆசையையும் குதூகலத்தையும் ஒரு நொடியில் துகள் துகளாக்கி விட்டேனே பாவி, முரடன்! பெண்களின் மனமே மிக மென்மையானது; அதிலும் ராஜியின் மனம் எனக்குத்தான் தெரியும்!

* * *

நான் அந்த ஊருக்கு மாற்றலாகி இன்னும் ஒரு வருஷம்கூடப் பூர்த்தியாக வில்லை. முதலில் அந்த ஊர் ராஜிக்குக் கொஞ்சங் கூடப் பிடிக்க வில்லை.

"போயும் போயும், உங்களுக்கு இங்கேயா மாற்றலாக வேண்டும்? சீக்கிரம் வேறு எங்கேயாவது நல்ல இடமாக மாற்றிப் போடச் சொல்லுங்களேன்" என்று சதா என்னை நச்சரித்த வண்ணமிருந்தாள்.

"ஏன், ராஜி! உனக்கு இந்த ஊர் மேலே அதற்குள்ளே வெறுப்பு ஏற்பட்டு விட்டது?" என்று கேட்டேன் நான்.

"பின்னே என்னவாம்? பழகுவதற்குச் சரியான மனுஷான் இல்லாவிட்டால் பொழுது எப்படித்தான் போகுமாம்? உங்களுக்கென்ன நீங்கள் காலையில் எழுந்ததும் 'ஹாய்'யா ஆபீசுக்குப் போய் விடுகிறீர்கள். நீங்கள் வருகிற வரைக்கும் உள்ளுக்கும் வாசலுக்கும் நூறு தடவை நடந்து வருகிறதுதான் மிச்சம்" என்று தன் மனக் குறையை வெளிப் படுத்தினாள் ராஜி. உண்மையில் ராஜியின் கஷ்டத்தை உணராமல் இல்லை. பாவம் அவளுக்கும் பொழுது எப்படித்தான் போகும்? வீட்டில் குழந்தைகள் இருந்தா

லாவது கல கலப்பாக இருக்கும். குழந்தை— அந்த பாக்கியம்தான் இன்னும் எங்களுக்குக் கிட்ட வில்லையே!

அன்றொரு நாள் 'மாலை "ராஜி" என்று கூப்பிட்டுக்கொண்டே வீட்டுக்குள் நுழைந்த நான் உள்ளே வேறு யாரோ பேசும் குரல் கேட்டுக் கூடத்திலேயே நின்றேன். நான் வந்ததை யறிந்ததும் உள்ளிருந்து யாரோ ஒரு பெண் 'விசுக்' கென்று என்னைத் தாண்டி வெளியே சென்றாள். பின்னாலேயே நகை முகத்துடன் பிரசன்னமானாள் என் சகதர்மிணி ராஜி.

"யார் ராஜி, இந்தப் புது சிநேகம்?"

"எதிர் வீட்டுக்கு வந்திருக்கிறாள். அந்தப் பெண்ணின் பெயர் கமலாவாம்; அவள் புருஷனுக்குப் பட்டணத்தில் வேலையாம்; பேசிக் கொண்டே இருக்கிறேனே, சற்று இருங்கள் காப்பி கொண்டு வருகிறேன்" என்று சொல்லி விட்டு உள்ளே சென்றாள்.

நான் என் 'கோட்'டைக் கழற்றி ஸ்டாண்டில் மாட்டுவதற்கும் ராஜி கையில் காப்பியுடன் வருவதற்கும் சரியாக இருந்தது. காப்பியைக் கையில் கொடுத்து விட்டு மீண்டும் ஆரம்பித்தாள் ராஜி. "கலியாணம் ஆகி வருஷம் எட்டு ஆகிறதாம். இப்பொழுது தான் முதல் பிரசவத்துக்குப் பிறந்தகத்துக்கு வந்திருக்கிறாள்" என்று அர்த்த புஷ்டியுடன் என்னைப் பார்த்துக் கொண்டே சொன்னாள் என் மனைவி ராஜி.

அன்றிலிருந்து கமலாவும் ராஜியும் இணை பிரியாத தோழிகளாகி விட்டனர். தினசரி நான் காரியாலயத்திலிருந்து வருவதற்கும் அவர்களுடைய நீண்ட பேச்சுக்குத் தற்காலிகமாக முற்றுப் புள்ளி வைக்கப் படுவதற்கும் அநேகமாகச் சரியாக இருக்கும். இப்பொழுது முதற் கொண்டே, பிறக்கப் போகிற குழந்தைக்குச் சட்டை, தொப்பி எல்லாம் தைக்கத் தொடங்கி விட்டனர். ராஜி இதிலே அக்கறை காட்டுவதன் காரணம் விளங்க அப்படி ஒன்றும் பிரமாத சாமர்த்தியம் வேண்டியதில்லை. ஏறக்குறைய ஒரே நிலையில் இருந்த அவர்களது உள்ளங்கள் தம் உணர்ச்சிகளைப் பரிமாறிக் கொள்ள எளிதான நிலையில் இருந்தன. எட்டு வருடத்திற்குப் பிறகு குழந்தை பெறப்போகும்-வாழ்க்கையிலேயே முதல் முதலாகத் தாயாகப் போகும்-ஒரு பெண்ணின் மனமும் அதில் எழக்கூடிய கற்பனைகளும் ராஜியின் மனத்திற்குப் புதியன அல்லவே! ஆனால் ஒன்று மட்டும் எனக்குப் புதிராக இருந்தது. பெண்கள் எளிதில் பொறாமைக்கு இலக்காகி விடுவார்கள் என்றல்லவா சொல்லுவார்கள். ஆனால் இங்கு காண்பது என்ன? கமலாவுக்குக் குழந்தை பிறக்கப் போவதைக் கேட்டு ராஜி மிகவும் சந்தோஷப் படுகிறாள். தன்னைப் போன்று மற்றொருத்தி வெகு காலத்துக்குப் பின் தாயாகிறாள். ஆனால் தான் மாத்திரம்...... இப்படியெல்லாம் இயல்பாக அவள் எண்ணம்

சென்றிருக்க வேண்டும். ஆனால் அவள் அப்படி நினைப்பதாகத் தெரிய வில்லையே? அப்படி நினைத்திருந்தால் அதன் விளைவாக எழும் ஏக்கம் கலந்த பெருமூச்சு என் காதில் விழாமல் இருந்திருக்க முடியாதே!

கடைசியில் ராஜி வெகு ஆவலோடு எதிர் பார்த்திருந்த அந்தக் காரியம் நிகழ்ந்து விட்டது. கமலா ஒரு குழந்தைக்குத் தாயாகி விட்டாள். மலடியோ என்று சந்தேகக் கண்க ளோடு பார்த்துக் கொண்டிருந்த உலகத் துக்கு விடை பகருவதே போன்று குழந்தை ஒன்றைப் பெற்றெடுத்து விட்டாள் கமலா. இப்பொழு தெல்லாம் எதிர் வீட்டில் யார் யாரோ வந்து போய்க் கொண்டிருந்தார்கள். ராஜியும் போய் விட்டு வந்தாள். குழந்தை 'சுவர்ண விக்கிரகம்' மாதிரி இருக்கிறதாம்: சொன்னாள். நான் மனத்திற்குள் சிரித்துக் கொண்டேன். பத்தாம் நாளில் குழந்தைக் குப் பெயரிட்டார்கள். ராஜி யில்லாமலா?

* * *

இப்பொழுது கண்ணன் பத்து மாதக் குழந்தை. வெகு சுடிகையாக இருந்தான். கமலாவின் முகத்தில் 'தாய்மை'யின் சாந்த மும், காம்பீர்யமும் தவழ்ந்து கொண்டிருந் தன. ஒரு குழந்தையைப் பெற்றவுடன் எங் கிருந்துதான் வந்து விடுகிறதோ இந்தப் பொறுப்புணர்ச்சி பெண்களுக்கு. கமலா கண்ணன் மேல் உயிராக இருந்தாள். ராஜிக்கு முன்பெல்லாம் கண்ணனோடு கொஞ்சி விளை யாடா விட்டால் பொழுதே போகாது. ஆனால் இப்பொழுது அவளுக்கு என்ன நேர்ந்து விட்டது? கமலாவுக்கும் அவளுக்கும் ஏதாவது சண்டையா என்ன? ஏன் இப்படி விலகி விலகிச் செல்கிறாள்? கமலாவையும் கண்ணனையும் கண்ணிலே காணக் கூடப் பிடிக்காமல் அப்படி என்ன நேர்ந்து விட்டது? கமலாவையும் அவள் குழந்தையை யும் மற்றவர்கள் பாராட்டும் போதெல்லாம் அவள் பெருமூச் செறிவாள்.

அன்றைக் கொரு நாள் கமலா குழந்தை யைத் தோளுக்கு உயரே தூக்கி வேடிக்கை காட்டிக் கொஞ்சிக் கொண்டிருந்தாள். பக் கத்தில் யாரோ ஒரு அம்மாள் நின்று கொண் டிருந்தாள். எங்கள் வீட்டு ஜன்னல் வழியாக இந்தக் காட்சி நன்றாகத் தெரிந்தது.

''ஆனாலும் இப்படியா இருக்கணும்! உல கத்திலே யாரும் பெறாத அதிசயக் குழந் தையைப் பெற்று விட்டாற் போல் அல்லவா நடந்து கொள்ளுகிறாள்!'' என்று முகத்தைத் தோள் பட்டையில் இடித்துக் கொண்டாள் ராஜி. நான் அவளை ஒன்றும் கேட்கவில்லை. நான் முழுவதும் எதிர்பார்க்காத ஒரு நிகழ்ச்சி யல்லவே இது.

நினைவளவில் நினைத்துக் கற்பனையுலகில் கண்டு களித்த ஒன்று கமலாவின் குழந்தை யாக மலர்ந்த பொழுது அந்தப் பெண் உள்ளம் ஆறுதலடைந்திருக்க வேண்டும். ஏதோ தனக்கு அந்தப் பேறு கிட்டாமற் போனாலும் தன் தோழிக்காவது கிடைத்ததே என்று மன அமைதியும் அடைந்திருப்பாள். அவள் உள்ளத்தில் பதிந்து விட்ட ஏக்கத்தின் சாயல் அடியோடு மறைந்து விடா விட்டா லும் அது நீளப் படராமல் ஒரு சிறு தடை யாக வந்தமைந்தான் கண்ணன். ஆனால் எத்தனை நாளைக்குத்தான் இப்படியிருக்க முடியும் அவளால்? மறைந்து விட்டது என்று கருதிய மன ஏக்கம்—எங்கோ ஒரு மூலையில் இருந்தது. இப்பொழுது அது வெகு வேகமாகப் படர்ந்து உள்ளம் முழுவதும் நீக்கமற நிறைந்து விட்டது. ஒரு நாளா, இரண்டு நாளா? பத்து மாதம் அவள் பொறுத்தாள். மற்றவர்கள் கண்ணனைப் புகழ்ந்தார்கள்; அவனோடு கொஞ்சினார்கள்; விளையாடினார்கள்; அவனைப் பெற்றெடுத்த கமலாவைப் பாக்கியவதி என்று பாராட்டி னார்கள். தொடர்ந்து நடந்து வந்த இந்த நிகழ்ச்சிகளின் நெருக்கம் ராஜியின் பலவீன மான உள்ளத்துக்குத் தாங்க முடியாத பெரிய அதிர்ச்சியைக் கொடுத்து விட்டது!



"ஔவையார்" படத்தைச் சிறந்த முறையில் தயாரித்து வெளியிட்ட ஜெமினி அதிபர் ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் அவர்களுக்குத் தஞ்சை மாவட்ட மக்கள் மிகப் பெரிய வரவேற்பு நடத்தினார்கள். இந்தப் பாராட்டு வைபவம் தஞ்சை ஞானம் டாக்கீஸில் நடந்தது. தஞ்சை ஜில்லா பிரமுகர்கள், நிலச்சுவான்தார்கள், கலைஞர்கள், அதிகாரிகள், பொதுமக்கள் அனைவரும் திரளாக வந்திருந்து வைபவத்தைச் சிறப்பித்தனர். விழாவுக்குத் திரு ஓ. பி. ராமசாமி ரெட்டியார் தலைமை வகித்தார். மிகச் சிறந்த முறையில் கலை வடிவமாக அமைக்கப்பட்ட பெரிய பாராட்டுக் கேடயத்தை கனம் சி. சுப்பிரமணியம் திரு வாஸன் அவர்களுக்கு வழங்கினார்.

"கண்ணனுக்கு உடம்பு சரியாயில்லையாமே இரண்டு மூன்று நாட்களாக. தெரியுமா உங்களுக்கு?" என்று கேட்டுக் கொண்டே என் அறையினுள்ளே வந்தாள் ராஜி. என்னை இந்தக் கேள்வி உண்மையிலேயே தூக்கி வாரிப் போட்டது.

"அப்படியா, தெரியாதே!" என்றேன்.

"ஆமாம்! கமலா வீட்டுக்காரருக்குக் கூட தந்தி அனுப்பியிருக்கிறார்களாம். நான் இன்றைக்குச் சாயங்காலம் போய்ப் பார்த்துவிட்டு வந்தேன். எப்படியிருந்த குழந்தை எப்படியாகி விட்டது!" என்று அவள் கூறிய போது அவள் குரலில் வேதனையின் சாயல் படர்ந்திருந்தது.

"ஆமாம், குழந்தைக்கு ஒன்றும் ஆகாதே? எனக்கு உடம்பெல்லாம் என்னவோ பண்ணுகிற மாதிரி இருக்கிறதே! மனசு இடந்து திக் திக்கென்று அடித்துக் கொள்ளுகிறதே! அம்பிகே! நீதான் குழந்தையைக் காப்பாற்ற வேண்டும்" என்று அவள் வேண்டிக் கொண்டாள்.

ராஜியின் வேண்டுதல் நிறைவேறவில்லை. கண்ணன், பிறந்து ஓராண்டு முடிவதற்கு முன்பே துயரம் நிறைந்துள்ள உலகத்திலிருந்து விடுதலை பெற்றுக் கொண்டான்.

ராஜி அழுது கொண்டிருந்தாள். "ஐயோ, என் பொல்லாத கண் பட்டுத்தான் குழந்தை இப்படிக் கருகிப்போய் விட்டதோ?" என்று தனிமையில் வருந்தினாள். என்னிடமும் அதைச் சொன்னாள்.

"அடி அசடே, இதெல்லாம் நம்மால் நடக்கிற காரியமா என்ன? நீ ஏன் வீணாக மனசை வருத்திக் கொள்ளுகிறாய்? உன் நல்ல மனசு தெரியாதா என்ன?" என்று ஆறுதல் கூறினேன்.

ராஜி கமலாவைத் தேற்றுவதில் ஈடுபட்டிருந்தாள். அந்தத் 'தாய் உள்ளம்' அமைதி பெற முடியாதுதான். இன்னும் ஏழு மாதத்துக்குப் பிறகாவது ராஜியால் கமலாவுக்கு ஓரளவு ஆறுதல் அளிக்க முடியும். இனிமேல் அவள் முறைதானே! ஆம். ராஜிக்கு இப்பொழுது மூன்றாவது மாதம்!

V. 9245

# மோட்டார் கார் ஓட்டும் செலவைக் குறைக்க நீங்கள் உபயோகிக்க வேண்டியது

## மூன்று விதங்களில் பணி செய்யும் மோபிலாயில்

**1** மோட்டாரின் உறுப்புகள் விரையமாகாதபடி காப்பாற்றுகிறது. எப்படியென்றால் அது எல்லா வித சீதோஷ்ண நிலைக்கும் அனுசரித்து சரியானபடி என்ஜினைப் படியவைக்கிறது.

**2** பழுதுருவண்ணம் இஞ்சினைக் காப்பாற்றுகிறது. இஞ்சினில் கெடுதலை விளைவிக்கும் கார்பன் படிமானம் ஏற்படாதபடி உதவுகிறது.

**3** பெட்ரோலை சிக்கனமாய்ச் செலவழிக்க உதவுகிறது. உலோகங்களினாலான உறுப்புகளை அமிலங்கள் சாப்பிட்டு இஞ்சினில் சக்திக்குறைவு ஏற்படக்காரணமின்றி செய்கிறது.




# மோபிலாயில்




எங்கெல்லாம் பறக்கும் செங்குதிரையின் அடையாளத்தை பார்க்கிறீர்களோ அங்கு அசல் மூன்று விதங்களில் பணி செய்யும் மோபிலாயில் கிடைக்கும்.

ஸ்டாண்டர்ட்-வாக்குவம் ஆயில் கம்பெனி

(கம்பெனி அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது)



லிப்டன்
டீ
கெர்ல்
LIPTON'S
TEA GIRL
FINEST
INDIAN DUST TEA
சிறந்த ஸ்ட்ராங் டீ
தருகிறது
LTGX 26 TM



# வேணுகானம்

விஜயம்

## 2. குதிரை சவாரி

பூபதி நல்ல பலசாலி. மேலும், தகிக்கின்ற வெய்யிலிலும், நடுங்கும் பனியிலும், கொட்டும் மழையிலும் காட்டு வெளியில் கவலையற்றுத் திரிந்து, உழைத்து, ஓடியாடி அவன் உடல் உரம் பெற்றிருந்தது.

ஆகவே, திடீரென்று அவன் மீது பாய்ந்த வீரர்களைக் கண்டு பூபதி கொஞ்சங்கூடப் பயப்பட வில்லை. லாகவமாக விலகி நின்று, அவர்களுடைய தாக்குதலி லின்றும் தப்பினான்.

பிறகு, பூபதி குதிரை மேல் இருந்த ராஜகுமாரனைப் பார்த்து, "ஐயா, இவர்கள் நால்வரையும் ஒவ்வொருவராகத் நேருக்கு நேர் நேரிற்கடிக்க வேண்டுமா? அல்லது, ஒரே சமயத்தில் நாலு பேர்களோடும் சண்டை செய்ய வேண்டுமா?" என்று கம்பீரமாக நிமிர்ந்து நின்று கேட்டான்.

ராஜ குமாரனுக்குக் கோபம் தாங்க வில்லை. "அடே, நீ யார்? என்னிடம் கொஞ்சங்கூட மரியாதை யில்லாமல் விளையாடுகிறாய்? வாய் திறவாமல் என்னுடன் வருவதா யிருந்தால், உன்னை ஒன்றும் செய்ய வில்லை. இல்லையென்றால் உன்னைக் கைது செய்து கொண்டு போவேன்!" என்று கூறி உறுமினான்.

"ஹஹ்ஹ, ஹஹ்ஹ, ஹா!" என்று பூபதி அலட்சியமாக நகைத்தான்.

"நீர் யார்? ஒரு பெரிய தேசத்து ராஜகுமாரனைப் போல் நினைத்துக்கொண்டு பேசுகிறீரே! நான் என்னத்துக்காக உம்முடன் வர வேண்டும்? என்னை என் கைது செய்வதாகச் சொல்லுகிறீர்? நான் என்ன குற்றம் செய்தேன்?" என்று அலட்சியமாகக் கேட்டான் பூபதி.

"ஹஹ்ஹ, ஹஹ்ஹ, ஹா!" என்று இப்பொழுது அந்த ராஜகுமாரன் சிரித்தான்.

"என்னையா யார் என்று கேட்டாய்? நான் கடல் கடந்த தூர தேசத்திலிருந்து வந்திருக்கிறேன். எங்கள் நாட்டின் பெயர் வைஜயந்தி. அந்நாட்டு இளவரசன் நான். தெரிந்ததா? நீ யார், இந்நாட்டின் இளவரசரா?" என்று பரிகாசமாகக் கேட்டான்.

பூபதிக்குக் கோபம் பிரமாதமாக வந்தது.

"நீர் ஒரு நாட்டுக்கு இளவரசர். நான் இந்தக் காட்டுக்கு இளவரசன். என் பெயர் பூபதி!" என்று தலை நிமிர்ந்து கூறினான்.

மறுபடியும் அந்த ராஜகுமாரன் ஏளனமாகச் சிரித்தான்.

"மாடு மேய்க்கும் வாலிபன் நீ. உனக்குப் பெயர் பூபதியா? பேஷ், பேஷ்! என்ன பொருத்தம்!" என்று கூறி விட்டு மீண்டும் சிரித்தான்.

"சை, நீ ஒரு இளவரசனு? என் பெயரின் பொருத்தத்தை நீ என்ன கண்டாய்? பிறக்கும் போதே யாரும் தலையில் கிரீடம் வைத்துக் கொண்டு ராஜாவாகப் பிறந்து விடுவதில்லை. இது உனக்குத் தெரியாதா?



பூபதி இந்த வார்த்தையைச் சொல்லி முடிப்பதற்குள், ராஜகுமாரன் தன் வீரர்களுக்குச் சைகை செய்தான். உடனே அந்த நாலு வீரர்களும் பூபதியின் மேல் பாய்ந்து கைது செய்ய முயன்றனர்.

பூபதி அந்த நாலு முரடர்களையும் எதிர்த்து நின்று அந்த நாலு பேர்கள் கையிலும் சிக்காமலே அவர்களுடன் மல் யுத்தம் புரிந்து அவர்களைக் களைப்படைந்து கிழே விழச் செய்தான்.

பூபதியின் சாமர்த்தியத்தைப் பார்த்த ராஜ குமாரனுக்கே மிகுந்த ஆச்சரியமாய்ப் போய் விட்டது.

"பூபதி, சபாஷ்! உனக்கு மாடு மேய்க்கத்தான் தெரியும் என்று நினைத்தேன். உனக்கு நன்றாய்ச் சண்டை போடவும் தெரிகிறது. நீ கெட்டிக்காரன்தான்!" என்று கூறி விட்டுக் குதிரையிலிருந்து கிழே இறங்கிய ராஜகுமாரன், பூபதியின் அருகில் வந்து, "சற்று முன் நான் இங்கே வந்த போது அற்புதமான, இன்பம் பொங்கும் இசையைக் கேட்டேன். அது எங்கிருந்து வருகிறது என்று கண்டு பிடிப்பதற்காக, இந்த வனப் பிரதேசத்தில் வெகு தூரத்திலிருந்து வருகிறேன். இந்த இடத்தை நெருங்க நெருங்க, அந்த இனிமையான இசை நன்றாகக் கேட்க ஆரம்பித்தது. நீ உன் வாயில் ஒரு மூங்கில் குழாயை வைத்து ஊதிக் கொண்டிருந்தாய். அதிலிருந்து இனிய இசை வெள்ளம் பொங்கி வந்தது. அது என்ன குழாய்? அது எப்படி உனக்கு நன்றாக வாசிக்க வருகிறது?" என்று கேட்டான் ராஜ குமாரன்.

"பூ, இவ்வளவுதானா? புல்லாங்குழலைப் பற்றி நீ கேள்விப் பட்டது கூடக் கிடையாதாக்கும்! இந்த லட்சணத்தில் உனக்குக் கர்வத்தில் மட்டும் குறைவைக் காணோம்!" என்று கேட்டுவிட்டு, பூபதி பலமாகக் கை கொட்டிச் சிரித்தான்.

ராஜகுமாரனுக்குக் கோபம் பிரமாதமாக வந்தது. வீரர்களைப் பார்த்து, "இந்தப் பயலைக் கைது செய்து அழைத்து வாருங்கள்!" என்று பலத்த குரலில் கட்டளையிட்டான்.

பூபதியின் கண்கள் கோபத்தால் சிவந்தன. அவன் மூக்குத் துடித்தது. புருவங்கள் துள்ளி நிமிர்ந்தன.

"ஆகா! இதுதான் அரசர் குலத்துக்குப் பெருமையா? ஆயுதம் இல்லாமல், ஒரு ஏழை வாலிபன் காட்டு வழியில் தனியே இருந்தால், ஒரு பாவமும் அறியாத அவனைக் கைது செய்து விடுவதுதான் உங்கள் தேசத்து ராஜ தருமமா? சபாஷ்! நன்றாயிருக்கிறது!" என்று ரொம்பவும் கோபமாகச் சொன்னான் பூபதி.

மறு நிமிஷம் வீரர்கள் அவன் மேல் பாய்ந்து அவனைக் கைது செய்தார்கள்; பிறகு குதிரையில் வைத்துக் கட்டினார்கள். பூபதி தன் முழு பலத்தையும் உபயோகித்துத் தப்ப முயன்றும் அவனால் முடியவில்லை. பூபதியின் பலத்தையும் சாமர்த்தியத்தையும் சற்று முன்பு பார்த்துத் தெரிந்து கொண்டிருந்த அந்த முரட்டு மனிதர்கள் அவனை இப்படியும் அப்படியும் அசைய விடாமல் குதிரையோடு சேர்த்து வைத்துக் கட்டி விட்டார்கள்.

தன்னால் அவர்களிட மிருந்து தப்ப முடியாது என்று கண்டு கொண்ட பூபதி, மாட்டு மந்தையைப் பார்த்துக் கண்ணீர் விட்டான். அடுத்த நிமிஷம் அவன் குதிரை நகர ஆரம்பித்தது. அதைச் செலுத்தி வந்த வீரன் மிகவும் சாமர்த்தியமாக ஓட்டினான்.

அவன் மனம் மட்டும் வெகு வேகமாகச் சிந்தனை செய்ய ஆரம்பித்தது. "இன்று காலையில் எழுந்திருக்கும் போது, அந்த அசரீரி 'நீ உன் பெயருக்கேற்ப அரசனாவாய்' என்று கூறியதே. இப்பொழுது என் நிலைமை மிகவும் வெட்கக் கேடாக அல்லவா இருக்கிறது! சாதாரணமாக மாடு மேய்த்துக் கொண்டிருந்த பூபதி, இப்பொழுது கைதியாக அல்லவா அன்னிய நாட்டு ராஜகுமாரனுடன் செல்ல வேண்டி யிருக்கிறது. அந்தத் தேசத்து அரசன் எப்படிப் பட்டவனோ! அங்கே போய் நீண்ட காலம் சிறைச்சாலையில் இருக்கும்படி நேருமோ!" என்றெல்லாம் அவன் மனசுக்குள் நினைத்துக் கனிந்தான். அவன் கட்டப்பட்டிருந்த குதிரையும் மற்றக் குதிரைகளும் டக், டக் என்ற சத்தத்துடன் அவன் மனவேதனையைப் பொருட்படுத்தாமல் சென்றன. குதிரை வாயு வேகமாகப் பறந்தது. ராஜகுமாரனும் வீரர்களும் தங்கள் தங்கள் குதிரையில் தொடர்ந்தார்கள். (தொடரும்)

# அரவிந்த்

## உயர் ரகத் துணிகள்

இப்பொழுது

**•SANFORIZED•** REGD.

(ஸான்பொரைஸ்ட்) ஏற்கனவே சுருக்கப்பட்ட
ஷர்டிங்குகள் - பாப்ளின்கள் - கோட்டுத்துணிகள்
மற்றுமுள்ள

சிறப்புவாய்ந்த பல-வர்ணங்
களிலுள்ள ப்ரின்டுத்துணிகள்

வாயல்கள் - கேம்ப்ரிக்குகள் - பாப்ளின்களும்

எல்லா இடங்களிலும்
கிடைக்கும்

Arvind



QUALITY FABRICS

அரவிந்த் மில்ஸ் லிமிட்டெடு,
அஹம்மதாபாத் - 2.

ஏஜண்டுகள் :

அஜித் பாய் ஜயந்திலால் & கம்பெனி
5, லிடங்கு தெரு, சென்னை-76, கீழ மாரட் வீதி, மதுரை & விஜயவாடா

யு. என். ஷர்மா
சிக்பேட், பெங்களூர் சிட்டி

கணேஷ்மல் பிரதாப்மல் & கம்பெனி
கார் தெரு, பெல்லாரி

நாக்ஜி புருஷோத்தம் & கம்பெனி லிமிடெட்
பெரிய கடைத் தெரு, த. பெ. 36, கோழிக்கோடு



# பிராயச்சித்தம்

நா. ராமச்சந்திரன்



நாகைப்பட்டினம் சிறையிலிருந்து விடுதலை பெற்ற காளிமுத்து அதிகாரிகளுக்கு ஒரு கும்பிடு போட்டுவிட்டுச் சாலைப் பக்கம் வந்தான். அவனுடைய உடைமைப் பொருள்களான ஒரு பழைய வேட்டி, சட்டை, பை முதலியவைகளைத் திருப்பிக் கொடுத்த சிறைச் சேவகன், "காளிமுத்து! விடுதலையாகி வீட்டுக்குப் போறே! இனிமேயாவது யோக்கியமா பொழைச்சுக்கோ!" என்று சொன்னான். இந்தப் பெரிய உலகத்தில் யோக்கியமாகப் பிழைப்பதற்குத் தனக்கு மார்க்கமில்லாமலா போய்விடும் என்று எண்ணிக் கொண்டே ரயில் நிலையத்தை நோக்கி நடந்தான்.

காளிமுத்து காளியாக்குடிக்குப் போகவேண்டும். அங்குதான் அவனுக்கு உறவு என்றும், தெரிந்தவர்கள் என்றும் நாலு பேர்கள் இருந்தனர். அவர்கள் முகத்தில் விழிக்கக்கூட அவனுக்கு இப்போது இஷ்டமில்லை. அவமான உணர்ச்சியால் அவர்களைப் பார்க்க இஷ்டப்படாவிட்டாலும், அதற்கு மேற்பட்ட ஏதோ உணர்ச்சி அவனை, "காளிமுத்து! காளியாக் குடிக்குப் போகாதே!" என்று அறிவுறுத்திக் கொண்டிருந்தது. அதைச் சாதாரணமாக உணர்ச்சி என்று பெயர் கொடுத்து அழைப்பதைவிட ஒரு வித அபூர்வ சக்தி என்று கூறலாம். ஆனால் அந்தச் சக்திக்கும் இப்போது பணிந்து காளிமுத்துவால் நடக்க முடியாது. ஏனெனில் சிறை அதிகாரிகளிடம் அவன், தான் நேராகத் தன் கிராமத்திற்குப் போவதாகக் கூறி, அவர்களிடமிருந்து அந்தக் கிராமத்திற்கு அருகாமையிலுள்ள கொல்லுமாங்குடி ரயில்வே ஸ்டேஷனுக்கு 'வாரண்டு டிக்கெட்' பெற்றுக் கொண்டிருந்தான். அப்படியிருக்கத் தன் மனம் போன போக்கில் காரியங்களைச் செய்து கொண்டு போக முடியுமா!

சிந்தனைகள் விருந்தாக அமைந்த காரணத்தால் காளிமுத்துவுக்கு வழி நீண்டது தெரியவே இல்லை. ஸ்டேஷனை அடைந்தவுடன்தான் பசியெடுப்பதை உணர்ந்தான். அருகிலிருந்த மக்கடையில் நாலு இட்டிலிகளையும், இரண்டு வடைகளையும் வாங்கிச் சாப்பிட்டு விட்டு அதற்கு மேல் ஒரு கப் டீயை ஊற்றிக் கொண்டு பிளாட்பாரம் பக்கம் வந்தான். 'ஸ்டேஷனில்' பொருத்தப்பட்டிருந்த பெரிய கடிகாரத்தில் மணி பத்தடித்து ஓய்ந்தது. ரயில் வருவதற்கு இன்னும் அரைமணி நேரம் இருக்கிறது என்று பலபேர் சொல்லிக் கொண்டார்கள்.

பிளாட்பாரத்தில் அவ்வளவாகக் கூட்டம் இல்லை என்றாலும், வழக்கமாக இருக்கும் ஜன சந்தடி இல்லாமல் போகவில்லை. தன்னைத் தவிர எல்லோருமே மன நிம்மதியாகவும் குதூகலமாகவும் இருப்பது போலத்தான் காளிமுத்துவுக்குப் பட்டது. தானும் ஒரு வம்பு வழக்குக்குப் போகாமல் இருந்தால் இவர்களைப் போல் மானமாக வாழ்க்கை நடத்திக் கொண்டிருக்கலாம் என்ற எண்ணம் தோன்றிற்று. அந்த எண்ணம் மனத்தில் வலுப்பெறும்போதெல்லாம் தான் ஏன் சிறையிலிருந்து விடுதலை பெற்றோம் என்றிருந்தது அவனுக்கு. "இனி என்னையும் மனிதன் என்று யார் மதிப்பார்கள்!" என்று அவன் உள்ளத்தில் ஒரு கேள்வி பிறந்தபோது அவன் கண்களில் கண்ணீர் நிரம்பி நின்றது. உலகத்தில் பிரதி தினம் எவ்வளவோ பேர்கள் குற்றம் செய்கிறார்கள், அதற்காகச் சிறைத் தண்டனை அடைகிறார்கள், தண்டனை முடிந்த பிறகு விடுதலை பெற்று மறுபடியும் வாழ்க்கை நடத்துகிறார்கள் என்ற சித்தாந்தம் காளிமுத்துவுக்குத் தெரிந்துதான் இருந்தது. என்றாலும், ஏனோ அதில் அவனுக்கு நம்பிக்கை விழவில்லை.

காளிமுத்துவின் சிந்தனைகளுக்கு முற்றுப்புள்ளி வைத்தாற் போல், ஸ்டேஷன் மணி 'கண கண' வென்று ஒலித்தது. காளிமுத்து பரபரப்புடன் எழுந்திருந்து பிளாட்பாரத்தின் முன் பக்கம் வந்தான். ரயில் 'குபு குபு' வென்று புகையைக் கக்கிக் கொண்டு வந்து நின்றது.

ரயிலின் கடைசிப் பெட்டிக்கு முதல் பெட்டியில் கூட்டம் அதிகமாக இல்லை. யாரோ ஒரு முஸ்லிம் உட்கார்ந்திருந்தார். அவர் உடையிலிருந்தும் தலையில் கவிழ்த்திருந்த குல்லாவிலிருந்தும் நாகைப்பட்டினம் ராவுத்தர் என்று தெளிவாகத் தெரிந்தது. காளிமுத்து அவரை நாலைந்து தடவைகள் நன்கு ஏறிட்டுப் பார்த்துவிட்டு 'இவர் நமக்குத் தெரிந்தவர் இல்லை' என்று தனக்குள் தீர்மானித்து, அந்தப் பெட்டியில் ஏறி அவருக்கு எதிரே கதவோரமான இடத்தில் உட்கார்ந்து கொண்டான். இடம் அதிகமாக இருந்தும் அவன் சிறியதொரு இடத்தில் தன் தேகம்

முழுவதையும் குறுக்கிக் கொண்டு உட்கார்ந்த காரணம் யாருக்குப் புரியும்!

ரயில் கிளம்புவதற்கு முதல் மணி அடித்தாகி விட்டது. இன்னும் ஐந்து நிமிடங்களில் வண்டி புறப்படவேண்டும். அப்போதுதான் அவசர அவசரமாக ஒருவர் கைப் பெட்டி ஒன்றுடன் 'குபுக்' என்று காளிமுத்து ஏறியிருந்த பெட்டியில் ஏறி அவனுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டார். ரயிலைப் பிடிப்பதற்காக வந்த வேகத்தில் அவருக்கு மேல் மூச்சு வாங்கிற்று. ரயிலில் ஏறி 'அப்பாடா' என்று கூறிக் கொண்டே ஆசனத்தில் அமர்ந்தார்.

"இந்த ஊர் ஜட்கா வண்டியை நம்பினாலே இந்தக் கதிதான்!" என்றார் ரயிலில் ஏறிய புதிய மனிதர். அவர் யாரைப் பார்த்து இதைச் சொன்னார் என்று அவருக்கே தெரியாது. ஏதோ அவர் வாய் சொல்லிற்று. அதைக் கேட்டு விட்டுக் காளிமுத்து சும்மா இருந்தான். ராவுத்தரும் சிறிது நேரம் மௌனமாக இருந்தார்; பிறகுதான் பேச ஆரம்பித்தார்.

"ரயிலுக்கு வரவேணும் என்றால் நம் நடையைத்தான் நம்பணும். நான் எம்புட்டு தூரமானாலும் சரி, கொஞ்சம் சுருக்கவாவது கிளம்பி நடந்தே ஸ்டேஷனுக்கு வந்து விடுவேன். ஐயா எங்கிட்டுப் போவுது?" என்று ராவுத்தர் நெருங்கி உறவு கொண்டாடிக் கொண்டே கேட்டார்.

ராவுத்தர் பேச்சு கொடுக்க ஆரம்பித்தவுடன் புதியவருக்குத் 'தெம்பு' பிறந்து விட்டது. ஓடி வந்ததின் அசதி தேகத்தில் ஓய்ந்து விடவே பேச்சு பிரவாகமாக வந்தது.

"காரைப்பட்டினம் கோர்ட்டிலே ஈரங்கி போட்டு விட்டாங்க. அதற்காக வந்தேன். இங்கு வந்தால் மட்டும் என்ன? மறுபடியும் ஈரங்கிதான் — பதினேழாம் தேதி. இப்போ மாயவரம் வரை போகிறேன்" என்றார்.

"நமக்குச் சொந்த ஊர்!"

"மாயவரமேதான். கமிஷன் ஏஜண்ட் பிஸினஸ். இந்தக் கோர்ட்டுக்கும் கேஸுக்கும்தான் பொழுது சரியாக இருக்குது" என்று அலுத்துக்கொண்டார் அவர்.



காளிமுத்துவின் கவனம் அவர்கள் சம்பாஷணையில் திரும்பவில்லை. ராவுத்தரையாவது பார்க்கலாம் போலிருந்தது அவனுக்கு......ஆனால் அந்தப் புதியவரின்மீது பார்வையைச் செலுத்தினால்......

வாட்டசாட்டமாக இருந்தார் அவர். மழ மழவென்று கன்னமும் கதுப்புமாக இருந்த அவர் முகத்தில் தங்க பிரேம் போட்ட மூக்குக் கண்ணாடி 'ஜம்' மென்று வீற்றிருந்தது. தலை வழுக்கையாக இருந்தாலும், முகத்திலே பொலிந்த களை அவரை ஒரு பிரமுகர் என எடுத்துக் காட்டிற்று. மல் ஜிப்பாவும், வழ வழப்பான மில் வேஷ்டியும் அணிந்திருந்த அவர், அடிக்கடி பொடி போட்டுக் கொண்டிருந்தார். காசித் தூள் வெள்ளைத் துணி மணிகளில் சிந்தாமல் நாசூக்காக மூக்கில் மட்டும் ஏறினது, பொடி போடும் பழக்கம் அவருடைய நீண்ட நாளைய அனுபவம் என்று எல்லோருக்கும் எடுத்துக் காட்டுவது போல இருந்தது.

அவரைப் பார்க்க வேண்டாம், பார்க்க வேண்டாம் என்றாலும் மனசு கேட்கிறதா! "பார்! பார்!" என்று அது தூண்டிற்று. தன்னையும் மீறிக் காளிமுத்து அந்தப் பிரமுகரைக் காணும் போதெல்லாம் அவனுக்கு ஏனோ கடந்து போன மூன்று வருட ஞாபகங்கள் வந்தன. அப்போது இவரைப் போலத்தான் யாரோ ஒரு பெரிய மனிதர் வீட்டில் அவன் கொள்ளையடித்தான். அவன் எதிர் பார்த்ததைப் போல், அவனால் தப்பித்துக் கொள்ள முடியவில்லை. போலீஸில் அகப்பட்டுக் கொண்டான்......சிறைத் தண்டனை கிடைத்தது...

* * *

ரயில் கட கட வென்று சப்தம் செய்து கொண்டு ஊர்களைத் தாண்டிக் கொண்டிருந்தது. அந்தச் சப்தத்தில் காளிமுத்துவின் தேகமும், உள்ளமும் ஆட்டம் கண்டன. எதிரில் அமர்ந்திருந்த ராவுத்தர் அரைத் தூக்கத்தில் இருந்தார்.

வண்டி திருவாரூர் வந்தவுடன் காளிமுத்து மள மள வென்று கீழே இறங்கி மாயவரம் போகும் வண்டியில் ஏறி அமர்ந்து கொண்டான். தன்னைத் தொடர்ந்து, மாயவரம் போகும் அந்தப் பிரமுகர் வராமல் இருந்தது அவனுக்குப் பெரும் ஆறுதலாக இருந்தது. ஆனால் என்ன பிரயோசனம்! காளிமுத்து எதிர் பார்த்ததைப் போல் எதுவும் நடக்காது போனும்! அவன் 'பிரமுகரைப் பற்றிக் கவலை ஒய்ந்தது' என்று எண்ணிக் கொண்டிருக்கும் போதே, அவர் காளிமுத்து அமர்ந்திருந்த பெட்டியில் ஏறிக்கொண்டிருந்தார். பிரமுகர் ஏறி வண்டியில் அமர்ந்தவுடன் காளிமுத்துவின் தேகமெல்லாம் ஒரு தடவை ஆட்டம் கண்டது. அவர் சாதாரணமாகத்தான் இருந்தார். இன்னும் பார்க்கப் போனால் அவர் முகத்தில் மனிதர்களுக்குள்ள ஈவு இரக்க சுபாவங்கள் தோற்ற மளித்தன. ஆனாலும் காளிமுத்துவுக்கு அவரைப் பார்க்கப் பிடிக்கவில்லை. ஒரோர் சமயம் அவருடைய திருஷ்டி தன்மீது விழும்போதெல்லாம் அவன் தேகம் நடுங்கிற்று. கடந்த கால சம்பவங்கள் அவன் இதயத்தில் பளிச்சிட்டன.

"இடமிருக்கும் போது தாராளமாய்த் தான் உட்காரேன், அப்பா. எதற்காகப் பெட்டியின் சட்டத்தோடு சட்டமாக ஒட்டிக் கொள்ளுகிறாய்" என்று கேட்டார் பிரமுகர்.

காளிமுத்து அதற்கு ஒன்றும் பதிலளிக்காமல், கொஞ்சம் தாராளமாகத் தன் இடத்தில் அமர்ந்து கொண்டான். மேலும் அவர் பேச்சுக் கொடுக்காமல் இருக்க வேண்டுமே என்று ஆரூர் தியாகேசரை வேண்டிக் கொண்டான்.

ரயில் புறப்படும் வரையில் காளிமுத்து தன் பரர்வையை வண்டிக்கு வெளியே செலுத்திக் கொண்டிருந்தான். நடுப் பகலில் புறப்படும் ரயில் ஆகையால் ஜங்ஷனில் ஜன சந்தடியே இல்லை. எனவே அவன் சிந்தனைகள் கலைபடவே இல்லை.

கார்டு 'விஸில்' கொடுத்தவுடன் ரயில் 'கூ' வென்று வீறிட்டுக் கொண்டு பிளாட்பாரத்தை விட்டுக் கிளம்பியபோது காளிமுத்து திடுக்கிட்டுப் போனான். அவன் இடத்துக்கு எதிரில் மறுகோடியில் அமர்ந்திருந்த பிரமுகரை அப்போது காணவில்லை! ஆனால் அவர் கைப் பெட்டி மட்டும் அவர் உட்கார்ந்திருந்த இடத்துக்குக் கீழே இருந்தது.

காளிமுத்து ஸ்தம்பித்துப் போனான். இன்னது செய்வது என்று அவனுக்குப் புரியவில்லை. பிரமுகரைக் கண்டு அவன் முதலில் நடுங்கியதை ஊர்ஜிதம் செய்வதைப் போல் அந்தப் பெட்டி காட்சியளித்துக் கொண்டிருந்தது. சிறையிலிருந்து விடுதலை பெற்று ரயிலில் ஏறியவுடனேயே அந்தப் பிரமுகர் தன் வாழ்க்கையில் குறுக்கிடப் போகிறார் என்று காளிமுத்துவுக்குத் தெரிந்து விட்டது. அதை ஊர்ஜிதபல்லவோ செய்கிறது இந்தப் பெட்டி! அவர் எங்கே போய் விட்டார்! இங்கு தானே இவ்வளவு நேரம் அமர்ந்திருந்தார்!

ரயில் செய்யும் பெரும் சப்தம் 'தடக் தடக்' என்று காளிமுத்துவின் செவிகளில் ஒலிக்கவில்லை.

அதற்குப் பதிலாக "காளிமுத்து! யோக்கியமாகப் பிழைத்துப் போ" என்று ஓயாமல் சிறைச் சேவகன் கூறுவதைப்போல இருந்தது. அவன் தான் அப்படிச் சொன்னுன். அவன் எப்படி இப்பொழுது தண்டவாளத்திற்குக் கீழே வந்து காளிமுத்துவிற்காகப் படுத்து கொண்டான்!

* * *

கொல்லுமாங்குடி ஸ்டேஷனில் வண்டி நின்றவுடன் காளிமுத்துவின் பீதி அதிகமாகி விட்டது. இரண்டு நிமிஷங்கள்தான் அங்கு ரயில் நிற்கும். அதற்குள் அந்தப் பெட்டியைப் பற்றி அவன் தீர்மானிக்க வேண்டும். இறங்கி விடுவதா? அல்லது அதை எடுத்துக் கொண்டு இறங்குவதா? எடுத்துக் கொண்டால் பிறகு என்ன செய்வது!

வண்டி நகரும் சமயம். 'வீல்' என்று கூவி விட்டது. காளிமுத்து ஏறியிருந்த பெட்டியில் யாரோ இரண்டொருவர்தான் அப்போது இருந்தார்கள். கொல்லுமாங்குடியில் ஒருவர் ஏறினர். எல்லோரையும் சுற்றி ஒரு தடவை பார்த்துக் கொண்டான் காளிமுத்து. பிறகு ஏதோ ஒரு தீர்மானத்துக்கு வந்தவன் போல் கைப் பெட்டியைத் தூக்கிக் கொண்டு கீழே இறங்கி விட்டான். வண்டியும் நகர்ந்தது.

நான்கு வருடங்களுக்கு முன் அவன் பார்த்த கொல்லுமாங்குடி ஸ்டேஷன் அப்படியேதான் இருந்தது. பிளாட்பாரம் முழுவதையுமே மறைத்துக் கொண்டிருந்த பூவரச மரங்களும், நெட்டிலங்க மரங்களும் அப்படியேதான் காற்றில் சலசலத்துக் கொண்டிருந்தன. எப்போதும் போலத்தான் அங்கொன்றும் இங்கொன்றுமாக ஆட்டுக் குட்டிகள் 'கூட்ஸ் ஷெட்'டுக்கு அருகாமையில் மேய்ந்து கொண்டிருந்தன. ஆனல் ஸ்டேஷன் மாஸ்டர்தான் புதியவராகக் காணப்பட்டார். முன்பு காளிமுத்து பார்த்தபோது ஒரு முதலியார் ஸ்டேஷன் மாஸ்டராக இருந்தார். எப்போதும் அவர் நெற்றியில் திருநீறு பட்டை பட்டையாகக் காட்சி அளித்துக் கொண்டிருக்கும். காளிமுத்துவுக்கு அவரைப் பார்ப்பதில் பரம திருப்தி. இப்போது அவரைக் காணும். அவருக்குப் பதிலாக ஹாட்டும் பூட்டுமாக ஒரு இளைஞன் கையில் பிடித்த கொடியுடன் அங்குமிங்கும் மிடுக்காக நடந்து கொண்டிருந்தான். ஸ்டேஷன் 'பாயிண்ட்ஸ்மென்' கூட பழைய பூபதி இல்லை. எல்லோரும் எங்கே போய் விட்டார்கள்!

காளிமுத்து கையில் தாங்கிய பெட்டியுடன் ஸ்டேஷனுக்கு வெளியே வந்தான். பெட்டியைப் பற்றி அவன் ஒரு முடிவுக்கு வந்திருந்தான். அதை அமுல் நடத்துவது எப்படி என்று யோசித்துக் கொண்டிருந்தான். ஆனல் அவன் மனம் மட்டும் 'டேய் காளிமுத்து! நீ இப்போது ஒரு திருடன். ஊரார் உடைமையை உன்னிடம் வைத்துக் கொண்டிருக்கிருய்' என்று இடைவிடாது சொல்லிக் கொண்டிருந்தது.

ராவுத்தரும் பெட்டிக்கு உடையவரும் ரயிலில் பேசிக் கொண்டிருந்தபோது, பிரமுகரைப் பற்றிச் சில தகவல்களை அவன் அறிந்து கொண்டிருந்தான். முக்கியமாக அவர் மாயவரத்தில் பட்டமங்கலத் தெருவில் வசிக்கிருர் என்று அவர் தெரிவித்துக் கொண்டது மிகவும் நல்லதாகப் போயிற்று. கமிஷன் ஏஜெண்டாக இருக்கும் ஒரு பிரமுகரைப் பட்டமங்கலத் தெருவில் கண்டு பிடிப்பதுதான கஷ்டமான காரியம்! எனவே, நேராக மாயவரம் போய்விடுவது என்ற எண்ணத்தில், கொல்லுமாங்குடியிலிருந்து குறுக்கே போகும்

ஒரு பாதையைக் கடந்து மாயவரம் போகும் கப்பிரஸ்தாவை யடைந்தான்; வேகமாக நடந்தான்.

* * *

**ம**னித உணர்ச்சிகளே விசித்திரமானவை! காளிமுத்து மாயவரத்தை நெருங்க நெருங்க அவன் உள்ளத்தில் தேங்கி நின்ற பயம் கொஞ்சம் கொஞ்சமாக நீங்கிக் கடைசியில் ஓடி விட்டது. தான் மகத்தான ஒரு சேவை செய்கிறோம் என்ற உணர்ச்சியே அப்போது அவன் மனத்தில் மேல் ஓங்கி நின்றது. அச்சமயம் அவன் நடையில்தான் என்ன வேகம் தோன்றிற்று!

பொழுது சாயும் சமயம் காளிமுத்து மாயவரத்தை அடைந்து விட்டான். ஊரின் முனிசிபல் விளக்குகள் எல்லாம் எரிய ஆரம்பித்து விட்டன. காளிமுத்து பட்டமங்கலத் தெருவை நோக்கி விரைந்து கொண்டிருந்தான்.

பிரமுகரின் வீட்டைக் கண்டு பிடிக்கக் காளிமுத்து அதிகச் சிரமம் எடுத்துக் கொள்ளவில்லை. அவருடைய அங்க அடையாளங்களையும் செய்யும் தொழிலையும் சொன்னவுடன் ஒரு வியாபாரி அவருடைய வீட்டைக் காண்பித்துக் கொடுத்தார். காளிமுத்து தட்டுத் தடுமாறித் தயங்கிக்கொண்டு அவர் வீட்டுப் படி ஏறினான்.

"ஐயா இருக்காங்களா...!" என்று காளிமுத்து கேட்டவுடன் அவனுக்கு நல்ல பதிலே வந்தது.

வீட்டு வேலைக்காரன் காளிமுத்துவை அழைத்துக்கொண்டு மாடிக்குச் சென்றான்.

பகல் பன்னிரண்டு மணிக்கு ஆரோக்கிய திடகாத்திரமாகக் காட்சி யளித்த அவர் படுக்கையில் படுத்துக் கொண்டிருந்தார். நெற்றியிலும் கன்னங்களிலும் சுருக்கம் விழுந்திருப்பதை அப்போது தான் காளிமுத்து கவனித்தான்.

"ஐயா! உங்கள் பெட்டியைக் கொண்டு வந்திருக்கிறேன்" என்றான் காளிமுத்து தயங்கியபடி.

காளிமுத்துவின் வார்த்தைகளைக் கேட்டவுடன் பிரமுகரின் முகம் மலர்ந்தது. "அருகில் வா, அப்பா!" என்றார் அன்பு ததும்ப.

"நல்ல வேளையாகப் போச்சுங்க. நீங்க மட்டும் ராவுத்தர் கிட்டே உங்களைப் பத்தி சொல்லி யிருக்காமல் போனால் எனக்கு உங்கள் விலாசமே தெரிந்திருக்காது" என்றான் காளிமுத்து.

"அப்பா நீ நல்லவன். என்னைக் கொஞ்சம் மன்னிச்சுடு அப்பா. உன்னை முதலில் பார்த்தவுடன் உன்மீது எனக்கு நம்பிக்கையே இல்லை. நீ நம்பிக்கைக்குப் பாத்திரமில்லை என்றே எண்ணினேன்..." என்று கூறிக்கொண்டு வந்தபோது, பெரியவரின் கண்களில் நீர் துளித்தது.

"நீங்க நினைச்சது சரிதாங்க. பெரியவர்களுக்கெல்லாம் ஒருத்தரைப் பார்த்தவுடன் அவுங்களைப் பத்தி தெரிஞ்சுவிடும் போலிருக்கு."

"ஏன் அப்பா, அப்படிச் சொல்றே! நான் நினைத்தது தப்புதானே" என்றார்.

"இல்லேங்க. நீங்க நினைச்சது சரி. ஏன் என்றால் நான் ஒரு பழைய திருடன்......" காளிமுத்து அவரைப் பார்த்துக் கொண்டே சொன்னான்.

"நீ ஒரு திருடன்!" பிரமுகர் தமக்குள்ளே முணுமுணுத்துக் கொண்டார். பின் "ஏனப்பா அப்படி யெல்லாம் பேசறே!" என்று கேட்டார்.

"ஆமாம் ஐயா, நான் ஒரு திருடன்தான். மூன்று வருஷங்களுக்கு முன் நான் ஒரு இடத்தில் திருடினேன். அதன் பலனாக எனக்கு மூன்று வருஷம் கடுங்காவல் தண்டனை கிடைத்தது. அந்தத் தண்டனையை அனுபவித்துவிட்டு இன்றுதான் விடுதலையாகித் திரும்புகிறேன். நான் தண்டனை பெற்றதற்காக வருத்தப்படவில்லை. உங்களைப் போன்றவர்களை எளிதாக நாங்கள் புரிந்துகொள்ள முடியவில்லையே என்றுதான் கஷ்டப்பட்டேன். இப்படித்தான் ஒருவரின் உடைமையை நான் களவாடி விட்டேன். அவர் ஓடி உழைத்துப் பணம் சேர்த்திருந்தார். தம்முடைய பெண்ணின் கல்யாணத்துக்குப் பணம் பெரிதும் உதவுமென்று செலவு செய்யாமல் பணம் சேர்த்தார். பாவி, நான் அவரைச் சரியாகப் புரிந்துகொள்ள முடியவில்லை. உலோபி என்றும் பேராசை பிடித்தவர் என்றும் கேட்பார் பேச்சைக் கேட்டு அவர் பொருள்களைக் களவு செய்து விட்டேன். அவர் கோர்ட்டில் இவை யாவற்றையும் சொல்லித் துடித்து அழும் போது நான் அகப்பட்டுக் கொண்டதில் பரம திருப்தியே எனக்கு ஏற்பட்டது. பணத்தின் அருமை, கஷ்டப்பட்டுச் சேர்த்தவர்களுக்கல்லவோ தெரியும்! இன்று உங்கள் பெட்டியைப் பார்த்தவுடன் எனக்கு அந்த ஞாபகம் தான் வந்தது. முக்கியமான சாமான்கள் எவ்வளவு இருக்கின்றனவோ; எதற்காக வைத்திருந்தீர்களோ என்று ஓடோடி வந்தேன். நான் முன்பு செய்த தவறுக்குப் பிராயச் சித்தம் செய்து கொண்டேன்......" என்று காளிமுத்து வீராவேசத்துடன் பேசினான். உணர்ச்சியின் வேகத்தில் வார்த்தைகள் நீர்க்கமாக வெளிவந்தன.

பெரியவர் படுக்கையிலிருந்து எழுந்து உட்கார்ந்து கொண்டு காளிமுத்துவின் கரங்களைப் பிடித்துக் கொண்டார். "அப்பா! உண்மையில் நீ திருடனே இல்லை. சிறையிலிருந்து வெளியே வரும் எல்லோருக்குமே இம்மாதிரி தோன்றாது. நீ ஒரு வேதாந்தியப்பா. இன்று நீ புனிதனாகி விட்டாய். என் பெட்டியில் விலை உயர்ந்த பொருள்கள் இல்லாவிட்டாலும் அதை என்னிடம் சேர்த்து, என் உள்ளத்தில் அழியாத இடம் பெற்று விட்டாய்" என்று கூறினார்.

காளிமுத்து கண்களைத் துடைத்துக் கொண்டு, "ஐயா, காலையில் நன்றாக இருந்தீர்களே! திடீரென்று எப்படி உடம்புக்கு வந்தது!" என்று கேட்டான்.

பிரமுகர் காளிமுத்துவின் பெயரைத் தெரிந்து கொண் டிருந்தார். எனவே அவன் பெயர் சொல்லி அழைத்து "திருவாரூரில் ஒரு சோடா வாங்கிச் சாப்பிடலாம் என்று இறங்கினேன். பாதி சோடா சாப்பிடும்போதே மயக்கம் வந்து விட்டது. நின்ற இடத்தில் உணர்விழந்து விழுந்து விட்டேன். அதற்குள் வண்டி போய் விட்டது. பிறகு ஒரு வாடகைக் கார் வைத்துக் கொண்டு வீடு வந்து சேர்ந்தேன்" என்றார் பிரமுகர்.

காளிமுத்து பிரமுகர் வீட்டில்தான் சாப்பிட்டான். அன்றிரவு அங்குதான் படுத்துக் கொண்டான். தன் வாழ்நாளில் இதுவரை மன நிம்மதி காணாத அவன் அன்று முழு நிம்மதியுடன் வெகு இன்பமாகத் தூங்கினான்.

அதற்கு மறு நாள் மாலை வந்த தினப் பத்திரிகைகளில் காளிமுத்து செய்த செய்கையைப் பற்றி "மாஜி கைதி செய்த பிராயச்சித்தம்" என்ற தலைப்பில் வெளியாகி யிருந்தது.



உங்கள் பேனாவை
செலவதிகமான ரிப்பேர்
களிலிருந்து காப்
பாற்றுங்கள் !

# பார்க்கர்-க்வின்க்

உபயோகியுங்கள்

பாதுகாப்பளிக்கும்

# ஸால்வ்-X

அடங்கிய மை இது ஒன்றே




**திராவகம் மிகுந்த மைகளால் பேனு ஒழுகுதல் மற்றும் இதர கோளாறுகள் ஏற்படுகின்றன**

பார்க்கர் க்வின்க் உபயோகித்து இவ்விதக் கோளாறுகளைத் தவிருங்கள். ஸால்வ்-X அடங்கிய மை இது ஒன்றே. இந்தப் பொருள் கசண்டுகளைக் கரைத்து விடுகிறது. அரிப்பையும் அடைப்பையும் தடுக்கிறது. க்வின்க் அழியா வர்ணங்களிலோ, கழுவி அழித்துவிடக் கூடிய நிறங்களிலோ விரும்பியபடி வாங்கலாம்.

விநியோகஸ்தர்கள் : டாட்ஜ் & ஸேமர் (இந்தியா) லிட்.
த. பெ. 51, மதராஸ்

PKQ. 7764




**கோணல்**

நடந்த பல ஆண்டுகளுக்குப் பிறகு எங்கள் தெருவில் ஒரு அதிசயம் நிகழ்ந்தது. இது முற்றிலும் அப்படியே உண்மை. என்ன அப்படி நடந்தது? ஒன்றுமில்லை. ஒரு நாள் இரவு ஒரு வீட்டுக் கொல்லையில் தென்னை மரத்தில் ஏறித் தேங்காய் திருடிக் கொண்டிருந்த ஒரு உத்தமனைத் தெருவில் கொஞ்சம் தைரியமுள்ள நான்கு வாலிபர்கள் ஓடிப் பிடித்து விட்டார்கள். இதுதான் தெருவின் சரித்திரத்தில் அன்று வரை நிகழ்ந்திராத பெரிய அதிசயம். 'திருடனைப் பிடிக்க வாருங்கள்' என்று கூப்பிட்ட பொழுது தங்கள் வீட்டுத் திண்ணையை விட்டு இறங்காத பிரமுகர்களெல்லாம் திருடனைப் பிடித்துத் தூணில் கட்டி வைத்தவுடன் தாராளமாக அவனை அடிப்பதற்குக் கழி, உலக்கை முதலியவைகளை எடுத்துக் கொண்டு கூப்பிடாமலேயே வந்ததுதான் பாராட்டக்கூடிய அம்சம். கடைசியில் எல்லோருமாகச் சேர்ந்து திருடனைப் போலீஸில் ஒப்படைத்தார்கள். எப்படியோ தைரியமாகத் திருடனைப் பிடித்தவர்களின் பெருமையை, திருடனை அடித்த பிரமுகர்களின் பிரதாபம் விழுங்கி விட்டது. அவர்களுடைய பிரதாபம் ஒருபுறமிருக்க, அவர்கள் மனத்துக்குள்ளே எழுந்த பீதியும் கவலையும்தான் பெரிதாக இருந்தன.

இத்தனை நாளாக இல்லாமல் இப்பொழுதுதான் அடிக்கடி இரவு பகல் எந்த நேரத்திலும், புறக்கடை வழியாகவும் வாசல் வழியாகவும் வீடுகளுக்குள்ளே திருடர்கள் புகுந்து திருவிளையாடல் நடத்திக் கொண்டிருந்தனர். இந்நிலையில் திருடர்களிடமிருந்து தங்களை — அதாவது தெருவை, எப்படிக் காப்பாற்றுவது என்ற கவலை ஏற்படத்தானே செய்யும்? இந்தக் கவலைக்கு ஒரு முடிவு கட்டுவதற்குத் தெரு சம்பிரதாய சமாஜத்தைக் கூட்டுவதாகத் தீர்மானித்தார்கள். சம்பிரதாய சமாஜம் என்றால் ஏதோ பிரமாதமாக நினைத்துக் கொள்ள வேண்டாம். தெருப் பிரமுகர்கள் நினைத்தால் ஒரு கூட்டத்தைக் கூட்டி ஏதாவது பேசுவது சம்பிரதாயம். இதைத் தவிர வேறு எதையும் விசேஷமாகச் சொல்ல முடியாது. அகில உலகமும் அறியும் பிரமுகராக வேண்டும் என்ற ஆசைக்கு இடமில்லாவிட்டாலும், அந்தத் தெருவில் தாங்கள் ஒரு பிரமுகராக வேண்டும் என்று நினைப்பவர்களும், பிரமுகராகி விட்டவர்களாக நினைப்பவர்களும் ஒருவரை மிஞ்சி ஒருவர் தங்கள் மனத்துக்குப் பட்டதைப் பேசி, ஒரு முடிவுக்கும் வராமல் கலைவதுதான் சம்பிரதாய சமாஜத்தின் தனிச் சிறப்பும், நோக்கமும், கொள்கையுமாகும்.

மறுநாள் இரவு சம்பிரதாயத்துக்குப் பழுது ஏற்படாமல் வழக்கமாகக் கூடும் ஒரு வீட்டுத் திண்ணையில் எல்லோரும் கூடியிருந்தார்கள். எந்தெந்தப் பிரமுகர்களெல்லாம் ஒவ்வொரு கூட்டத்திலும் தவறாமல் பங்கு கொள்வார்களோ அவர்களெல்லோரும் வந்து விட்டார்கள். எல்லோரும் வந்து விட்டார்களா என்பதை லக்ஷ்மீ வீரராகவன் தன் மூக்குக் கண்ணாடியை கழற்றித் துடைத்துப் போட்டுக் கொண்டு பார்த்துவிட்டு மன ஆறுதல் அடைந்தான். யாராவது வராவிட்டால் அவர்களை வீட்டில் போய் அழைத்துக்கொண்டு வரும் சிரத்தை எப்பொழுதுமே அவனுக்கு உண்டு. எல்லோரும் வந்து விட்டார்கள் என்று தெரிந்த பின் அன்று கூட்டத்துக்கு யாரைத் தலைமை வகிக்கச் சொல்வது என்ற கவலை ஏற்பட்டது. திண்ணைக் கோடியில் தூணில் சாய்ந்தவாறு பூலோகமோ வைகுந்தமோ என்று ஒன்றும் புரியாதவர்போலப் பரபரப்போடு விழித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார் ஜகத் ரக்ஷக அய்யங்கார். அவரை அன்றையக் கூட்டத்துக்குத் தலைமை தாங்க வைப்பதுதான் எல்லோருக்கும் தகுதியானதாகப் பட்டது.

ஜகத்ரக்ஷக அய்யங்காருக்கு இரண்டு காதுகள் உண்டு. ஆனால் அவைகள் கேளா. யாராவது ஓடினால் ஏதோ ஓடுகிறார்கள் என்று நினைத்துக் கொள்வார். உட்கார்ந்திருந்தால் ஏதோ உட்கார்ந்திருக்கிறார்

கள் என்று நினைத்துக் கொள்வார். பேசினால் ஏதோ பேசுகிறார்கள் என்று நினைத்துக் கொள்வார். அவ்வளவுதான்; இதைத் தவிர யாருக்கும் அவரால் எவ்வித இடையூறும் ஆபத்தும் ஏற்படாது. அவரோடு பேசுகிற வர்கள் யாரா யிருந்தாலும் கொஞ்சம் சாரீர பலம் பொருந்தியவர்களாக இருக்க வேண் டும். இந்த விஷயத்தில் திருவேங்கடம்தான் அவரோடு பேசுவதற்குத் தகுதி உள்ளவன். அவன் அவர் வீட்டுக்குப் பக்கத்து வீட்டில் இருந்தான். அவரோடு உரத்த குரலில் அடிக்கடி பேசிப் பழக்கப்பட்டிருந்தான்.

திருவேங்கடம் எழுந்து ஜகத்ரக்ஷக அய்யங் காரிடம் போய் இரண்டு கையையும் குவித்து அவர் காதுக்கு சமீபமாக வைத்துக் கொண்டு, "இன்று கூட்டத்துக்கு நீங்கதான் தலைமை வகிக்க வேண்டும் என்று எல்லோரும் உங் களைக் கேட்டுக் கொள்கிறார்கள்..." என்றான்.

ஜகத் ரக்ஷக அய்யங்கார் சிரித்துக் கொண்டே "நானா தலைமை வகிக்கணும்? ஏதுக்கடா, நீங்க ளெல்லாம் ஏதோ கூட்டம் கூடிப் பேசிக் கொண் டிருக்கிறீர்களே என்று வந்தேன்" என்றார்.

"இல்லை, நீங்கள் தான் பெரியவர். நீங்கள்தான் தலை மை வகிக்கணும்" என்று கத்தினான் திருவேங்கடம்.

"சரி! எதுக் காக இந்தக் கூட் டம்?" என்று கேட்டார் ஜகத் ரக்ஷக அய்யங்கார்.

"நேற்று ராத்திரி நம்ம தெருவுக்கு ஒரு திருடன் வந்தான். அவனைப் பிடித்துப் போலீ ஸிலே ஒப்படைத்தோம். அதற்காக...." என்றான் திருவேங்கடம், ஏதோ பெரிய சங்கை எடுத்து மூச்சைப் பிடித்துக் கொண்டு ஊதுகிறவன் போல.

"திருடன் வந்தானா? பிடித்தீர்களா? பேஷ்-ஆனால் நான் அந்தத் திருடனைப் பார்க்கவில்லை யேடா? பார்த்திருந்தால் அவனைப் பற்றி ஏதாவது இந்தக் கூட்டத்திலே சொல்ல லாம்" என்றார் ஜகத்ரக்ஷக அய்யங்கார், அப் பொழுதுதான் வேறு ஏதோ உலகத்தி லிருந்து வந்தவர் போல்.

"நீங்கள் அதைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். நீங்கள் சாதாரணமாய்த் தலைமை வகித்தால் போதும். நீங்கள் சொல்ல வேண்டியதை யெல்லாம் நான் சொல்லிக் கொள்கிறேன்" என்றான் திருவேங்கடம்.

"அப்படியானால் சரி!" என்று சொல்லி ஜகத்ரக்ஷக அய்யங்கார் கூட்டத்துக்கு நடு நாயகமாக வந்து உட்கார்ந்தார். திருவேங்



கடம் அவருக்குச் சமீபமாகப் போய் நின்று கொண்டு, "இப்பொழுது நமது தலைவருக் காக நான் பேசுகிறேன். நேற்று ராத்திரி நமது தெருவுக்குத் திருடன் வந்தது பற்றியும், இனிமேல் நமது தெருவைத் திருடர்கள் வசத் திலிருந்து எப்படிக் காப்பாற்றுவது என்பது பற்றியும் நமது பட்டாபிராம அய்யங்கார் அவர்களை விரிவாக உபன்யாசம் செய்யும் படி கேட்டுக் கொள்கிறேன்" என்று கூறி விட்டு உட்கார்ந்தான்.

பட்டாபிராமய்யங்கார் மெதுவாக எழுந்து தமது மேல் அங்க வஸ்திரத்தினால் கை மோதிரத்தை ஒரு தடவை துடைத்துக் கொண்டு, தம் மார்பையும் ஒரு தடவை பார்த்து விட்டுக் கனைத்துக் கொண்டே பேசத் தொடங்கினார்: "நேற்று ராத்திரி நம்ம தெருவுக்குத் திருடன் வந்தான். திருடன் வந்த வரையில் சரிதான். ஆனால் அது எப்படி இருக்கிறது என்றால் சட்டத்துக்குப் புறம் பானதாக இருக்கிறது. பொதுவாக நாம் பார்க்கப் போனால் திருடனைப் பிடித்த வர்கள் நம்முடைய சமாஜத்தின் சார் பாகப் பிடித்தார் களா இல்லையா என்பது தான் இப் பொழுது கேள்வி. சமாஜத்தின் ஆதர வும் அனுமதியும் இல்லாமல் தெரு விலுள்ள வாலிபர் கள் திருடனைப் பிடித்தது மிகவும் கண்டிக்கக் கூடி யது..."

பட்டாபிராமய் யங்கார் பேசிக் கொண்டிருக்கும் பொழுதே சின்னச் சக்கர பாணி குதித்தெழுந்தார். "பட்டாபிராமய் யங்கார்வாள், நீங்க அப்படிப் பேசறது ரொம்பத் தப்பு. முதலில் திருடன் சமாஜத் தின் சார்பாக வந்தானா அல்லது சொந்த ஹோதாவில் வந்தானா என்று தெரிந்து கொள்ள வேண்டும்" என்றார்.

"உங்கள் சமாஜத்தின் சார்பாகத்தான் நான் திருட வந்தேன் என்று அவன் சொல்லி இருந்தால் அவனை ஏன் நாம் அடித்துப் போலீஸில் கொண்டு போய் ஒப்படைக்கப் போகிறோம்?..." என்றான் லக்ஷ்மிவீரராகவன் எழுந்து நின்று கொண்டு.

பட்டாபிராமய்யங்கார் மறுபடியும் கனைத் துக் கொண்டு மார்பில் கை வைத்துக் கொண்டு பேச ஆரம்பித்தார். "இப்பொழுது விஷயம் விளங்கி விட்டதா, திருடன் வந் ததும் சமாஜத்தின் சார்பிலில்லை அவனைப் பிடித்ததும் சமாஜத்தின் சார்பிலில்லை என்று? ஆகவே இனிமேல் நம்முடைய தெருவுக்கு வருகிற திருடனும் சமாஜத்தின் சார்பாக

வரவேண்டும். அவனைப் பிடிப்பவர்களும் சமாஜத்தின் சார்பாகவே பிடிக்க வேண்டும்.''



"திருடனைப் பிடிக்க வேண்டுமென்றால் ராத்திரி எல்லாம் சமாஜத்தின் சார்பாகக் கண் விழித்துக் கொண்டல்லவா இருக்க வேண்டும்?'' என்றான் கிச்சாமி.

"கண் விழித்தால் என்ன? நூற்று முப்பத்தைந்தாம் நம்பர் வீட்டு வாசல் குறட்டிலே எல்லோரும் உட்கார்ந்து சீட்டு ஆடினால் போச்சு? அங்கேதான் முனிசிபல் விளக்கு எரிகிறதே?'' என்றான் சமாஜத்தின் பொக்கிஷதார் தோத்தாத்ரி.

எப்பொழுதும் சிரித்த முகமாகவே இருக்கும் கருப்பு உப்பிலி அசட்டுச் சிரிப்பின் மெருகு குறையாமல், "நல்ல யோசனை. சமாஜத்தின் சார்பாகச் சீட்டாடினால் ராத்திரி வேளையில் ஒரு பொழுது போக்காகவும் இருக்கும்'' என்றான்.

"சீட்டாடுவது பற்றி ஆக்ஷேபணை இல்லை. ஆனால் சமாஜத்தின் சார்பாகக் காசு வைத்துச் சீட்டாடாமல் இருக்க வேண்டுமென்றுதான் கேட்டுக் கொள்கிறேன். தோத்தாத்ரி சமாஜத்தின் பொக்கிஷதார் ஆனதினால் இதை நான் சொல்ல வேண்டியிருக்கிறது'' என்றான் சீமா.

"எனக்குச் சீட்டாடத் தெரியாது. ஆகையினால் அதை நான் ஆக்ஷேபிக்கிறேன்'' என்றான் மொட்டை.

"உனக்குச் சீட்டாடத் தெரியாவிட்டால் கவலைப்படாதே. ராத்திரி வேளையில் தினம் எங்காத்துக்கு வா. நான் ராமாயணம் படிக்கிறேன். கேளு'' என்றார் தாம் சொல்லும் ராமாயணத்தைக் கேட்க ஆசாமி தேடிக் கொண்டிருக்கும் பிச்சுவய்யங்கார், டப்பியைத் திறந்து ஒரு தரத்துக்குப் பொடி எடுத்துக்கொண்டே.

"நீங்கள் சொல்கிற ராமாயணத்தை வாயாலே சொன்னால் புரியும். மூக்காலே சொல்லுகிறீர்களே......?'' என்றான் சீமா.

"ராமாயண மிருக்கட்டும். நான் ஒரு யோசனை சொல்லுகிறேன். ஏன் நமது சமாஜத்தின் சார்பாகத் தெருவிலே நாடகங்கள் போடக்கூடாது? நான் நெடு நாட்களாக இந்த ஊர் நாடக சபாவுக்குப் போய் வருகிறேன். எனக்கு அவர்கள் நல்ல வேஷமாகக் கொடுத்து நடிக்கச் சான்ஸ் கொடுப்பதே இல்லை. ஆகையால் நம்முடைய சமாஜத்தில் நாடகம் போடுவதென்று தீர்மானித்தால் நாடகக் கலையை வளர்த்தது போலவும் இருக்கும், எங்களுக்கும் நல்ல சான்ஸ் கொடுத்தது போலவும் இருக்கும்'' என்றான் ரங்காச்சாரி.

"நாடகம் போடுவதென்றால் அதற்கு வேண்டிய சீன், முதலிய வசதிகள் எல்லாம் வேண்டாமா?'' என்றான் மொட்டை.

"சீன் வசதிகள் ஒன்றும் அவசியமே இல்லை. இரண்டு பெஞ்சியைப் போட்டு விட்டு அதற்கு முன்னால் வந்து நின்று பழைய தெருக்கூத்துப் பாணியிலேயே எல்லாம் நடத்தி விடலாம். இதனால் பழைய கலைக்குப் புத்துயிரளித்த பெருமைகூட நமக்கு இருக்கும்......'' என்றான் ரங்காச்சாரி.

"பேஷ்! பேஷ்! நாடகம் போடுவதாக இருந்தாலும் சரி, எது போடுவதாக இருந்தாலும் சரி, அதை எங்கள் வீட்டு வாசலிலேயே போடுங்கள். அதற்குப் பதிலாக என் வீட்டை ரிப்பேர் செய்து கொடுத்து விடுங்கள், அதுபோதும்'' என்றார் அந்த வீட்டுக்குச் சொந்தக்காரரான சுந்தரமய்யங்கார்.

"நாடகம் எப்படிப் போடுவதாய் இருந்தாலும் சரி, எத்தனை நாடகம் போடுவதாய் இருந்தாலும் அதற்கெல்லாம் கதை, வசனம் பாட்டெல்லாம் நான் எழுதிக் கொடுக்கத் தயார்'' என்றான், 'நீ வா' என்ற சுருக்கெழுத்துப் பெயரில் எழுத்தாளர் உலகத்தில் கதிரொளியாகப் பிரகாசிக்க நினைக்கும் நீலமேகாச்சாரியார் குமாரன் வாசுதேவன்.

"கண்ட கண்ட நாடகங்களைப் போடுவதில் பயனில்லை. எந்த நாடகம் போடுவதாக இருந்தாலும் அது நம்முடைய சம்பிரதாயத்தை ஒட்டியதாக இருக்க வேண்டும்'' என்றார் பி. பி. எஸ். அய்யங்கார்.

"ஆமாம். எதைச் செய்வதாய் இருந்தாலும் நம்முடைய சம்பிரதாயத்திலிருந்து நழுவக் கூடாது. நாடகம் போடுவதாக இருந்தால் முதலில் நம்முடைய தேசிகன் அருளிச் செய்த 'சூர்யோதய சங்கல்ப'த்தைப் போடுவதுதான் உசிதம்'' என்றார் பெரிய சக்கரபாணி.

உடனே சின்னச் சக்கரபாணி சீறி எழுந்தார்: "நம்முடைய சம்பிரதாயம் தெரியாத



★ ○ ★ ○ ★ ○ ★ ○ ★ ○ ★ ○ ★

### தாகம்

முற்றும் துறந்த ஞானியின் மேல் காதல் கொண்ட சலோமி என்னும் இளவரசியின் கதையை மேல் நாட்டில் பல ஆசிரியர்கள் பல விதங்களில் தீட்டி மகிழ்ந்தார்கள். அவற்றில் எல்லாம் வைத்து ஆஸ்கார் ஓயில்ட் என்ற பிரபல ஆசிரியர் நாடகமாக அமைத்துள்ளதுதான் சாலச் சிறந்தது; கவிதை நயமும் உணர்ச்சி வேகமும் நிறைந்தது என்று மேனாட்டு இலக்கிய உலகம் போற்றுகிறது. அந்த உணர்ச்சி வேகத்தோடேயே தமிழில் காவலாகத் தர மொழிபெயர்ப்பு ஆசிரியர் முயன்று வெற்றியும் பெற்றிருக்கிறார். இந் நூலுக்கு ஆஸ்கார் ஓயில்டின் இலக்கியத்தில் மிக்க ஈடுபாடு கொண்டுள்ள திரு வி. ஆர். எம். செட்டியார் முன்னுரை கொடுத்திருக்கிறார்.

தமிழாக்கம்: அகிலன்; பிரசுரம்: புதுமைப் பிரசுரம், பெண்ணாடம், தென் ஆற்காடு; விலை: ரூ. 1-4.

### 1. சிற்றம்பலம்
### 2. பின்னு செஞ்சடை
**(திருமுறை மலர்கள்)**

சைவமும் தமிழும் தழைக்கப் பெரும் ஆதரவாக இருந்தவை தேவாரப் பாடல்கள். அவற்றுள் சம்பந்தர் பாடிய தேவாரப் பதிகங்களில் பதினொரு பாடல்களுக்குரிய விளக்கத்தைச் **சிற்றம்பலம்** என்னும் நூலில் காணலாம். தில்லை, திருவாடுதுறை, திருக்கழுமலம், திருக்கானப்பேர், திருவேடகம், திருக்காளத்தி, திருக்கருகாவூர், திருவைகாவூர் என்னும் தலங்களைப் பற்றிய பாடல்களும் இன்னும் சில பொதுப்பாடல்களும் இந்நூலில் சுவையுடன் விளக்கப்பட்டிருக்கின்றன.

**பின்னு செஞ்சடை** என்னும் நூலில் சம்பந்தர் தேவாரப் பதிகங்களில் இரண்டாம் திருமுறையிலிருந்து எடுத்த பன்னிரண்டு பாடல்களுக்குரிய விளக்கத்தைக் காணலாம். பாடல்களுக்கு ஏற்றபடி வெவ்வேறு வகையில் நிலைக்களத்தை அமைத்து விளக்கங்கள் எழுதப்பட்டிருக்கின்றன.

எழுதியவர்: கி. வா. ஜகந்நாதன்; பிரசுரம்: அமுத நிலையம், தேனாம்பேட்டை, சென்னை-18. விலை: ஒவ்வொன்றும் ரூ. 1-0-0.

★ ○ ★ ○ ★ ○ ★ ○ ★ ○ ★ ○ ★

வர்களெல்லாம் ரொம்பத் தெரிந்த மாதிரி சபையிலே பேச வரக்கூடாது. இதற்குத் தான் நான் இரண்டு தடவை இந்தச் சமாஜத்திலிருந்து விலகுவதாக ராஜீநாமா கடுதாசி கொடுத்தேன். தேசிகன் அருளிச் செய்தது சூர்யோதய சங்கல்பமில்லை; சங்கல்ப சூர்யோதயம்."

தனக்கு இங்கிலீஷ் தெரியாது என்று யாராவது நினைத்து விடுவார்களோ என்ற அச்சத்தின்மீது பேசும்போதெல்லாம் ஆங்கில வார்த்தைகளையும் உதாரணங்களையும், அள்ளி வீசும் யக்ஞமாச்சாரியார் இரண்டு வார்த்தைகள் சொல்ல நினைத்து, "நாம் நம்முடைய சம்பிரதாயத்தைப் பற்றிச் சொல்லப் போனால் 'ஸெயின்ட் அகஸ்டீன்' என்ற கிறிஸ்துவப் பாதிரியார் சொல்வதைக் கவனிக்க வேண்டும்" என்று சொல்லிக் கொண்டிருக்கும் போதே புலி உறுமி எழுந்தது போன்ற சப்தம் கேட்டது ஒரு மூலையிலிருந்து. எல்லோருடைய பார்வையும் அங்கு சென்றது. கூட்டத்தில் சிறிது சலசலப்பு ஏற்பட்டது. டீப் வேணுகோபாலன் திடீரென்று எழுந்திருந்து "எதிராத்துத் திண்ணையில் இருட்டில் யாரோ உட்கார்ந்திருக்கிறான்!" என்றான் குளறியபடி. உடனே ரங்கசாமி "திருடன் திருடன்" என்று கத்தினான்.

"திருடனா? நல்ல வேளையாய்ப் போய் விட்டது. திருடனை இப்பொழுது பிடிப்பதா வேண்டாமா என்று இந்தக் கூட்டத்திலேயே தீர்மானம் நிறைவேற்றி விடலாம்" என்றான் லக்ஷ்மி வீரராகவன்.

"தீர்மானமும் வேண்டாம் ஒன்றும் வேண்டாம்! இத்துடன் கூட்டத்தைக் கலைத்து விட்டுப் பத்திரமாக அவரவர்கள் வீட்டுக்குப் போவதுதான் நல்லது" என்றான் ரங்கசாமி. இரண்டொருவர் மெதுவாக எழுந்து வீட்டுக்குப் போகவும் சித்தமாயினர். கூட்டத்தில் இப்படித் திடீரென்று குழப்பம் ஏற்படவே எதிர் வீட்டில் இருட்டில் உட்கார்ந்திருந்த உருவம் எழுந்து அவர்களை நோக்கி வந்தது. அவள் வேறு யாருமில்லை; சேச்சிப் பாட்டி.

"என்னமோ நீங்களெல்லாம் திருடனைப் பற்றிப் பேசப்போகிறீர்கள் என்று கேள்விப்பட்டு என்னதான் பேசுகிறீர்கள் என்று கேட்க வந்தேன். நாலு நாளைக்கு முன்னாலே எங்காத்து வாசலிலே புதுசா வாங்கின வெள்ளைப் புடவையை நனைத்து உணர்த்தி இருந்தேன். யாரோ ஒரு கட்டையிலே போறவன் அதை அவிழ்த்து எடுத்துக் கொண்டு போய் விட்டான். இவ்வளவு நேரம் கூடிக் கூடிப் பேசினீர்களே தவிர என் புடவை கெட்டுப் போனதைப் பற்றி நீங்க ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. என்ன கூட்டம் வேண்டிக் கிடக்கிறது?" என்று சொல்லி விட்டு வேகமாக நடந்தாள் சேச்சிப் பாட்டி.

எதிர் வீட்டில் இருட்டில் உட்கார்ந்திருந்தது திருடனாக இல்லாமல் சேச்சிப் பாட்டியாக இருந்ததில் எல்லோர் மனசிலும் ஏற்பட்ட பதை பதைப்பு நீங்கி அமைதி ஏற்பட்டது. மறுபடியும் கூட்டம் தொடர்ந்து நடக்க ஆரம்பித்தது. பட்டாபிராமய்யங்கார் பேச ஆரம்பித்தார். "இப்பொழுது திருடர்கள் வசத்திலிருந்து நம்முடைய தெருவைப் பாதுகாக்கும் விஷயத்தில் நான் முடிவாக ஒரு யோசனை சொல்லுகிறேன். நமது தெரு இரு சாரிக்கும் புறக்கடைப் பக்கம் உள்ள சந்துக்கு இரு கோடியிலும் திருடர்கள் புகாத வண்ணம் இரும்புக் கதவுகள் போட்டு விடுவோம்" என்று சொல்லி விட்டுத் திருவேங்கடத்தின் முகத்தை நோக்கினார்.

திருவேங்கடம் எழுந்தான்: "பட்டாபிராம அய்யங்கார் எப்பொழுதுமே நமக்குத் தரமான யோசனைகள் சொல்லிக் கொண்டுதானிருக்கிறார். அவருடைய யோசனையின்பேரில் தான் நான்கூடக் காங்கிரஸ்காரனானேன். தெரு புறக்கடைப்புறச் சந்துக்கு 'கேட்'

போடும் விஷயமாகத் தெருவின் பிரதிநிதியாகவும், இந்த சமாஜத்தின் பிரதிநிதியாகவும் முதல் மந்திரியை பேட்டி காண என்னை அனுப்புவீர்களென்று நம்புகிறேன்'' என்றான்.

''முதல் மந்திரியைப் பேட்டி காணுவதற்கு முன்னால் இன்னொரு விஷயமும் யோசிக்க வேண்டியிருக்கிறது. கொல்லைப்புறச் சந்துக்குக் கதவு போடுவதாலோ வேலி கட்டுவதாலோ பிரயோசனமில்லை. ஏனென்றால் இப்பொழுது வருகிற திருடர்களெல்லாம் வாசல்புறமாகவே வருகிறார்கள். ஆகையால் கொல்லைச் சந்துக்குக் கதவு போடுவதோடல்லாமல் தெருப் பக்கத்தில் இரு கோடியிலும் பாதுகாப்பாக கதவு போடுவது மிகவும் புத்திசாலித்தனமாக இருக்கும்'' என்றான் டீப் வேணுகோபாலன்.

''நான் இதை முழுமனதோடு ஒப்புக்கொள்கிறேன். கொல்லைப்புறமோ வாசற்புறமோ வேறு கதவு மாத்திரம் போடுவதில் புண்ணியமில்லை. உண்மையான பாதுகாப்பு வேண்டுமானால் நம்முடைய தெருவைச் சுற்றிலும் ஒரு பெரிய அகழி வெட்டுவது நல்லது'' என்றான் கிச்சாமி.

''அகழி வெட்டினால் மாத்திரம் போதாது. அதைச் சுற்றிலும் ஒரு கோட்டையும் கட்டிவிட்டால் இன்னும் நல்லது'' என்றான் சீமா.

''அகழியும் கோட்டையும் கட்டுவது நல்லதுதான். ஆனால் அதற்கு அசாத்திய பணம் செலவழியுமே?'' என்றான் ரங்காச்சாரி.

''பணத்தைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். அடுத்த முனிஸிபல் தேர்தல் வரும்போது எந்த அபேக்ஷகர் அகழியும் கோட்டையும் கட்டப் பணம் தருகிறாரோ அவருக்கே நாம் வோட்டுப் போடுவோம்'' என்றார் பட்டாபிராமய்யங்கார்.

''இது சரியான யோசனை! ஆகையால் திருடர்களிடமிருந்து நம்முடைய தெருவைப் பாதுகாக்கும் பிரச்னையை அடுத்த முனிஸிபல் தேர்தலின்போது வைத்துக் கொள்வோம்'' என்றான் திருவேங்கடம்.

''ஆமாம், அப்பா! எனக்குத் தூக்கம் வருகிறது கூட்டத்தை ஒரு தினுசாக முடி'' என்றார் சக்கரபாணி.

இவ்வளவு நேரமும் அக்கிராசன பீடத்தில் அமர்ந்து எல்லாவற்றையும் பார்த்துத் 'திரு திரு'வென்று விழித்துக் கொண்டிருக்கும் ஜகத்ரக்ஷகய்யங்காரிடம் திருவேங்கடம் நெருங்கி ''இத்தோடு கூட்டத்தைக் கலைத்து விடுகிறேன்'' என்றான் உரத்த குரலில்.

''கூட்டத்தைக் கலைக்கிறாயா? ஏன்? இன்னும் கொஞ்ச நாழிகை அவர்கள் இன்னும் ஏதாவது பேசிக் கொண்டிருந்தாலும் இருக்கட்டுமே? அதை ஏன் நீ கலைக்கிறாய்......?'' என்றார் ஜகத்ரக்ஷகய்யங்கார்.

''எல்லாம் பேசி முடிவுக்கு வந்தாய் விட்டது. சம்பிரதாயப்படி தலைவர் கூட்டம் முடிந்து விட்டதாகச் சொல்ல வேணும்'' என்றான் திருவேங்கடம்.

''சம்பிரதாயமா...? சம்பிரதாயம் என்றால் கூட்டத்தை முடித்துவிடு. எனக்கென்ன தெரிகிறது? கூட்டத்தை ஆரம்பிக்கிறது முடிக்கிறது எல்லாம் நீங்கதானே....அதிருக்கட்டும் திருடன் விஷயம் என்ன ஆச்சு...?'' என்றார்.

''அதையெல்லாம் பற்றிச் சாவகாசமாக ஒரு நாளைக்குச் சொல்கிறேன்'' என்று சொல்லி விட்டு, வந்திருந்த எல்லோருக்கும் வந்தனோபசாரம் சொல்லி அத்துடன் கூட்டம் முடிந்ததாகச் சம்பிரதாய ரீதியாகச் சொன்னான் திருவேங்கடம்.

---

## வித்யா

இது ஒரு ருஷிய நாவல். இதை எழுதிய ஆசிரியர் நோஸோவ் அவர்கள் சோவியத் நாட்டில் சிறுவர் இலக்கிய கர்த்தாக்களின் மிகச் சிறந்த நிபுணர். அவர் பதினாறு வயது பாலகன் ஒருவன் தானே தன் கதையைச் சொல்லுவது போல இந்தக் கதையைப் புனைந்திருக்கிறார். அதில் நல்ல வெற்றியும் பெற்றிருக்கிறார். அவர் இலக்கிய மேதையைப் பாராட்டி ருஷ்ய நாட்டின் மிகச் சிறந்த பரிசுகளில் ஒன்றான 'ஸ்டாலின் பரிசை' அவருக்கு வழங்கியிருப்பதில் ஆச்சரியமில்லை.

''வித்யா'' நாவலைப் படிக்கும்போது, அந்த நாட்டில் பல்வேறு துறையில் ஈடுபட்டு உழைப்பவர்கள் ஒவ்வொருவரும் எவ்வளவு தூரம் அவர்கள் நாட்டு முன்னேற்றத்துக்காகப் பாடுபடுகிறார்கள் என்பது நன்றாகத் தெரிகிறது. குழந்தைகளுக்குள் ஒற்றுமை ஏற்பட; குழந்தையாக இருக்கும்போதே அவர்களுக்குச் சமூக சேவை செய்யும் ஆற்றலும் திறனும் உண்டாக; தங்கள் தேசத்தின் உயர்வுக்கும் முன்னேற்றத்துக்கும் உழைப்பு மிகவும் அவசியம் என்பதை அவர்களுக்கு உணர்த்த இந்நூலாசிரியர் மிகச் சிறந்த சேவை செய்திருக்கிறார்.

ருஷிய நாட்டில் தொழிலும் படிப்பும், வேடிக்கையோடும், விளையாட்டோடும் கலந்து மிளிர்வதை நாவலில் பல இடங்களில் காண முடிகிறது. அந் நாட்டுச் சிறுவர்கள் பள்ளிக்கூடத்தை விட்டு வெளி வரும்போது சுய நம்பிக்கையோடு வருகிறார்கள். பள்ளிப் படிப்பால் வாழ்க்கை வீணாகி விட்டதே, ஒருவேலையும் செய்யும் திறனில்லையே என்று மனமுடைந்து உயிரை விடும்படி ருஷிய நாட்டுப் பள்ளிக்கூடப் படிப்பு முறை இல்லை என்பதெல்லாம் இந்த நாவலின் மூலம் தெரிந்து கொள்ள முடிகிறது.

ஊக்கமும் உளவலியும் படைத்த உண்மைச் சிறுவர்களின் உயிர்ச் சித்திரமாகிய வித்யா என்னும் பெருங்கதையை ஸ்ரீ எஸ். ராமகிருஷ்ணன் தமிழாக்கியிருக்கிறார். ருஷ்ய நாட்டில் சிலகாலம் தங்கி அந் நாட்டுச் சூழ்நிலையை நிலைக்களனாக அமைத்துக் கொண்டு தமிழ் நாவல் ஒன்றை எழுதியது போலவே இருக்கிறது. இந்நூலைத் தமிழாக்கியதன் மூலம், தமிழுக்கும், குழந்தைகள் இலக்கிய வளர்ச்சிக்கும் ஸ்ரீ ராமகிருஷ்ணன் சிறந்த சேவை செய்திருக்கிறார்.

குழந்தைகளும், உபாத்தியாயர்களும், பெற்றோர்களும் படித்துப் பயன்பெற வேண்டிய நூல்.

வெளியிடுவோர்: மலர் நிலையம், 133. பிராட்வே, சென்னை-1; விலை ரூ. 2—0—0.

---

# யோகாசன சிகிச்சை

வி. என். குமாரஸ்வாமி

## 14. சந்தேக விளக்கம்

**கேள்வி:**—எனக்கு ஆறு வருஷ காலமாகப் பீனிச நோய் இருக்கிறது. அநேக வித மருந்துகள் சாப்பிட்டேன். நசியம் பண்ணினேன். மூக்கில் ஆபரேஷன் செய்து கொண்டேன். ஒரு வகையிலும் குணம் தெரிய வில்லை. மூக்கடைப்பு, தும்மல், மலச்சிக்கல் முதலிய உபத்திரவங்கள் இன்னமும் இருந்து வருகின்றன. வயிற்றுக்கு ஒரு தரம் பேதி மருந்து சாப்பிட்டால்தான் வெளிக்குப் போகிறது. தும்மல் அதிகமானால் மூச்சு விடக் கஷ்டமா யிருக்கிறது. 'கல்கி'யில் தங்கள் கட்டுரைகளைப் பார்த்துச் சிரசாசனம் மட்டும் 30 நிமிஷம் செய்து வருகிறேன், இந்த நோய்களுக்கு வேறு எந்த ஆசனங்களைச் செய்யலா மென்பதைத் தயவுசெய்து எனக்கு விவரமாகத் தெரிவிக்க வேணும்.

**பதில்:**—மலச்சிக்கலை முதலில் தீர்க்க வேண்டும். அதற்கு வெறும் சிரசாசனம் மட்டும் போதாது. புஜங்காசனம் மூன்று தடவை, சலபாசனம் மூன்று தடவை, தனுராசனம் மூன்று தடவை, பஸ்சிமோத்தானு மூன்று தடவை, ஜானுசிர்சாசனம் மூன்று தடவை, ஹாலாசனம் ஆறு தடவை, சர்வாங்காசனம் பதினைந்து நிமிஷம், மத்ஸ்யாசனம் மூன்று நிமிஷம், சிரசாசனம் இருபது நிமிஷம், அர்த்த மத்ஸ்யேந்திராசனம் மூன்று தடவை, யோக முத்திரா ஆறு தடவை, உட்டியாணு, நௌளி பத்து தடவையும் சாந்தி ஆசனம் ஐந்து நிமிஷம் இவை இத்தனையும் செய்ய வேண்டும். பிறகு பீனிசத்துக்காக மூச்சுப் பயிற்சிகளையும் செய்து வர வேண்டும்.

உணவிலும் மாறுதல் அவசியம். முழுத் தவிட்டுடன் அரிசியைக் கஞ்சி வடிக்காமல் சமைத்து உண்ண வேண்டும். காய் கறி, கீரை வகைகள் அதிகம் சாப்பிட வேண்டும். பால் பழங்கள் நிறையச் சேர்க்க வேண்டும். இப்படிச் சில மாதங்கள் சாப்பிட்டு வந்தால் மலச்சிக்கல் விலகும். காபி டீ, சாப்பிடக் கூடாது. மற்ற லாகிரி வஸ்து எதுவும் கூடாது.

**கேள்வி:**—காது கொஞ்சம் கொஞ்சமாகச் செவிடாகிக் கொண்டு வருகிறது. அதற்கு என்ன ஆசனம் செய்யலாம்?

**பதில்:**—காது செவிடு பல காரணங்களால் ஏற்படும். எதனால் ஏற்பட்டது என்று தெரிந்தால் ஆசனங்களால் போகுமா என்பதைச் சொல்லலாம். ஒருகால் இரத்த ஓட்டம் சரிவர இல்லாமையினால் காது மந்தம் ஏற்பட்டது என்றால் ஆசனம் செய்யலாம். குணமேற்படும். அதற்குப் புஜங்காசனம், மத்ஸ்யாசனம், சிரசாசனம், அர்த்த மத்ஸ்யேந்திராசனம், திரிகோணு இவைகளைச் செய்ய வேண்டும். விவரங்களுக்கு நேரில் எழுதவும், அல்லது ஆரோக்கிய ரகசியத்தில் பார்க்கவும்.

**கேள்வி:**—ஆசனங்கள் செய்து முடித்து அரைமணி நேரம் பொறுத்துத்தான் குளிக்க வேண்டுமென்று சொல்லுகின்றீர்களே அது ஏன்? உடனே குளித்தால் என்ன ஆகும்?

**பதில்:**—ஆசனங்கள் செய்வதால் உடல் அவயவங்கள் எல்லாம் பயிற்சி பெற்றிருக்கும் சாதாரணமாகப் பயிற்சி அடைந்த பாகத்துக்கு அதிக இரத்தம் போய்க் கொண்டிருக்கும். அவை படிப்படியாகக் குறைந்து சம நிலைக்கு வர அரைமணி நேரம் ஆகும். அதற்குள் வேறு வேலைகள் செய்யாமல் இருந்தால்தான் ஆசனங்களால் பூரண பலன் அடைய முடியும். உடனே குளித்தால் சருமத்திற்கு இரத்தம் திரும்பப்பட்டுப் பயிற்சி பெற்ற அவயவங்களுக்குப் போதிய இரத்த போஷணை கிடைக்காமல் வாடும். அதனால் எந்த வேலையும் செய்யாமல் வெறுமனே உட்கார்ந்து கொண் டிருக்க வேண்டியதில்லை. தேக சிரமம் அதிகம் இல்லாத சாதாரண வேலைகளைக் குளிக்கப் போகும் வரையில் செய்யலாம்.

**கேள்வி:**—சாப்பிட்ட உடன் குளித்தால் என்ன ஆகும்?

**பதில்:**—குளித்துப் பார்த்தால் தெரிந்து விடுகிறது. அஜீரணம் ஏற்பட்டுப் பேதியுமாகும். சாப்பிட்ட ஆகாரத்தை ஜீரணிக்கக் குடல்களுக்கு அதிக இரத்தம் போய்க் கொண்டிருக்கும். அப்போது குளித்தால் இரத்தம் குடல்களுக்குப் போவது தடைப்பட்டுச் சருமத்திற்கு அதிகம் வரத் தொடங்கும். அதனால் வயிற்றிலுள்ள ஆகாரம் சரிவர ஜீரணமாகாமல், அஜீரணம், வயிற்று வலி, பசியின்மை, மந்தம், பேதி முதலிய நோய்கள் உண்டாகும்.

**கேள்வி:**—தங்கள் அருமையான கட்டுரைகளைப் படித்ததின் பயனாக முழுச் சோம்பேறியாக இருந்த நான், ஆசனங்களைச் செய்ய வேண்டுமென்ற ஆவலால் தூண்டப்பட்டு, சில ஆசனங்களைச் செய்து இப்பொழுது புது மனிதனாக மாறி விட்டேன். சோம்பல் என்பதே என் அகராதியில் இல்லாமல் போய் விட்டது. பார்க்கும் நண்பர்கள் 'நீ முன்னைவிட நன்றாய்க் காணப்படுகிறாய்' என்று சொல்லும் அளவுக்கு முகத்தில் தேஜஸும், களையும் ஏற்பட்டிருக்கிறது. இதற்கு என்றென்றும் தங்களுக்கு நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறேன். ஆனால் ஒரு குறை. அதாவது எனக்கு அடிக்கடி உடல் உஷ்ணமாய் விடுகிறது. இதற்கு என்ன செய்யலாம்? உணவில் ஏதாவது மாறுதல் செய்ய வேண்டுமா? அப்படிச் செய்ய வேண்டுமானால் தயவுசெய்து எழுதுங்கள். தாங்கள் தெரிவிக்கும் முறைப்படி நடக்கச் சித்தமாய் இருக்கிறேன்.

**பதில்:**—ஆசனங்களைப் பழகினாலே உடல் உறுப்புகள் எல்லாமுமே மிக்க சுறு சுறுப்பாகவும் எப்பொழுதும் தன் வேலைகளைச் செய்யச் சித்தமாய் இருக்கும். இயற்கையும் அம்மாதிரிதான் இருக்கச் சொல்லுகிறது. அவர்களுக்குத் தங்களின் அவயவங்களுக்கு எந்தவிதத் தூண்டுகோலும் வேண்டியதில்லை. இது தான் ஆசனங்களின் மகிமை. வேலை ஓடவில்லை என்ற பேச்சே கிடையாது. அதனால் ஆசனம் செய்பவர்களுக்கு, காப்பி, டீ, கோக்கோ, புகையிலை, பொடி போன்ற தூண்டும் பொருள்கள் அவசியமில்லை. ஆசனம் செய்பவர்களுக்கு நன்றாய்ப் பசித்துச் சாப்பிடவும், சாப்பிட்டதை ஜீரணமாக்கவும் முடியும். அதனால் மிளகாய், மிளகு, இஞ்சி, பெருங்காயம், கடுகு போன்ற துணைப் பொருள்கள் அவசியமில்லை.

ஆகையால் மேற்படி தூண்டும் வஸ்துக்களை நீக்கி விட்டால் உடல் உஷ்ணமாகாது. அப்படிக் கின்றி ஆசனங்களுடன் மேற்கண்ட உறுத்தும்

## வரப்பெற்றோம்

1. ஸ்தோத்ர ரத்நாவளி (அர்த்தத்துடன்) விலை: அணா 10.
2. ஸந்த்யா வந்தனம் விலை: அணா 10.
3. ஸூர்ய நமஸ்கார மந்த்ரம், ஆதித்ய ஹ்ருதயஸ்தோத்ரம் விலை: அணா 5.

இறை வழிபாட்டுக்கு ஏற்ற ஸ்லோகங்கள் தொகுக்கப்பட்டு உரையும் தரப்பட்டிருக்கிறது ஸ்தோத்ர ரத்நாவளியில். ஸந்த்யாவந்தனம் நித்ய கர்மானுஷ்டானத்தைப் பொருளுடன் விளக்குகிறது. அகில உலகத்துக்கும் சர்வ சாட்சியாக விளங்குபவன் சூரியன். சூரிய தேவனுக்குகந்த ஆதித்ய ஹ்ருதய ஸ்தோத்ரமும் ஸூர்ய நமஸ்கார மந்திரமும் உரையுடன் தரப்பட்டிருக்கின்றன. மூன்று புத்தகங்களையும் தொகுத்து வெளியிட்டோர்: ஆர். கப்புரத்தினம் ஐயர், ஆரியமத அபிவிருத்தியாளர், 50, வடக்கு வீதி, மலைக்கோட்டை, தெப்பக்குளம் போஸ்டு, திருச்சிராப்பள்ளி.

வஸ்துக்களையும் சேர்த்துக் கொண்டால் எரியும் தீயில் மீண்டும் எண்ணெய் வார்த்ததற்கு ஒப்பாகி, உடல் உஷ்ணமாகும்.

முழுத் தவிட்டுடன் கூடிய அரிசியை ஆசனம் செய்பவர்கள் உபயோகித்தால் உஷ்ணம் தணியும். புளிக்குப் பதில் எலுமிச்சை சேர்த்து வந்தால் உஷ்ணமாகாது. சீனிக்குப் பதில் பனவெல்லம், பனங் கற்கண்டு உபயோகிக்கலாம். காரத்தை முற்றிலும் தள்ளுவது கஷ்டமாக இருக்கும். சொல்லுவது சுலபம். செய்கையில் சில நாட்கள் காட்டலாம். எப்பொழுதும் சாத்தியமாகாது. மிக இலேசாய்ச் சேர்ப்பதில் குற்றமில்லை. அப்படியும் உஷ்ணமானால் சில நாட்கள் சேர்க்காமலேயே இருக்கலாம். வெண்ணெய் தோசைக்கும், இட்டிலிக்கும், ரொட்டிக்கும் உபயோகிக்கலாம். வெள்ளை வெங்காயத்தை நறுக்கி உப்பு சிறிது போட்டு நெய்யில் வதக்கிக் காலையில் சாப்பிடலாம். மணத்தக்காளிக் கீரை ஒரு பிடியுடன் ஒரு அவுன்ஸ் வெங்காயம் நறுக்கிப் போட்டு, பால் வீசம் படி விட்டு வேக வைத்து வெறும் வயிற்றில் சாப்பிடலாம். உளுத்தம் பருப்பு, சேமைக்கூட்டு நல்லது. உளுத்தம் பருப்பு, வெங்காயக் கூட்டு நல்லது. உளுத்தம் பருப்பு மணத்தக்காளிக் கீரை கூட்டு செய்யலாம். இதிலெல்லாம் காரமே போடக் கூடாது. முழு உளுந்து உப்பு போட்டு வேக வைத்துச் சிற்றுண்டிக்குப் பதில் சாப்பிடலாம். முழு உளுந்து திரித்து வெல்லம் போட்டு ஹல்வா கிண்டிச் சாப்பிடலாம். வெறும் உப்புப் போட்டுக் களிபோல் கிண்டியும் சாப்பிடலாம். பாதாம் பருப்பு, கச கசா சம எடை எடுத்து இரண்டத்தனை பனங்கற்கண்டு போட்டு, நெய் விட்டு ஹல்வா செய்து சாப்பிட்டால் உஷ்ணம் இருக்கும் இடம் தெரியாமல் பறந்துவிடும். குல்கந்து இரவில் சாப்பிட உஷ்ணம் தணியும். வாழைப்பூ சமையலில் உபயோகிக்கலாம். மாதுளம்பழம், திராக்ஷை உஷ்ணத்தைத் தணிக்க வல்லது. கீரைகளில் பசலைக் கீரை, அகத்தி முளைக் கீரை இவை நல்லது. இம்மாதிரி மற்றும் எத்தனையோ உண்டு. இவைகளெல்லாம் அவரவர்களின் சௌகரியம் போல் தங்கள் ஊரில் கிடைப்பதைக் கொண்டு செய்யலாம். ஆனால் எப்பொழுதும் பத்தியச் சாப்பாடு போல் சாப்பிட வேண்டுமென்பதில்லை. இவைகளில் சாதாரணமாய்த் தினசரி செய்து கொள்ளக் கூடியவைகளும் இருக்கின்றன. எதையாவது ஒன்றை ஒரு நாள் செய்யலாம். மற்றதை மறு நாள் செய்யலாம். இந்த உணவு வகைகளுடன் மற்றவைகளையும் சாப்பிட்டுக் கொண்டு ஆசனம் செய்து வந்தால் உடல் உஷ்ணமாகாது. வாரம் இரண்டுநாள் எண்ணெய் தேய்த்துக் குளிக்கலாம். தொட்டி ஸ்நானம் வெகு நல்லது.

**கேள்வி:**—ஆசனங்களைக் காலையில் செய்ய வசதி இல்லாதவர்கள் இரவு 8 மணியிலிருந்து 9 மணிக்கு இடையில் சாப்பிட்டு விட்டு இரவு 11 மணிக்குப் படுத்து, விடியற்காலை 4 மணிக்கு எழுந்து சர்வாங்காசனம், ஹாலாசனம், மத்யாசனம் இவைகளை அரைமணி நேரத்தில் செய்து விட்டு மறுபடி 5 மணிக்குள் படுத்துக் காலை 6½ மணிக்கு எழுந்திருக்கலாமா! இப்படிச் செய்வதால் உடலுக்கு ஏதாகிலும் கெடுதல் ஏற்படுமா!

**பதில்:**—இவர் யோசனை வேடிக்கையாய் இருக்கிறது. காலையில் செய்ய முடியவில்லையென்பதற்காக நாலு மணிக்கு எழுந்திருந்தும் அரை மணி நேரம் ஆசனம் செய்துவிட்டு மறுபடியும் தூங்குவது சரியல்ல. அதற்குப் பதில் காலை 6 மணிக்கு எழுந்திருந்து 6½ மணிக்குள் ஆசனத்தை முடிக்கலாமே! அல்லது இரவு 8 மணியிலிருந்து 8-30 மணிக்குள் ஆசனத்தை முடித்து விட்டு 9 மணிக்குச் சாப்பிடலாமே! ஆம்! நீங்கள் சொல்லுவதைப் போல் செய்தால் உடலுக்குக் கெடுதிதான் நேரிடும். அரை மணி நேரம் ஆசனம் செய்பவர்கள் சர்வாங்காசனம் பத்து நிமிஷம் மத்ஸ்யாசனம் 2 நிமிஷம், சிரசாசனம் 7 நிமிஷம், சாந்தி ஆசனம் 5 நிமிஷம், நாடி சுத்தி பதினொரு தடவை செய்யலாம்.

**கேள்வி:**—நான் தங்களுடைய ஆசன விரிவுரைகளைப் படித்து, நடைமுறையில் பழகிக் கொண்டும் அதன் பலன்களை அடைந்து கொண்டும் வருகிறேன். நான் ஒரு குருவினிடம் உபதேசம் பெற்றவன். அவர் சிரசாசனம் அறவே கூடாது என எழுதி யிருக்கிறார். சிரசாசனம் கடைசி மரண காலத்தில் அதிக கஷ்டத்தைக் கொடுக்குமாம். மற்றும் ஆராய்ச்சிக் குறைவும் ஏற்படுகின்றது என்கிறார். இது சரியா! தாங்கள் சரியான விளக்கம் தரக் கோருகிறேன்.

**பதில்:**—உங்கள் குருவின் உபதேச முறை என்ன என்பது தெரியாது. இதுவரை சிரசாசனம் செய்து மரண காலத்தில் கஷ்டப்பட்டவர்களைப் பார்த்ததில்லை. ஆராய்ச்சிக் குறைவு ஏற்படும் என்று இவர் சொல்லுவது முற்றிலும் உண்மைக்குப் புறம்பானது. மச்சேந்திர மாமுனிவர், பதஞ்சலி மாமுனிவர், ராம யோகீஸ்வரர் போன்ற மகா புருஷர்கள் யோக ஆசனங்களை வழங்கியிருக்கிறார்கள். அவர்கள் அளித்த யோகக் கலையில் என்றால் குற்றம் கண்டுபிடிக்க முடியாது. தவிர யாருக்கும் அவரவர்களின் அபிப்பிராயப்படி சொந்த விஷயங்களில் நடந்து வருவதற்குப் பூரண சுதந்திரம் உண்டு.

ஜனவரி மாதம் பத்தாம் தேதி "கல்கி" சந்தேக விளக்கப் பகுதியில் முதல் கேள்வி ஆஸ்துமாவுக்குப் பதில் எழுதியிருப்பதில், ஒரு தவறு ஏற்பட்டு விட்டது. அதாவது ஆசனங்கள் செய்ய வேண்டிய நேரத்தில் சிறு மாறுதல்; முக்கியமாகக் கவனித்துச் செய்ய வேண்டியது. புஜங்காசனம் மூன்று தடவை, பஸ்சிமோத்தானாசனம் மூன்று தடவை, சர்வாங்காசனம் மூன்று தடவையில் இருபது நிமிஷங்கள். (தொடரும்)




குமாரி மணியன்

கோயில் மணி கண கண வென வொலித்தது. உச்சிக்கால பூஜை ஆரம்பமாகி விட்டது. கந்தசாமி அடவியார் 'அல்லுபிடித்து'க் கொண்டிருந்தார். பட்டு நூலை 'அணுவாக்கி'த் தறி ஏற்ற வேண்டியதுதான் பாக்கி. எதிர் வீட்டுக் கேசவன் கையில் பத்திரிகையுடன் ஓடி வந்தான்.

"பார்த்தீர்களா! சேதி வந்திருக்கு, பார்த்தீர்களா!" என்று கத்தினான். நூலிழைகளைக் கோதிக் கொண்டிருந்த எல்லாரும் திடுக்கிட்டு 'என்ன சேதி கேசவா!" என்று கேட்டார்கள்.

கேசவன்தான் அந்தச் சேலையூர்க் கிராமத்திலேயே தமிழ்ப் பத்திரிகை வாங்குகிறவன். ஏதோ பத்தாவது வரை படித்து விட்டு ஒரு மளிகைக் கடை வைத்து நடத்தி வந்தான். அடவியார் வீட்டுக்கு எதிர் வீட்டில்தான் இருந்தான் கேசவன். கிழவனார் கூடத் தலை நிமிர்ந்து அப்படி என்ன செய்தி என்று பார்த்தார். செய்தித்தாளை உயரப் பிடித்து வாசித்தான் கேசவன்.

"கோர மரணம் — ஐந்து பேர் தற்கொலை. மதுரை நெசவாளிக் குடும்பத்தின் மறைவு, ஏழ்மை காரணமாக விஷமுண்டு இறந்தனர்!" என்னும் செய்திதான் அது.

குட்டைத் தறி மன்னார் சாமியின் வீட்டுத் திண்ணைமேல் குந்தி 'பூட்டுதலை'யில் நூலைச் சுற்றிக் கொண்டிருந்த லக்ஷ்மிப் பாட்டிகூட ஒரு நிமிஷம் அப்படியே கைமாறி நின்று விட்டாள். "காலம் கெட்டு விட்டது, கலிகாலம்! பெற்ற குழந்தைக்கும், கட்டின மனைவிக்கும் எவனாவது விஷம் வைப்பானா!" என்று முணு முணுத்தாள். தறியில் 'விழுதுவடிகளை'ச் சரி செய்து கொண்டிருந்த மன்னார்சாமி கொட்டாவி விட்டுக் கொண்டே, "ஆமாம்! இந்த உலகத்திலே யிருப்பதைவிடப் போகிறதுதான் நல்லது என்கிறேன். இருந்திருந்து என்ன கண்டோம்!" என்றான்.

உடனே மாடிவீட்டு ரங்கன் பிடித்துக் கொண்டான். அவன் தகப்பனார் ஒரு காலத்தில் மாடி வீட்டில் இருந்தாராம். பெயர் நிலைத்து விட்டது. இப்போது ரங்கன் மாடி வீட்டில் இல்லை. மாடி வீடில்லாவிட்டாலும் எல்லாருக்கும் அவன் மாடி வீட்டு ரங்கனாகத்தான் இருந்தான்.

"ஆமாம், அண்ணே! நீ சொல்கிறது ரொம்ப சரி. ஏழைகள் பாடு ரொம்பக் கஷ்டம். அதிர்ஷ்டமில்லாத ஏழை நெசவாளிகள் படும்பாடு பிறருக்கு என்ன தெரியும்? தூக்கு மாட்டிக் கொள்வதுதான் நல்ல காரியம். நம் நூலையே நல்ல கனமான கயிறாகச் செய்து உபயோகிக்கலாம்!" என்றான் வறண்ட குரலில்.

இதுவரை வாயைத் திறக்காத கிழவனார் கந்தசாமி நிமிர்ந்து நின்று, "சீச்சீ! தற்கொலை பண்ணிக் கொள்கிறவன் கோழை. உலகத்தை எதிர்த்துப் போராடி வெற்றி பெறுவதே ஆண்மை. அது இல்லாமல் விஷம் சாப்பிடுகிற

தில் என்ன பெருமை இருக்கிறது! ஆபத்திலே எப்படி வெள்ளத்தை எதிர்த்து, நீந்திக் கரையை அடைகிறோமோ, அப்படியே கஷ்டத்தை அறுத்துக் கொண்டு முன்னேறணும்'' என்றார்.

அதைக் கேட்ட ரங்கன், ''சரிதான் தாத்தா, நீ சொல்வது! உனக்கு என்ன கஷ்டம்! பணத்தை முடிந்து வைத்துக் கொண்டு நீ கஷ்டத்தை அறுக்கணும் என்கிறாய், ஏதோ நூலை அறுக்கிற மாதிரி! உனக்கு ஒரே பேத்தி. வேறு பிக்கல் பிடுங்கல் கிடையாது. நீ சொல்ல மாட்டியா!'' என்றான். தன் பாட்டனார் இருந்த ஜோரும் தானிருக்கும் நிலையும் ரங்கன் மனக் கண்ணில் தோன்றியிருக்க வேண்டும். பண்ணையாருக்குக் கொடுக்க வேண்டிய கடனுக்காக அவன் தன்



னுடையது என்றிருந்த மாடி வீட்டைக் கூட விற்க வேண்டி வந்து விட்டதே!

கந்தசாமி சளைக்க வில்லை. ''ரங்கா! நான் சொல்றபடி நீங்கள் ஒருத்தரும் கேட்க வேண்டாம். எல்லாரும் விஷம் சாப்பிடுங்கோ. இல்லாட்டித் தூங்குமூஞ்சி மரத்திலே தொங்குங்க. எனக்கு ஆட்சேபணை இல்லை. ஆனால் என்னைக் கேட்டால் தன்னம்பிக்கை யில்லாதவன் தான் கஷ்டப்படுவான். முதுகெலும்புள்ள ஆண்பிள்ளை ஒரு நாளும் கஷ்டப்பட மாட்டான்'' என்றார்.

''ஆமாம், தாத்தா! உன் பேத்திக்கு அந்த மாதிரி உண்மையான ஆண்பிள்ளையாகவே பார்!'' என்று கூறிய ரங்கன் கந்தசாமி அடவியாரை வெறித்துப் பார்த்தான்.

''நீ என்னடா சொல்றது! எங்கள் வள்ளியின் புருஷன் அசல் முருக பிரான் போலவே இருப்பான்.!'' என்றார் கிழவனார், தமது குரலைத் தாழ்த்தாமலே. என்றுமே அவர் தாழ்ந்து தணிந்து யாரிடமும் பேசியதில்லை.

கந்தசாமி ஒரு கைதேர்ந்த நெசவாளி. அவர் புடவைகளுக்கு நல்ல கிராக்கி. அவராகவே எல்லாம் செய்வார். உதவிக்கு இரண்டு சின்னக் கூலிப் பையன்களும், பேத்தியும் தான். பட்டு நூலைப் பருவட்டத்தில் சுற்றுவதிலிருந்து குறுக்கிழை வாங்குவது வரை அவரே செய்வார். வள்ளி கூடச் சில சமயத்தில் நினைப்பாள், 'இந்தத் தாத்தா இப்படி எல்லாவற்றையும் தானே செய்கிறாரே! திடீரென்று நோயாய்ப் படுத்துக் கொண்டால் யார் செய்வாங்க!' என்று.

கந்தசாமி எல்லாருக்கும் புடவைகள் போடுவதில்லை. அச்சாரத்தின் பேரில்தான் போடுவார். பக்கத்திலுள்ள மிராசுதார், மிட்டாதார் இவர்கள் வீட்டுக் கலியாணங்களுக்குக் கந்தசாமியின் கூறைப் புடவைதான் போகும். மற்றப்படி சாதாரண காலங்களில் கந்தசாமியின் பலவர்ணப் பட்டுச் சேலைகள் மேற்படி பெரிய இடங்களில் செலவாகும். அம்மாதிரி பட்டில் லாகவமாகப் புடவை போடக் கந்தசாமி அடவியார் ஒருவருக்குத்தான் தெரியும். மற்றவர்கள் எல்லாரும் நூல் புடவை, வேஷ்டி போடுவார்கள். நூல் வாங்குவதற்கே காசில்லாமல் தவிக்கும் போது அவர்கள் பட்டுக்கு எங்கே போவார்கள்!

அதனால் நெசவாளிகள் மிகவும் கஷ்டப்பட ஆரம்பித்தனர். ஒரு ஊரிலிருந்து வேலையில்லாமல் வேறு ஊர் செல்லத் தொடங்கினர். தறிகள் தூங்க ஆரம்பித்தன. பூநூல்களிலும், பருவட்டங்களிலும் சிலந்திகள் ஏறி விளையாட ஆரம்பித்தன. 'நாடா'க்கள் அப்படியே கிடந்தன.

காலையில் எழுந்திருந்து கடவுளைத் தொழுது விட்டு நூலை அல்லு பிடிக்க ஆரம்பிக்கும் தொழிலாளிகள் தங்கள் உயிருடன் மல்லுப் பிடிக்கும் கட்டத்துக்கு வந்து விட்டனர். கேசவன் கூட முணு முணுக்க ஆரம்பித்தான். அவனது மனைக் கடையில் ஏகப்பட்ட 'பாக்கி' விழலாயிற்று.

அந்தக் கிராமத்திலேயே கந்தசாமி ஒருவர் தான் வழக்கம்போல் தமது வேலையில் ஈடுபட்டிருந்தார். அவரது பட்டுத் தறி அவருக்கு வேலை கொடுத்தது. கிளியூர்ப் பண்ணையார் வீட்டில் கல்யாணம். பன்னிரண்டு புடவைகளுக்கு அச்சாரம் கொடுத்திருந்தார். அதனால் கந்தசாமிக்கு ஓய்வே இல்லை. வள்ளிக்கும் ஓய்வில்லை.

இப்படி யிருக்கும்போதுதான் அந்தக் கிராமத்துக்கு 'அவன்' வந்து சேர்ந்தான். தூய வெள்ளைக் கதர் ஆடையில் அவன் தோன்றினான். வந்தவன் நேராகக் கேசவன் வீட்டுக்குப் போனான். அங்கு 'செய்தி' கேட்கக் கூடியிருந்த கும்பலின் மத்தியில் நுழைந்து, ''என்ன அண்ணே! என்னைத் தெரியவில்லையா, கேசவண்ணே!'' என்றான்.

கேசவன் அந்தக் கிராமத்தில் பிறந்து வளர்ந்தவன்தான். நடுவில் சிலகாலம் பட்டணம் போய் வந்தவன். அவனுக்கு எவ்வளவோ சினேகிதர்கள். என்றாலும் வந்தவனை அவனால் சீக்கிரமாக அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை. அதற்குள் வந்தவன், ''என்ன, அண்ணே! நீயும் நானும் சேர்ந்து பள்ளி விடுதியில் ஒன்றாக வசிக்கவில்லையா!'' என்று கேட்டான்.

நான் இப்பொழுது மிகுந்த தெம்புடன் இருக்கிறேன்—

## ஊளைச் சதை

### கரைந்த பின்னர்



ஊளைச் சதை கரைவதற்காக நான் “க்ருஷன்” ஸால்ட் உட்கொண்டேன். இரண்டே வாரங்களில் 5 ராத்தல் கனம் குறைந்தது பற்றிப் பெரிதும் மகிழ்வுற்றேன். ஐந்து வாரங்களில் 10 ராத்தல் கனம் குறைந்து விட்டது. க்ருஷன் சிகிச்சைக்கு முன்னர் நான் எப்பொழுதும் அசதியும் மந்தமுமுள்ளவனாயிருந்தேன். ஆனால் இப்பொழுதோ மிகுந்த தெம்புடன் சுறு சுறுப்பாயிருக்கிறேன். நான் “க்ருஷன்” கட்சியிலே இருப்பதுடன் எப்பொழுதும் க்ருஷனையே சிபாரிசு செய்வேன்.”— K. G.

உட்புற இந்திரியங்கள் சரிவர வேலைசெய்யத் தவறும்பொழுது ஜீரணிக்கப் படாத கழிவு பொருள்கள் குடலுக்குள் சேருவதால் சதைக் கோணங்கள் உண்டு பண்ணப் படுகின்றன. குடல்களும், மூத்திர கோசங்களும் சரிவர ஒழுங்காய் இயங்குவதற்கு நன்கு உதவுவதால் “க்ருஷன்” சதைகள் உண்டாவதை தீவிரமாக எதிர்க்கிறது. மெதுவாக, ஆனால் நிச்சயமாக அதிகப் படியான சதை மறைய ஆரம்பிக்கிறது. தினசரி ஒரு சிறு அளவு க்ருஷன் உட்கொள்ளுவது உங்களை மந்தமான, ஊளைச் சதை யுள்ளவரன்றி, வீர்ய மிகுந்த ஒற்றை நாடிச் சரீர முள்ளவராகச் செய்யும்.

**“க்ருஷன்”** உங்கள் ஆரோக்கியத்திற்கும் ஆனந்தத்திற்கும் உதவுகிறது

KSA —4

உடனே கேசவன், "வாப்பா, ராமு! ஆளே மாறிப் போய் விட்டாயே! கதர் எல்லாம் போட்டிருக்கிறாய். அதனால்தான் அடையாளம் தெரியவில்லை!" என்றான் சிரித்துக் கொண்டே.

ராமு எல்லாருக்கும் அறிமுகம் செய்துவைக்கப் பட்டான். அவன் கேசவனுடன் படித்தவன். அவனும் கிராமவாசிதான். மலையூர் அவனது கிராமம். பத்தாவது வரை படித்துவிட்டுக் கிராம சேவா சங்கத்தில் சேர்ந்து கிராம சேவை செய்ய ஆரம்பித்திருந்தான். சேலையூரில் நெசவாளர் துயரம் கேட்டு அங்கு வந்தான்.

ராமு வந்து பதினைந்து தினங்கள் ஆயின. சேலையூர் நெசவாளிகள் புத்துயிர் பெற்றனர். கூட்டுறவு முறையில் எப்படி நெசவு நடத்தலாம் என்று கூறிக் கூட்டுறவுச் சங்க மொன்று நிறுவ ராமு பிரயத்தனம் பண்ணினான்.

அன்று சாயங்காலம் ஆற்றங்கரையில் தனியாக அமர்ந்திருந்த ராமுவைக் கொடிபோல் அழகிய ஒரு பெண் கவர்ந்தாள். தண்ணீர் கொண்டு போக வந்தவள் அவன் உள்ளத்தையும் கொண்டு சென்றாள். ராமுவுக்குச் சேலையூர் வாசம் உண்மையிலேயே மிகவும் பிடிக்கலாயிற்று. தினம் தினம் அவன் வள்ளியைப் பார்க்க ஆவல் கொண்டான். வள்ளியும் ஆற்றங்கரைப் பக்கம் அடிக்கடி தென்படலானாள்.

கேசவன் வீட்டில் ராமு வசித்த முன் பக்கத்து அறையின் ஜன்னல் எப்போதும் திறந்தே இருக்கலாயிற்று. எதிர் வீடாகிய கந்தசாமி அடவியார் வீட்டிலும் திண்ணைப் பக்கம் அடிக்கடி வள்ளியின் உருவம் தோன்றியது.

கூட்டுறவு முறையில் நெசவு நடத்த நெசவாளிகள் பிரசாரம் செய்ய ஆரம்பித்தனர். மன்னார்சாமி, அடவியாரிடம் வந்து கூட்டுறவு இயக்கம் பற்றிச் சொல்லி அவர் உதவியை நாடினான். கந்தசாமியின் மனம்தான் எல்லாருக்கும் தெரிந்ததாயிற்றே! "ஏண்டா! தன் கையே தனக்குதவி என்று கிழவிகூட சொல்லுவாளேடா! நீங்கள் ஏன் இப்படிப் புத்தி பிசகிப் போறீங்க! கூட்டுறவாம்-மாட்டுறவாம். பட்டணத்திலிருந்து வந்திருக்கிறவன் சொன்னான் என்று கூத்தாடுறீங்க. இந்தக் கந்தசாமிக்கு எந்தக் கூட்டுறவும் வேண்டாமடா. உயிருள்ள வரையிலும் கந்தசாமி தறியை எவனும் தொட வேண்டாம்" என்று வெகு கண்டிப்பாகச் சொல்லி விட்டார்.

வள்ளிக்குக்கூட ராமுவைப் பற்றிக் கந்தசாமி அப்படிச் சொன்னது பிடிக்கவில்லை. நடுப் பகலில் சோறு வைக்கும்போது, "ஏன் தாத்தா! உனக்கு அந்தப் பட்டணத்துப் பிள்ளையைத் தெரியுமா!" என்று கேட்டாள். கிழவர் உடனே "எதற்குத் தெரியணும்! ஆளைப் பார்த்தாலே தெரியவில்லையா! இந்த ஜிப்பாக்காரங்க ரொம்பப் படிச்சவங்க. பட்டுச் சேலை போடக் கூடாதாம். இவரு எனக்குச் சொல்ல வந்துட்டாரு—அறிவு கெட்டவங்க" என்றார். அதைக் கேட்டதும் தாத்தாவின். கோபத்துக்குக் காரணம் என்னவென்பது வள்ளிக்குப் புரிந்து விட்டது.

மன்னார்சாமி அன்றிரவு நடந்த கூட்டத்தில் கிழவர் கூறியதைச் சொன்னான். அதைக் கேட்ட ரங்கன் கிழவரின் தறியை நொறுக்கி விட வேண்டும் என்று ஆத்திரமாகக் கூறினான். ராமு, எல்லாரையும் கோபமின்றி அமரும்படி சொல்லி விட்டுக் காந்தியடிகள் காட்டிய அஹிம்சை வழியைப் பற்றிப் போதித்தான். பிறகு கிழவன் தங்களுடன் வராவிட்டால் அதனால் நஷ்டம் நமக்கில்லை என்று

கண்ணாடியில் கண்டது!



கூறி, ஒருவரும் அவருக்கு எவ்விதமான தீங்கும் விளைவிக்கக் கூடாது என்றும் கூறினான்.

நடக்கப் போகும் கிளியூர்ப் பண்ணையார் மகள் கல்யாணம் அந்த வட்டாரத்திலேயே மிகப் பெரிய கல்யாணம். கூறைப் புடவை தயாராகிக் கொண்டிருந்தது. மற்றவை யெல்லாம் முடிந்து விட்டன. கலியாணத்துக்கு இன்னும் நான்கு நாட்கள்தான் பாக்கி. கிழவர் பகல் முழுவதும் தறியை விட்டே நகருவதில்லை. நாடாக்கள் 'டக்' 'டக்' என்று சப்தம் செய்த வண்ணமிருந்தன.

இரவு மணி பத்து இருக்கும். எங்கும் நிசப்தம் நிலவியிருந்தது. மங்கின விளக்கொளியில், ராமு கொடுத்திருந்த 'காந்தி மகான் கதை' என்ற புத்தகத்தைப் படித்துக் கொண்டிருந்தாள் வள்ளி. கிழவர் வழக்கம் போல், வாசலில் கயிற்றுக் கட்டிலில் படுத்திருந்தார். அவர் ஒரு முறை தறிக்கூடம் போய் எல்லாம் சரியாக இருக்கிறதா என்று பார்த்து விட்டுப் பின்புதான் படுக்கப் போவது வழக்கம். இது அந்தக் கிராமத்தில் யாவருக்கும் தெரிந்த விஷயம். மணி பத்து அடித்தது. கோயில் ஆலாட்சி மணி அலறியது. ராமுவும் கேசவனும் திண்ணையில் அமர்ந்து கூட்டுறவு பற்றிப் பேசிக் கொண்டிருந்தனர்.

கிழவர் லாந்தருடன் கிளம்பினார் தறிக்கூடத்துக்கு. காந்திஜி தென் ஆப்பிரிக்காவில் பட்ட அவதிகளைப் படித்து மனம் கலங்கிக் கொண்டிருந்த வள்ளியைத் தறிக் கூடத்திலிருந்து வந்த 'ஐயோ!' என்ற சத்தம் தூக்கி வாரிப் போட்டது. கந்தசாமியின் குரல் அது. உடனே பின்புறம்

ஓடினாள் வள்ளி. வாசற்புறம் இருந்த ராமுவும் கேசவனும்கூட ஓடினர்.

இரத்த வெள்ளத்தில் கிடந்தார் கிழவர். லாந்தர் அவிந்து போய்த் தறிக்கூடத்தின் படியில் கிடந்தது. அதன் ஒடிந்த கண்ணாடித் துண்டுகள் நாற்புறமும் சிதறியிருந்தன. ராமுவின் 'டார்ச்' விளக்கொளி இதையெல்லாம் காண்பித்தது.

கிழவரைத் தோளில் தூக்கிப் போய் வீட்டில் போட்டார்கள், ராமுவும் கேசவனும். நல்ல அடி. நாட்டு வைத்தியர் நாகப்பர் வந்து பார்த்து, "உயிருக்குப் பயமில்லே. ஆனால் இரண்டு மாத காலம் அசையவே கூடாது. மூளையின் பக்கத்தில் அடி பட்டிருக்கிறது. நல்ல வேளையாக மூளை பாதிக்கப் படவில்லே!" என்று கூறினார்.

வள்ளி அப்படியே இடிந்து போய் விட்டாள். ராமு அவளுக்கு ஆறுதல் கூறினான். ஆனால் அந்தச் சமயம் ஒருவரும் பண்ணையார் வீட்டுக் கூறைப் புடவையைப் பற்றி நினைக்கவே இல்லே. மறுநாள் லேசாகக் கண்விழித்த கந்தசாமிதான் அதுபற்றி நினைத்தார் முதலில். "வள்ளி! கலியாணம் வந்திடுச்சே, கூறைப் புடவை என்ன ஆவது!" என்று பிதற்றினார்!

"தாத்தா உன் உயிர் பிழைச்சாப் போதும். புடவை எப்படியானும் போவுது" என்றாள்.

"உயிரைவிட வாக்கு முக்கியம், வள்ளி! கந்தசாமி சொன்ன கெடு தவறினவனில்லே. என்ன பண்ணுவேன்! பண்ணையார் என்ன செய்வார்!" என்று அரற்றினார் கந்தசாமி. கடமையுணர்ச்சி அவரிடம் அப்படி மிகுந்திருந்தது.

கிழவரைப் பார்க்க வந்து கொண்டிருந்த ராமுவின் காதில் இவை விழுந்தன. கிழவரின் கடமை உணர்ச்சியைக் கண்டு வியந்தான். அப்படியே திரும்பியவன், நேராகத் தறிக் கூடம் நுழைந்தான். மலையூர் முனிசாமி அடவியார் மகனாயிற்றே அவன்! தறியோட்டத் தெரியாமலா இருக்கும்!

டக்...டக்...நாடா ஓட ஆரம்பித்தது. தற்செயலாக அங்கு வந்த வள்ளியின் கவனத்தை அந்தச் சப்தம் கவர்ந்தது.

"யார்! தாத்தா கூட இல்லேயே!" என்று பார்க்க வந்தவள் ராமுவைக் கண்டு திடுக்கிட்டாள்.

"என்ன! உங்களுக்குத் தறிக் கூடப் போடத் தெரியுமா!" என்று அதிசயத்துடன் கேட்டாள்.

"வள்ளி! நான் தறிகளிடையே வளர்ந்தவன். என் தந்தை பட்டுச் சேலைகளுக்குப் பெயர் போனவராயிற்றே! அவரிடம் பழகினவனில்லேயா! குலக் கல்வி கல்லாமல் பாகம் படும் என்பார்கள். நானே விரும்பி வேறு கற்றேன், தந்தையின் தொழிலே. தறி போட எனக்கு நன்றாகத் தெரியும்" என்றான் புன்னகையுடன்.

வள்ளியின் கண்கள் ஆச்சரியத்தால் விரிந்தன. "தாத்தா உனக்கு ஏட்டுக் கல்வி மட்டும் தான் உண்டு என்று திட்டினாரே!" என்றாள்.

"ஏட்டுக் கல்வி எதற்கு உதவும், வள்ளி! ஏட்டுக் கல்வியுடன் வீட்டுக் கல்வியும் சேர வேண்டும். அதுவே நலமாகும்" என்றான் ராமு. அதற்கு மேல் அவன் வாய் திறக்க வில்லே. கை மட்டும் காரியத்தில் கண்ணாயிருந்தது, டக்...டக்...டக்... நாடா ஓடியது. ஆச்சரிய மிகுதியினால் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தாள் வள்ளி.

மறு நாளைக்குள் கூறைப் புடவை முடிந்து விட்டது. கிழவருக்கு இது தெரியாது. பாவம், புலம்பிக் கொண்டேயிருந்தார். ராமு வந்தான் கிழவரைப் பார்க்க. "தாத்தா, ஏன் புலம்புறீங்க! நீங்கள் வேறு யாரையாவது செய்யச் சொல்லிப் பழக்கி யிருக்கணும். இப்பொழுது திடீரென்று விழுந்திட்டீங்களே, யாருக்காவது சொல்லிக் கொடுத்திருந்தால் சௌகரியமா யிருக்குமல்லவா! கூட்டுறவு இருந்தால் இன்றைக்கு இப்படியிருக்குமா!" என்று கேட்டான்.

கிழவர் 'உம்...உம்...' என்று மென்று விழுங்கினார். வேறொன்றும் அவரால் சொல்ல முடியவில்லே. நம்மால் எல்லாம் முடியும் என்ற எண்ணம் சிறிது சிறிதாக மறைந்து நம் கையை விடப் பலரும் சேர்ந்து கொடுக்கும் கைதான் மேலானது என்ற எண்ணம் தோன்ற ஆரம்பித்தது.

இதே சமயம் பண்ணையார் கார் வந்து விட்டது. கிழவர் துடிக்க ஆரம்பித்தார். பண்ணையார் வந்தார். கிழவரைக் கண்டு அப்படியே அசந்து போய் விட்டார். கிழவர் கண்ணையே திறக்கவில்லே. 'நாம் சொன்ன சொல் தவறி விட்டோமே' என்ற எண்ணம் அவரை என்னவோ செய்தது.

புடவையைப் பற்றிக் கேட்பதா, வேண்டாமா என்று யோசித்துக் கொண்டிருந்த பண்ணையாரின் கையில் புடவைப் பொட்டலத்தைக் கொண்டு வந்து கொடுத்தாள் வள்ளி.

பண்ணையாரும் அவருடன் வந்திருந்தவரும் புடவையைப் பிரித்துப் பார்த்து அதன் அழகில் மயங்கி யிருந்தனர். "தலைப்பு ரொம்ப ஜோர்!" என்றார் பண்ணையாரின் நண்பர்.

கிழவர் திடுக்கிட்டு எழுந்தார். வைத்தியர் கூறியது கூட மறந்து விட்டது அவருக்கு. "வள்ளி! என்ன இது!" என்று கூவினார்.

வள்ளி எடுத்துக் கூறினாள் ராமுவின் சேவையைப் பற்றி. பண்ணையாருக்கு உச்சி குளிர்ந்து விட்டது. ராமுவை வெகுவாகப் புகழ்ந்தார். ராமுவின் கூட்டுறவுக்குப் பண்ணையார் ஒரு பங்கு மூலதனம் கொடுத்து உதவியதற்கு இதுவும் ஒரு காரணம்.

பிறகு கேட்க வேண்டுமா! வள்ளியும், ராமுவும் நாலுபேரறியப் பேச ஆரம்பித்தனர். அவர்கள் கல்யாணம்தான் நிச்சயமாகி விட்டதே! ஆனாலும் கிழவருக்கு ஒரு குறை. தம் கையால் தம் பேத்திக்குப் பட்டுக் கூறைப் புடவை கொடுக்க முடியவில்லையே என்று. ஆனால் ராமு, நூல் புடவைதான் கல்யாணத்துக்கு என்று முன்பே கூறி விட்டானே!

ராமு—வள்ளி கல்யாணம் விமரிசையாக நடந்தது. பட்டு நூலை வெறுத்த தன் நண்பன், பட்டுத் தறி ஓட்டி அதன் மூலம் பட்டு நெசவாளி கந்தசாமியை மாற்றி, அவர் பேத்தியைப் பரிசாகப் பெற்ற கதையைக் கேசவன் கல்யாண விருந்தாளிகளுக்கு விரிவாகச் சொல்லிக் கொண்டிருந்தான்.

இப்போது சேலையூர் நெசவாளர் கூட்டுறவுச் சங்கக் காரியதரிசி கேசவன். அதன் தலைவர் கந்தசாமி. சொல்ல வேண்டுமா! ராமுவும், வள்ளியும் சாதாரண அங்கத்தினர்கள்தாம். ஆனால் முழு நேர அங்கத்தினர்கள். சேலையூர் கிராமம் முழுவதிலும் மறுமலர்ச்சி. நெசவாளிகள் ஒன்று சேர்ந்து ஒத்துழைத்தனர். அரசாங்க உதவியுடன் கூட்டுறவு தழைத்தது.

கோயில் மணி 'கண கண' வென்று ஒலித்தது. உச்சிக் கால பூஜை ஆரம்பமாகி விட்டது. சூரியன் உச்சியில் பிரகாசித்தான். ஆமாம், சேலையூர் நெசவாளிகளும் உச்சியில் இருக்கிறார்கள். 'உச்சிக் காலம் உயர்ந்த காலம்' என்பது பழமொழி. சேலையூருக்கும் அப்போது உச்சிக் காலம். மனிதர்கள் ஒன்று பட்டால் அடைய முடியாதது எது! மன உறுதியும் தன்னம்பிக்கையும் இருந்தால் அந்தக் காலம் இக் காலத்தில் நம் நெசவாளிகளுக்கும் வராமலா போகும்!

# தெம்பூட்டுகிறது

# காலையில் உபயோகித்தால்!

# மென்மை உணர்ச்சி

# மணிக்கணக்காய் மாறுது!

காஷ்மீர் பொக்கே டேல் எவ்வளவு தெம்பூட்டுகிறது! அந்த மென்மை உணர்ச்சி மணிக் கணக்காக நீடிக் கிறது! ஈரத்தை உறிஞ்சி, அரிப்பும் புண் ணும் வராமல் தடுக்கிறது. குளுமை மணம், புத்துணர்ச்சி அளிக்கிறது.

கால்கேட் 1806 முதல்

தரத்துக்குப் பெயர்போனது

# காஷ்மீர் பொக்கே

## டால்கம் பவுடர்

ஆண்கள் விரும்பும் நறுமணம்




CBG/13

இதோ! ஒருமுறை பிரஷ் கொண்டு தேய்த்தால்

# கால்கேட் டெண்டல் கிரீம்

சொத்தையும் துர்நாற்றமும் ஏற்படுத்தும்
பாக்டீரியா கிருமிகளை 85% ஒழிக்கிறது!




DCG/24

---

அந்த இருமலை நிறுத்துக-
தொண்டை ரணத்தை சமனமூட்டி
குணப்படுத்துக. மார்பு மற்றும்
சுவாசப்பை அடைப்பை நீக்குக.
எல்லாம் க்ஷணத்தில் முடிக்க.



# PEPS

பெப்ஸ் சாப்பிடுங்கள்.



உலக பிரசித்தி பெற்ற
தொண்டை, மார்புவலி நிவாரண மாத்திரைகள்:
எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

பெப்ஸ் தொண்டை, மார்புவலி நிவாரண மாத்திரைகளில் சமனமூட்டி; குணப்படுத்தும் ரசங்கள் அடங்கியுள்ளன. பெப்ஸை சுவைக்கும்போது இந்த ரசங்கள் ஆவியாக மாறி ஸ்வாசத்துடன் தொண்டை, சுவாசக்குழாய் மூலமாக சுவாசப் பைக்குச் செல்லும் நோயின் ஆரம்ப ஸ்தானத்திற்கே சென்று வேலை செய்கின்றன. இதனால்தான் பெப்ஸ் கைகண்ட ஔஷதமாயும் உலக பிரசித்தி பெற்றும் விளங்குகின்றது. பெப்ஸ் இருமலை நிறுத்தி, தொண்டை ரணத்தை சமனமாக்கி, கபத்தை உடைத்து அடைப்பை நீக்குவதுடன் இன்ப்ளுவன்ஸா மற்றும் பிராங்கைடிஸ் சிகிச்சையில் இன்றியமையாததாயுமுள்ளது.

மதராஸிற்கு ஸோல் ஏஜெண்டுகள் : தாதா & கம்பெனி, பார்க்டவுன்




## 41. பரமானந்த சிஷ்யன்!

மனிதத் தன்மை மனத்தில் இடம் பெற்று விட்டால் மனிதனால் பேசாமல் உட்கார்ந்திருக்க முடியுமா? உள்ளத்தில் உபகார சிந்தனை உதித்து விட்டால் ஒருவர் படும் துயரைக் காண உள்ளம் பொறுக்குமா? மாதவப் பிரஸாத் படும் வேதனையைக் கண்ட மனோரமா அவருக்குச் சிசுருஷை செய்யத் தலைப்பட்டு விட்டாள். கணவனுக்குச் செய்ய வேண்டிய பணிவிடைகளைச் சரியாகச் செய்ய வேண்டியதுதானே மனைவியாக வாய்த்தவளின் கடமை?

எனவே அவள் மாதவப் பிரஸாதின் தலைமயிரை மெதுவாகக் கோதிவிடத் தொடங்கினாள். அப்பொழுது யதேச்சையாக அவள் கண்களும் சுதாகரின் கண்களும் ஒன்றை ஒன்று கலந்தன. ஆனால் மனோரமா அதிக நேரம் அவன் கண்களுடன் தன் கண்களை உறவாட விடவில்லை. சட்டென்று தன் முகத்தை வேறு புறம் திருப்பிக்கொண்டாள்.

அதையெல்லாம் கண்ணுற்ற சுதாகர் கணவன் மனைவிக் கிடையே அந்நியோந்நியம் இருந்து வருவதாகவே எண்ணினான். தான் வந்த பின்தான் மனோரமாவின் மனத்தில் சலனம் தோன்றி யிருக்கவேண்டும் என்றும் அவனுக்குத் தோன்றியது. எனவே, ஒரு கணம் கூட நாம் இங்கே நிற்கக் கூடாது. நின்றால் அது மகாபாவமாக முடியும் என்ற முடிவுக்கு வந்தான். ஒருவருடைய உள்ளத்திலே அதிக சிந்தனைக்கும்கிளர்ச்சிக்கும் இடம் கொடுப்பதென்றால் அது தவறு தானே?

மாதவப் பிரஸாதுக்கும் மனோரமாவுக்கும் நடந்த கல்யாணம் கல்யாணம் தானே? அவள் அதை ஒரு விதத்தில் கல்யாணம் என்று ஒப்புக் கொண்டபின்தானே மணம் புரிந்து கொண்டிருக்க வேண்டும்? மனத்திலே அது திருமணம் என்ற எண்ணம் இல்லாமல் அவள் மணம் செய்து கொண்டிருப்பாளா? அதனால் அவளுக்கும் அவருக்கும் போடப்பட்ட முடிச்சு திருமண முடிச்சாகத்தான் மதிக்கப்பட வேண்டும்.

அவள் மாதவப் பிரஸாதை மணந்து கொண்டாள். ஆனால் அவளால் அவரைக் காதலிக்க முடியவில்லை. தன் உள்ளத்தில் அவருக்கு இடம் அளிக்க முடியவில்லை. தன் உள்ளத்தை அவருக்கு அர்ப்பணம் செய்ய முடியவில்லை. இருந்தாலும் அவரை மணந்து கொண்டாள். அதனால் மணமான பின் கணவனுக்குச் செய்ய வேண்டிய பணிவிடைகளைச் செய்ய வேண்டியதுதானே அவளுடைய கடமை? காதல் புரிய முடியாவிட்டாலும் அவள் தன் கடமையை - பணிவிடை புரியும் கடமையையாவது செய்யலாம் அல்லவா? 'செய்யலாம் அல்லவா?' என்ற கேள்விக்கே இடம் இல்லை. ஏனெனில் அவள் அதைச் சரிவரச் செய்து கொண்டு தான் வந்தாள்!

இல்லாவிட்டால் 'மாதவப் பிரஸாத் காயமுற்று வந்திருக்கிறார்! கட்டிலில் படுத்துக் கிடக்கிறார்!' என்னும் செய்தியைக் கேட்டதும் அவள் அப்படி தலைதெறிக்க ஓடியிருப்பாளா? கணவனுக்குச் செய்ய வேண்டிய பணிவிடையைச் செய்வதற்குத்தான் அவள் அப்படி ஓடினாள். அவளோடு போன சுதாகர் அதைக் கவனிக்கத் தவறவில்லை.

அதனால்தான் அவன் அங்கிருந்து ஓடி விடுவது என்று முடிவு கட்டினான். 'மனோரமாவின் கண்களில் படாமல் ஓடிப்போய் விட்டால், மனோரமா தன் நினைவை மறந்து விடுவாள். தன்னை மறந்து விட்டால் நாளடைவில் அவளுடைய உள்ளத் துயரம் தேய்ந்து மறைந்து விடும். பிறகு கொஞ்சம் கொஞ்சமாக மாதவப் பிரஸாதின் குடும்பத்தைக் கவனித்துக் கொள்ளத் தலைப்பட்டு விடுவாள்' என்று அவன் எண்ணினான். அமைதியில்லா விட்டாலும் அடக்கமாக நடந்துகொண்டிருக்கும் ஒரு குடும்பத்தில் புயலைப்போலப் புகுந்து குடும்ப வாழ்க்கையைச் சூறையாடி அதைக் கெடுத்துக் குட்டிச் சுவராக்க அவனுக்கு என்ன உரிமை? யோசித்துப் பார்க்கப் பார்க்க அவனுக்கு அத்தகைய உரிமை தனக்குச் சிறிதும் இருப்பதாகத் தோன்றவில்லை. அந்தக் குடும்பத்தின் அமைதிக்குப் பங்கம் விளைவிக்காமல் எப்படியாவது புறப்பட்டு ஓடிவிட வேண்டும் என்றே அவனுக்குத் தோன்றியது. இருந்தாலும், அவன் இருதயத்திலே நிகழ்ந்த ஆர்ப்பாட்டங்களுக்கு ஓர் கங்குகரை யில்லை. வேதனை அவனைப் பிழிந்து எடுத்தது. இருதயத்தைச் சுமை அழுத்தியது. அதையெல்லாம் அவன் லட்சியம் செய்யாமல் நெஞ்சத்தைக் கல்லாக்இக் கொண்டான். பிறகு யாருக்கும் தெரியாமல் தருணம் பார்த்து அந்த வீட்டிலிருந்து புறப்பட்டு ஓடியும் வந்து விட்டான்.

அவன் ஓடி வந்து விட்டானே யொழிய எங்கே போவது என்று அவனுக்குப் புரியவில்லை. என்ன செய்வது என்று அவனுக்கு விளங்கவில்லை. மனோரமாவின் வாழ்க்கையிலிருந்து வெகு தூரம் போய்விட வேண்டும். எத்தனைக் கெத்தனை தூரம் தன்னால் அவளை விட்டு விலகிப் போக முடிகிறதோ, அத்தனைக் கத்தனை தூரம் போய் விட வேண்டும். அப்புறம் அவன் வாழ்க்கையில் தன் நிழல் கூடப் பட விடக்கூடாது என்றுதான் அவன் எண்ணினான். எண்ணியதைச் செயலாக்க எண்ணி அவன் வீட்டை விட்டு அவன் புறப்பட்டும் விட்டான்.

செல்லச் செல்ல மனிதனுக்கு இடையே உள்ள தூரம் அதிகரிக்கிறது என்பது அவன் அறிந்த விஷயம்தானே? அவன் என்ன? யாருமே அறிந்த விஷயம்தானே? எனவே, அவன் நடந்தான், நடந்தான்; அப்படி நடந்தான். நடக்க நடக்கத் தனக்கும் மனோரமாவுக்கும் உள்ள இடைவெளி அதிகரித்துக் கொண்டு போவதாகவே எண்ணி மூச்சைப் பிடித்துக் கொண்டு நடந்தான்.

அப்பொழுது அவனுக்குத் தான் தனி வழியே செல்வதாகத்தான் எண்ணம். தனக்குப் பின்னால் தன்னை யாரோ தொடர்ந்து வருகிறான் என்ற எண்ணமே அவனுக்கு எழவில்லை. எனவே அவன் சித்தம் போக்கு, சிவன் போக்கு என்று நடையைப் போட்டுக் கொண்டிருந்தான். கொஞ்ச தூரம் சென்றதும் தன்னைப் பின் தொடர்ந்து யாரோ வருவது அவனுக்குத் தெரிந்தது. அடுத்த நிமிஷம் தன் நடையை வேகமாகப் போடலானான். அதைக் கண்டதும் பின்னால் வருபவனின் நடையிலும் வேகம் கொடுத்தது. பின்னால் வருபவன் அவனைக் காட்டிலும் பலக் குறைவானவனாக இருந்தால் அல்லவா நடையில் அவனைப் பிந்திக் கொள்வதற்கு? அவன் நினைத்தால் சுதாகரைக் காட்டிலும் வேகமாக நடந்து வர முடியும். ஆனால் அவன் அப்படி நடந்து வரவில்லை. காரணம் சுதாகருக்குத் தன்னிடம் நம்பிக்கை இல்லை; உலகத்தினிடம் நம்பிக்கை இல்லை. ஏன்? எதனிடமுமே நம்பிக்கையில்லை. எனவே, அவன் கால் போன போக்கில் வேகமாக நடந்து கொண்டிருந்தான். ஆனால் அவனைப் பின் தொடர்ந்தவனுக்கோ பூரண நம்பிக்கை இருந்தது. சுதாகர் தன்னை மீறி எங்கும் ஓடி விட முடியாது என்று அவனுக்கு நன்றாகத் தெரியும். அப்படி யிருக்கும்பொழுது அவன் அவசரப்பட்டுக் கொண்டு, தன் நடையை வேகமாகப் போடுவானேன்?

ஆனால் அவன் வேகமாகப் போகாததற்கு அதுமட்டும் காரணம் இல்லை. எல்லா நம்பிக்கைகளையும் இழந்த சுதாகர் வெறி பிடித்தவன் போல ஓடிக் கொண்டிருந்தான். வெறி பிடித்தவனின் ஓட்டத்துக்குச் சரியாக ஒருவனால் ஓடுவது என்பது முடிகிற காரியமா? அதனால்தான் அவன் நடையை எத்தனை வேகமாகப் போட்டும் சுதாகரைப் பிடிக்க முடியாமல் இருந்திருக்க வேண்டும்.

நகரத்தின் எல்லையைச் சுதாகர் கடக்கும் வரை அவனை அவனால் பிடிக்க முடியவில்லை. நகரத்து எல்லையைக் கடந்து அவன் வயல் வரப்பு வழியே நடக்கத் தொடங்கிய பிறகுதான், பின்னால் வந்தவன் முன்னேறி வந்து அவன் தோள்மீது கை வைத்தான். அதை அறிந்த சுதாகர் துணுக்குற்று நின்றான்.

"இப்படி எத்தனை தூரம்தான் ஓடுவீர்கள்?" என்று கேட்டான் பின்னாலிருந்து வந்து தோள்மீது கைவைத்தவன்.

உருவத்தையும் நிமிர்ந்து பார்த்து, அவன் குரலையும் கேட்ட சுதாகர் அவன் யார் என்பதை அடையாளம் கண்டு கொண்டு விட்டான். அப்புறம்தான் அவனுக்குப் படபடப்பு அடங்கித் தைரியம் பிறந்தது.

"எத்தனை தூரம் முடியுமோ, அத்தனை தூரம் ஓடுவேன்! களைத்துக் கீழே விழும் வரை ஓடுவேன்!" என்றான் சுதாகர். அவன் குரலிலும் வெறி தொனித்தது.

"என்னை அடையாளம் தெரிகிறதா, உங்களுக்கு? நான்தான் உங்கள்மீது கத்தியைப் பாய்ச்சியவன்!"

"தெரியாமல் என்ன, ரஹ்மத்! நன்றாகத் தெரிகிறது. நீ இங்கே எங்கே வந்தாய்?" என்று கேட்டான் சுதாகர்.

"உங்களைப் பின் தொடர்ந்துதான்!" என்றான் ரஹ்மத்.

"என்னைப் பின் தொடர்ந்தா? எதற்காக?"

"பரமானந்தர் அனுப்பினார்!"



Every meal- a feast

ஒவ்வொரு வேளையும் விருந்து சாப்பாடுதான்!

காமதேனு வனஸ்பதியில் தயாரித்த ஆகார வகைகள் என்றாலே ஓர் தனி ருசிதான். அது மட்டுமா, காமதேனு வனஸ்பதி குழந்தைகளுக்கும், பெரியவர்களுக்கும் ஒருங்கே, தங்களது செலவழிந்த சக்தியை மீண்டும் பெற உதவுகிறது.

சிறந்தது, போஷாக்குடன் சக்தியூட்டவல்லது.

காமதேனு வனஸ்பதி

சிறந்த சமையல் சாதனம்.

**KAMADHENU**

*Cooking Medium*




தயாரிப்பவர்கள்

## மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல்
## கார்ப்பொரேஷன் லிமிடெட்

மேட்டூர் அணை R. S. - சேலம் ஜில்லா

மானேஜிங் ஏஜண்டுகள்:

சேஷசாயி பிரதர்ஸ் லிமிடெட் - திருச்சிராப்பள்ளி

"பரமானந்தர் அனுப்பினரா? அவர் இங்கே எங்கே யிருக்கிறர்?"

"இந்த ஊரிலேயேதான் இருக்கிறர்! தம் நண்பர் ஒருவரைச் சந்திப்பதற்காகப் போயிருக்கிறர்!" என்றன் ரஹ்மத்.

"நீ பரமானந்தரோடு எப்படி வந்தாய்?" என்று வியப்புடன் கேட்டான் சுதாகர்.

"நான் இப்பொழுதெல்லாம் அவரோடு தான் இருக்கிறேன்!"

"அவரோடு இருக்கிறயா? ஆச்சரியமா யிருக்கிறதே! என்ன செய்து கொண் டிருக்கிறய்?" என்று கேட்டான் சுதாகர்.

"அவர் சொல்லும் வேலையைச் செய்து கொண்டிருக்கிறேன்! இப்பொழுது உங்களைக் கையோடு கூட்டிவருமாறு அவருடைய உத்தரவு. அந்த வேலையை நிறைவேற்றுவதற்காகத் தான் இங்கே வந்திருக்கிறேன்!"

"நான் வராவிட்டால்......?"

"குண்டுக் கட்டாகத் தூக்கிக் கொண்டு போவேன்!" என்றன் ஆஜானுபாகுவான ரஹ்மத் சிரித்துக் கொண்டே.

அவன் சட்டைக் கைகளைத் தூக்கி விட்டுக் கொண்டு நின்றதைப் பார்த்தபொழுது, நாம் சிறிது சிணுங்கினலும் இவன் நம்மைக் கட்டாயம் கட்டித் தூக்கிக் கொண்டே போய் விடுவான் என்று சுதாகருக்குத் தோன்றியது.

ஆனல் சுதாகர் அந்தளவு தூரத்துக்கு இடம் வைக்கவில்லை. அவனுக்கே பரமானந்தரிடம் போய்விட வேண்டும் என்ற ஆசை உண்டாயிற்று. 'வாழ்க்கையில் ஏமாற்றமடைந்து நம்பிக்கை யிழந்து விட்டால், என்னிடம் வா!' என்று ஒரு நாள் பரமானந்தர் அவனிடம் சொல்லி யிருந்தார் அல்லவா? அது அவனுக்கு நினைவு வந்தது. பரமானந்தரின் பெயரை ரஹ்மத் சொல்லவே, அவனுடைய தறிகெட்டுத் திரிந்த மூளை ஒரு நிலைக்கு வந்தது. பரமானந்தரை ஞாபகப்படுத்தியதற்காக ரஹ்மத்தை மனத்துள் வாழ்த்தினன். உடனே பரமானந்தரிடம் புறப்படவும் தயாராகி விட்டான்.

ரஹ்மத்துடன் அவன் நடந்தான், பரமானந்தரைப் பார்க்கும் ஆசையுடன். அப்பொழுது அவனுடைய உள்ளத்திலே பயங்கர அவநம்பிக்கை நிலவி யிருந்தது. அவன் வாழ்க்கையில் ஏற்பட்ட அந்த ஏமாற்றத்தைக் காட்டிலும் அந்த அவநம்பிக்கையைக் காட்டிலும் மேலான ஏமாற்றமும் அவநம்பிக்கையும் வேறு என்ன இருக்க முடியும்? எனவே, பரமானந்தர் சொன்னபடி அவன் அவரைச் சரணடைய வேண்டியதுதானே?

ஆனல் அந்த விஷயத்தில் அவரால் அவனுக்கு என்ன உதவி செய்ய முடியும்? அவனுக்கு ஏற்பட்டிருந்த ஏமாற்றத்தை மாற்ற முடியுமா? அவநம்பிக்கையை நம்பிக்கையாகப் பரிணமிக்கச் செய்ய முடியுமா? நடந்து போனதை மாற்றும் சக்தி அவருக்கு ஏது? அவருக்கு மட்டும் என்ன? விதிக்கும் கூடக் கிடையாதே! அந்த விதியை வகுத்த வல்லவனை கடவுளுக்குக் கூடக் கிடையாதே! அப்படி யிருக்கும் பொழுது அவன் அவரிடம் சென்று சரண் அடைந்து என்ன பிரயோஜனம்?

மாதவப் பிரஸாதுக்கும் 'மனேரமாவுக்கும் நடந்த திருமணம் சமூகத்தினல் ஏற்கப்பட்டுள்ள விஷயம். திருமணமே ஒரு சமூகச் சடங்கு. அப்படி யிருக்கும்பொழுது நடந்



# சென்னை வியாபாரம்!













தேறிவிட்ட அந்தக் கல்யாணத்தை ஒருவன் எப்படி மாற்ற முடியும்? சமூகத்தின் சட்ட திட்டங்கள்தான் அதற்கான நிபந்தனைகளை வகுத்து மனிதனை அந்தண்டை இந்தண்டை நகர முடியாமல் கட்டிப் போட்டு வைத்திருக்கின்றனவே! அத்தகைய நிலைமை ஏற்பட்டு விட்ட பிறகு, மனோரமாவும் சுதாகரும் தங்கள் தங்கள் காதலைத் தியாகம் செய்வதைத் தவிர வேறு என்ன செய்ய முடியும்? திருமணம் என்னும் சடங்கில் தீ வளர்த்துத் தம்பதிகள் கைத்தலம் பற்றுகின்றனர். அப்படிக் கைத்தலம் பற்றிய பின்னர், சுதாகரும் மனோரமாவும் தங்கள் தங்கள் காதலை எப்படி வளர்த்துக் கொள்ள முடியும்? வளர்ந்திருக்கும் அந்தத் தீயில் அதை ஹோமம் செய்துவிட்டுப் பழைய நினைவுகளை அடியோடு மறந்துவிட வேண்டியவர்கள் தாமே?

மறந்துவிட வேண்டியதுதான் நியாயம். ஆனால் மறக்க முடியுமா என்பதுதான் பெரிய பிரச்னை. அப்படி மறக்க முயல்வதையே பெரிய தியாகம் என்று சொல்ல வேண்டும். அந்தத் தியாகம் செய்வதற்கு மிகவும் மனோதிடம் வேண்டும். அப்படிச் செய்யும் பொழுதும் உள்ளத்தை நாளுக்கு நாள், நிமிஷத்துக்கு நிமிஷம் தன் கையாலேயே துண்டு துண்டாக்கிச் சிதைக்க நேரிடும். அப்பப்பா! அது எத்தனை கொடூரமான செயல்! அப்படிச் செய்யும் பொழுது மனோரமாவின் மனத்துக்கு அதிகத் துயரம் நேரக்கூடாது என்று விரும்பினான் சுதாகர். அதற்கான செயலில் இறங்குவது தான் தன்னுடைய பெரிய கடமை என்றும் எண்ணினான்.

அப்படிச் செய்வதென்றால் அவன் அவளுடைய வாழ்க்கையிலிருந்தே மறைந்துவிட வேண்டும். அப்பொழுதுதான் அவளால் ஒருவாறு அவனை மறக்க முடியும். ஆனால் மனோரமாவின் வாழ்க்கையிலிருந்து மறைந்துவிடக் கூடியது என்பது முடிந்த காரியமா? அவன் அவளுடைய கண்களில் படாமல் இருந்து விடலாம். அது அவன் கைக்குட்பட்ட காரியம். ஆனால் அவளுடைய மனத்திலிருந்து மறைந்து விடுவது என்பது இலேசுப்பட்ட காரியமா? அதைப்பற்றியெல்லாம் யோசிக்க அப்பொழுது அவன் புத்திக்குத் தோன்றவில்லை. தான் ஓடிவிட்டால் அவள் தன்னை மறந்து விடுவாள் என்றே எண்ணினான். அந்த எண்ணத்தையே செயலாக்கியும் காட்டி விட்டான். ஆனால் பரமானந்தர் இந்த விஷயத்தில் என்ன செய்ய முடியும்? எப்படி அவனுக்கு உதவி புரிய முடியும்?

இருந்தாலும் அவன் பரமானந்தரின் இருப்பிடம் தேடிச் சென்றான். அவர் அப்பொழுது ராமலாலின் பழைய வீட்டில் இருந்தார். அங்கே மனோரமாவின் தாய் தந்தையர் இல்லை. மாதவப் பிரஸாத் காயமுற்று வந்திருக்கும் செய்தி கேட்டு அவர்கள் அவரைப் பார்ப்பதற்காகவும் அவருக்கு வேண்டிய பணிவிடைகள் புரிவதற்காகவும் அவருடைய வீட்டுக்குச் சென்றிருந்தார்கள்.

சுதாகரைக் கண்டதும் பரமானந்தர், "வா, சுதாகர்!" என்று வரவேற்றார்.

சுதாகர் அவர் அருகில் போய் உட்கார்ந்தான். அதே வீட்டில்தான் அவன் மனோரமாவை முதன் முதலில் சந்தித்திருந்தான். அதே இடத்தில்தான் அவன் தன் இருதயத்தை அவளுக்கு அர்ப்பணம் செய்திருந்தான். அவளுக்கு அடிமையாகி ஆத்ம சமர்ப்பணமே செய்திருந்தான். ஆனால் அவன் செய்த அந்த ஆத்ம சமர்ப்பணம் இன்று வியர்த்தமாகி விட்டது; வீணாகி விட்டது; சிறிதும் பயன் அற்றதாகி விட்டது. அவளைப் பார்க்காமல் அவன் ஓடி ஒளியவேண்டியிருந்தது. மனோரமாவை மறந்து எவ்வளவுக்கெவ்வளவு விலகி யிருக்க முடியுமோ, அவ்வளவுக்கவ்வளவு நல்லது என்ற முடிவுக்கு வரும்படியான நிர்ப்பந்த நிலைமை ஏற்பட்டிருந்தது. அவன் துரதிர்ஷ்டத்தை என்னவென்று சொல்வது?

அவர் வரவேற்புக்கு என்ன பதில் சொல்வது என்று சுதாகருக்குப் புரியவில்லை.

"உன்னைப் பின் தொடர்ந்து உன்னைக் கண்காணித்தவாறே நான் இவ்வளவு தூரம் வந்திருக்கிறேனாக்கும்! தெரிந்ததா?"

பேசாமல் உட்கார்ந்திருந்த சுதாகரைப் பார்த்துப் பரமானந்தர் சொன்னார்.

"நான் இங்கே வந்திருக்கிறேன் என்பது உங்களுக்கு எப்படித் தெரிந்தது?"—விவரம் புரியாத சுதாகர் வியப்புடன் கேட்டான்.

"உலகத்திலே உன்னைப் போன்ற முட்டாள்கள் எத்தனையோ பேர் இருக்கிறார்கள்! அவர்களில் பல பேரை நான் கண்காணித்து வருகிறேன்; கவனித்து வருகிறேன். அம்மாதிரி முட்டாள்களின் அட்டவணையில்..." என்று சொல்ல வந்த வாக்கியத்தை முடிக்காமலேயே நிறுத்தினார் பரமானந்தர்.

என்ன? சுதாகர் முட்டாளா? முட்டாளாக இல்லாவிட்டால் இத்தனை நாட்களும் மனோரமாவுக்குக் கடிதம் எழுதாமல் இப்படித் தூங்கியிருப்பானா? அவன் வாய் திறந்து பதில் பேசவில்லை. எதிர்வாதம் புரியாமலேயே தன்னை முட்டாள் என்று ஒப்புக்கொண்டு விட்டான். 'மௌனம் சம்மதி லக்ஷணம்' அல்லவா? அப்படிப் பேசாமல் இருந்தால் அவர் சொன்னதை அவன் அப்பட்டமாக ஒப்புக் கொண்டதாகத்தானே அர்த்தம்?

"எங்கேயாவது நீ அசட்டுப் பிசட்டென்று காரியங்கள் செய்து விடுவாயோ என்று எனக்குக் கவலையாக இருந்தது!"

"உம்!"

சுதாகருக்கு அதற்குமேல் பேச ஓடவில்லை.

"நீ மாதவப் பிரஸாதின் வீட்டிலிருந்து வெளியேறி ஓட விரும்பிக் கொண்டிருக்கிறாய் என்பதை நான் இரண்டு மணி நேரமாக அறிவேன். அதனால்தான் உன்னைக் கண்காணிக்க வேண்டி ரஹ்மத்தை அனுப்பி வைத்தேன். ஆமாம், எங்கே போவதாக உத்தேசம்?" என்று கேட்டார் பரமானந்தர்.

"கால்கள் எங்கே இழுத்துச் செல்கின்றனவோ, அங்கே!" என்றான் சுதாகர்.

"இந்தக் காலத்துப் பிள்ளைகளுக்குக் கால்கள் வேறு இருக்கிறதா?" என்று குத்தலான குரலில் கேட்டார் பரமானந்தர்.

"கால் வேண்டாம். மனம் என்று ஒன்று இருக்கிறதல்லவா?" என்றான் சுதாகர். இந்தக் காலத்துப் பிள்ளைகளைப் பற்றிப் பரமானந்தர் குத்தலாகப் பேசியது அவனுக்குப் பிடிக்கவில்லை. அதனால் அவன் குரலில் எரிச்சலும் ஆத்திரமும் தொனித்தன. (தொடரும்)

## தாய்மொழிக்குச் சாவுமணியா?

சில தினங்களாகச் சென்னை இந்திய மருத்துவக் கல்லூரியைப் பற்றிப் பத்திரிகைகளில் வெளிவரும் செய்திகளைக் காணும்பொழுது பிரமிக்க வேண்டி யிருக்கிறது.

கல்லூரிகளிலும் தாய்மொழியிலேயே பாடம் கற்பிக்க வேண்டும் என்ற கிளர்ச்சி வளர்ந்து வரும் இந்நாளில், இந்திய வைத்தியக் கல்லூரியில் போதனா முறை சம்பந்தமாகப் பிறப்பிக்கப் பட்டிருக்கும் உத்தரவுகள் யாரையும் வியப்பில் ஆழ்த்தக் கூடியவையா யிருக்கின்றன.

தமிழிலும் வடமொழியிலும் உள்ள பாட புத்தகங்களைத் தழுவி அவரவர் தாய்மொழியில் சித்த, ஆயுர்வேத, யூனானி வைத்திய சாஸ்திரங்கள் இதுவரை போதிக்கப்பட்டு வந்தன. அந்த முறையை மாற்றி ஆங்கிலத்தில் புத்தகங்கள் எழுதி ஆங்கிலத்திலேயே கற்பிக்க வேண்டும் என்று சென்னை சர்க்கார் உத்தரவு பிறப்பித்திருக்கிறது. இந்திய அரசியல் சட்டம் ஆங்கிலத்தைப் பதினைந்து ஆண்டுகளுக்குள் அறவே ஒழிக்க வேண்டும் என்று கூறுகிறது. ஆனால் சென்னைக் கல்லூரியோ ஆங்கிலத்துக்கு இத்தனை நாளும் இல்லாத வகையில் ஆக்கம் அளிக்கப் பார்க்கிறது. இது விந்தையிலும் விந்தையாக இல்லையா!

ஏறக்குறைய முப்பது வருஷங்களுக்கு முன் சுதேசி வைத்திய முறைகளை முன்னணிக்குக் கொண்டு வரவேண்டும், நாட்டுப் புறத்துக்கு நல்ல வைத்திய வசதி அளிக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் ஆரம்பிக்கப்பட்டது இந்தக் கல்லூரி. இவ்வளவு நாட்களும் இந்தக் கல்லூரியில் தாய்மொழியில் தான் போதனை நடந்து வந்திருக்கிறது. அதில் ஏதாவது தீமைகள் தென்பட்டால் மாற்றிக்கொள்ள வேண்டியது அவசியம்தான்.

ஆனால் எந்தத் தீமையும் இல்லாதபொழுது இவ்வளவு நாட்களும் தாய்மொழியில் இருந்த பாட புத்தகங்களை நீக்கி ஆங்கிலத்தில் எழுதச் செய்வதென்றால் வீண் பணச் செலவும் கால விரயமும் ஆகாதா! தாய்மொழிக்குச் சாவுமணி அடிப்பதாக முடியாதா!

அதுமட்டும் அல்ல; இந்தியா முழுவதுக்குமே பொதுவான வகையில் இந்திய மருத்துவக் கலையைப் போதிப்பதற்கென்று இந்திய சர்க்கார் ஒரு திட்டம் தயாரித்து வருகிறார்கள். இந்தச் சந்தர்ப்பத்தில் முப்பது ஆண்டுகளுக்கு முன்னமேயே இவ்விஷயத்தில் முற்போக்கான நடவடிக்கையை எடுத்துக் கொண்டு நாட்டுக்கே வழிகாட்டியாக இருந்து வரும் சென்னை தன் திட்டத்தை ஏன் மாற்றிக் கொள்ள வேண்டும்!

சென்னை
24—2—54

வி. எஸ். நிர்மலா

# தேநீர் விளையாட்டுக்குப்பின்

வெய்யிலில் நாள் முழுதும் பீல்டிங் செய்தபிறகு, அவுட்டான பாட்ஸ்மனுக்கு ஆறுதல் அளிக்கவும், கால்பந்து அல்லது ஹாக்கி மைதானத்தில் கடுமையாகப் போராடிக் களைத்த கோஷ்டிகள் கூடும் பொழுதும் — தேநீரையே நாடுகின்றனர். ஆட்டக்காரருக்குத் தேநீர் புத்துயிரூட்டுவதுடன் இதமும் அளிக்கிறது. தேநீரைப் பகிர்ந்து அருந்துவதால் விளையாட்டின் உண்மை உணர்ச்சி பலப்படுகிறது.



## தேநீர்



ஒவ்வொருவருக்கும் புத்துயிரூட்டுகிறது

மத்திய டீ போர்டு வெளியீடு.

CTB. 28

# வாழ்க்கைக் கலைஞர்

**அ. சீனிவாசராகவன்**

மேற்கே, ஜடாயுவின் சிறகைப் போல் இரு குன்றுகள் விரிந்து நின்றன. அந்தி வானச் செக்கர் வெள்ளம் பொங்கி, மலை முகட்டின் மேல் வழிந்து, மத்தளம் பாறைச் சாலையின் மேலும், வயலின் பொன் விசாலத்திலும் சிதறியது. வயல நகே ஓடையொன்று சலசலத்தது. சோலையில், குருவியின் கரகரத்த குரல் சிலிர்த்தது. எங்கள் நெஞ்சின் இருளில் குமுறிய துயரின் எதிரொலியாக...

சாலையருகே, வயலின் தென் கிழக்கு மூலையில், குற்றால மலைகளின் அரவணைப்பில், டி. கே. சி.யை விட்டு விட்டுத் திரும்பினோம். 'நிலையாமை சால நிலைபெற்றது.'

நிலை பெற்றது நிலையாமை ஒன்று தானா?

மனத்திலே பழைய நினைவுகள் மெல்லத் தலை தூக்கின......

★

சந்தனக்கும்பா தவறிக் கீழே விழுந்தது. பக்கத்திலிருந்த டி. கே. சி.யின் மேல் சிறிது சந்தனம் தெறித்தது.

"போகட்டும், அந்த மட்டும் நல்லது தான்" என்று சிரித்தார் டி. கே. சி.

அன்று நல்ல நிலவு. டி. கே. சி. யின் வீட்டையடுத்த திறந்த வெளியில் உட்கார்ந்திருந்தோம்.

"நல்லது தான், இந்தப் பொல்லாத சந்தனம் நிலாவில் நெருப்பாக மாறியிருக்கலாந்தானே? மாறவில்லை. அந்த மட்டுக்கும் பிழைத்தோம்!" என்றார் டி. கே. சி.

அருமையான பாட்டு ஒன்று வரப் போகிறது என்பது எங்களுக்குத் தெரியும். பேசாமல் இருந்தோம்.

டி. கே. சி. பேசினார்:

நந்தி வர்மனைத்தான் உங்களுக்குத் தெரியுமே. அவனுக்கு எப்படியோ பைந்தமிழை ஆய்கின்ற பொல்லாத பழக்கம் வந்து விட்டது. என்ன செய்வான், அப்பாவி! அந்தத் தமிழ்க் கடலிலே குதித்துக் கும்மாளி போட்டுக் கொண்டிருந்தான். தமிழ் அமுதைக் குடித்துக் குடித்து நெஞ்சு விசாலமாக விரிந்து விட்டது. வீரம் அவனிடத்திலே குடி கொண்டது. பண்பு, தமிழ்க் கவிதையிலே தன்னை மறந்தால் பண்பு வருவதற்கு என்ன கொள்ளையா? தானே வந்தது.

பெண்ணொருத்திக்கு அவனிடத்திலே காதல். அவனை, ஆமாம், அவனை அடைய முடியாமல் தவிக்கிறாள்.

> **—பைந்தமிழை**
> **ஆய்கின்ற கோன்நந்தி ஆகம் தழுவாமல்**
> **வேகின்ற பாவியேன்**

என்று தன்னை இனம் காட்டிக் கொள்ளுகிறாள். வெந்து துடிக்கும் இந்தப் பெண் மீது 'ஐயோ, பாவம்' என்று இரக்கப் பட்டு, யாரோ ஒரு தோழி சந்தனத்தைக் கொண்டு வந்து தடவினாள். குளிர்ச்சியாக இருக்கட்டும் என்று தான். அந்தத் தோழி கண்டாளா சந்தனம் நெருப்பாக மாறுமென்று? 'யாரது, இப்படிச் செய்தது? இதென்ன இது, தடவியது என்ன?' என்று தாங்க முடியாத வேதனையில் பெண் கூப்பாடு போட்டாள்.

"சந்தனம் அம்மா, நல்ல குளிர்ச்சியான சந்தனம்" என்றாள் தோழி.

"சந்தனமா? நெருப்பைச் சாறு பிழிந்து தடவி விட்டாயே, பாதகத்தி!

> **'செந்தழலின் சாற்றைப் பிழிந்து செழுஞ்சீதச்**
> **சந்தனமென் றாரோ தடவினார்—பைந்தமிழை**
> **ஆய்கின்ற கோன்நந்தி ஆகம் தழுவாமல்**
> **வேகின்ற பாவியேன் மீது!'**

வெண்பாவின் ஈற்றடியும், பின் இரண்டடிகளும் முதல் இரண்டு அடிகளோடு பின்னிப் பின்னிச் சந்தனம் நெருப்பாக மாறிய விந்தையின் மூலம் காதலின் வேதனையை எங்கள் அனுபவமாகத் தந்தன. ரஸிகமணி டி. கே. சி. யின் குரல், பாட்டின் பாவத்தைத் தாங்கி எங்கள் நெஞ்சில் புகுந்தது.

"காதல் பாவம் எவ்வளவு அற்புதமாக இந்தப் பாட்டில் வடிவாகி இருக்கிறது, பார்த்தீர்களா? தமிழில்தான் இது முடியும்" என்றார் டி. கே. சி.

'ஆம்' என்றது எங்கள் அனுபவம். நேரிலே அனுபவித்த பிறகு வாதம் ஏது?

★

இப்படி எத்தனையோ சம்பவங்கள். சுற்றி நடைபெறும் எந்தச் சிறு நிகழ்ச்சியும், இலக்கிய உலகுக்கு நம்மை அழைத்துச் செல்லும் சாதனமாக டி. கே. சி. யின் கையில் மாறிவிடும். எளிமையான, ஆனால் வன்மை மிகுந்த பேச்சுத் தமிழில், நாலைந்து நிமிஷ நேரத்தில், கவிஞனுடைய இதயத்துக்கு நம்மை அழைத்துச் செல்லும் மந்திர சக்தி அவருக்கு இருந்தது. பாடல்களின் தாளப் பண்பு பூரணமாக வெளியாகும் முறையில், உணர்ச்சியோடு பாடுவார்; இடையிடையே சில வார்த்தைகள் பாட்டின் உணர்ச்சியைக் காட்டுகின்ற வகையிலே அவரிடமிருந்து வெளிவரும்; பதவுரை, பொழிப்புரை, இலக்கணக் குறிப்புக்கள் இவையொன்றும் இல்லாமல் பாட்டின் ரஸத்தை நமக்குத் தரும் அற்புதத்தை டி. கே. சி. தம்முடைய தனி முறை ஆக்கிக் கொண்டார்.

ஞான வரம்பான மோனத்தை நோக்கிச் செல்லும் சொல்லின் நாதமே கவிதை என்றால் அக்கவிதைக்கு அமையும் உரையும் மோனத்தை நோக்கிச் செல்லும் தெய்வப்

பாதையாக அல்லவா அமைய வேண்டும்? இப்படி அமைந்தது டி. கே. சி. கம்பனுக்குக் கண்ட உரை. பாட்டில் உள்ள கருத்தைவிட அதன் உணர்ச்சியும், வடிவமும் முக்கியமானவை என்பதை நாமும் உணரும்படி செய்வதில் அவருக்கு ஈடாக வேறொருவரும் கடந்த முப்பது ஆண்டுகளாகத் தமிழ் நாட்டில் இருந்தது இல்லை. உணர்ச்சியும், வடிவமுமே பாட்டின் பொருள். இவையில்லாவிட்டால் பாடல் என்பது இல்லை; வெறும் இலைத்துப் போன கருத்துத்தான் எஞ்சிநிற்கும்; கருத்தை மாத்திரம் ஆராய்வது கரும்பிலிருந்து சாற்றைப் பிழிந்து விட்டுச் சக்கையைமென்று தலையாட்டுகின்றனக் கணக்குத்தான்—இதுவே டி. கே. சி. யின் சித்தாந்தம்.

இதன்படி அவர் வாழ்ந்தார். கவிதையின் சௌந்தர்ய உலகத்தைத் தன் வாழ்க்கையோடு எப்போதும் பிணைத்து, வாழ்க்கையில் அழகும், ஆனந்தமும் பொங்கும்படியாகச் செய்த மகத்தான சாதனை அவருடையது. இதனால்தான் எத்தனையோ உள்ளங்களில் தமிழ்ப் பாடலின் சக்தியைத் துணையாகக் கொண்டு எல்லையற்ற குதூகலத்தை அவரால் விதைக்க முடிந்தது. ஒளி பொருந்திய இலக்கியச் சூழ்நிலை ஒன்றையும் அவரால் சிருஷ்டிக்க முடிந்தது.

இந்தச் சூழ்நிலையில், தமிழ்க் கலைகள் மலர்ந்தன. பாட்டும், கவிதையும், நடனமும் வளம் பெற்றன. தமிழனுக்குத் தமிழ் மொழியில், தமிழ் இலக்கியத்தில், தமிழ்க் கலையில், புதிய நம்பிக்கையும் ஈடுபாடும் பிறந்தன.

*

நிலையாமை மாத்திரம் நிலை பெறவில்லை. அன்பும், அழகும் அவற்றை வடித்தெடுக்கும் கலையும் நிலை பெற்றன. அவற்றில், 'என்றுமுள தென் தமிழில்' டி. கே. சி. யும் நிலை பெற்றார். மத்தளம் பாறைச் சாலையின் மேலும், சோலையின் மேலும், குற்றால மலைகளின் மார்பிலும் புரண்டோடிய பால் நிலவு துயரத்தோடு திரும்பிய எங்களுக்கு அன்று பேசிய செய்தி இது.

# தாயின் திருவடியில் தவம் புரிந்த முனிவர்

*ஜெயமணி*

ரசிகமணி டி. கே. சி. அவர்களின் எழுத்து வன்மையால் ஆகர்ஷிக்கப்பட்ட பக்தர்கள் பர்மா, மலேயா, சயாம் முதலிய நாடுகளில் ஏராளமாக இருக்கின்றனர். அவர்களில் சிலர் குற்றால மாமுனிவருடன் அளவளாவிப் பேசிப் பழகும் பாக்கியமும் பெற்றவர்கள்.

மலாய் நாட்டில் நான் வசித்த காலத்தில் தமிழ் உலகில் டி. கே. சி. அவர்களின் தனிச் சிறப்பைப் பற்றி ஒரு சமயம் பிரஸ்தாபம் ஏற்பட்டது. அப் பெரியாருடன் நெருங்கிப் பழகிய ஒரு பிரமுகர் என்னை மூன்று கேள்விகள் கேட்டார்.

டி. கே சி. அவர்களுடன் பழகியிருக்கிறீர்களா? அவர்கள் வீட்டில் சாப்பிட்டிருக்கிறீர்களா? குற்றாலம் அருவியில் குளித்திருக்கிறீர்களா!

இன்று அந்தப் பிரமுகர் அவ்விதம் கேட்பாராயின், அக் கேள்விகளுக்குப் பெருமையுடன் பளிச்சென்று பதில் சொல்லியிருப்பேன். ஆனால் சுமார் பதினைந்து வருஷங்களுக்கு முன் நண்பர் கேட்ட அந்தக் கேள்விகளுக்கு உற்சாகத்துடன் பதில் அளிக்க முடியவில்லை.

அப்போது நான் இருந்த இடத்திலிருந்து இந்தியா இரண்டாயிரம் மைல் தூரத்தில் இருந்தது. டி. கே. சி. அவர்களோ இன்னும் அதிகத் தொலைவில் இருப்பதாக எனக்குத் தோன்றியது. கோலாலம்பூரில் உள்ள ஸ்தாபா வெந்நீர் ஊற்றுக்கு அருகில் வசித்து வந்த எனக்குக் குற்றாலம் அருவியைப் பற்றிக் கற்பனை செய்து கொள்ளவும் முடியவில்லை.

இந்தியாவுக்குத் திரும்பி வந்த பின் ரசிகமணியைச் சந்தித்துப் பேசும் அருமையான வாய்ப்புக் கிடைத்தது. அவர்களுடைய இனிய மொழிகளையும் அருமையான சொற்பொழிவுகளையும் கேட்கும் பாக்கியமும் கிட்டியது.

எந்தப் பாடலாயினும், டி. கே. சி. யிடம் பொருள் விளக்கம் கேட்டவர்கள் பிறகு அதை என்றுமே மறக்க முடியாது.

'சாணினும் உளன்' என்று ஆரம்பித்து, 'கனகன் நக்கான்' என்று முடியும் பாடலை, ஒரு சமயம் டி. கே. சி. அவர்கள் தமக்கே உரித்தான தனிப் பாணியில் விளக்கியபோது தேன் கடலில் மூழ்கித் திளைப்பதுபோல் இருந்தது.

"பிரஹ்லாதனின் பதில்களைக் கேட்டு ஹிரண்யன் நகைத்தான்; பேரறிஞனின் ஞான மொழிகளைக் கேட்டுச் சர்வ வல்லமையுள்ள பணம் சிரித்தது!" என்று ரசிகமணி பொருள் கூறியபோது மெய் சிலிர்த்தது.

பிரஹ்லாதனுக்குப் படிப்பே வரவில்லை என்று போதகாசிரியர் வருந்துகிறார் அல்லவா!

"பிரஹ்லாதனுக்கு எப்படிப் படிப்பு வரும்! கணித மகா மேதாவி ராமானுஜம் கலாசாலைப் பரீட்சை தேற முடியாமல் திண்டாடினான். பிரஹ்லாதன் இன்று இருந்தால் எத்தனை வருஷங்களானாலும் எஸ். எஸ். எல். ஸி. பரீட்சையில் கூடத் தேற முடியாது!" என்று ரஸிகமணி டி. கே. சி. அவர்கள் கூறியபோது எல்லோரும் வயிறு குலுங்கக் குலுங்கச் சிரித்தனர்.

அறிவுக்கும் இந்தக் காலத்துப் படிப்புக்கும் சம்பந்தம் இல்லை என்பதைச் சுட்டிக்காட்ட டி. கே. சி. தவறுவதே இல்லை.

சதா சர்வகாலமும் தமிழ்த்தாயின் திருவடி நிழலில் தவம் புரிந்து கொண்டிருந்த ரசிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்களை, கட்பு, அன்பு, இன்சொல், விருந்தோம்பல் முதலிய குணப் பண்புகளில் வள்ளுவர் வகுத்த வழியை வழுவாது பின்பற்றிய குற்றால முனிவரை, இடையறாத பேரின்ப நிலையை அடைந்துள்ள தமிழ் அன்னையின் செல்வப் புதல்வரை என்றென்றும் நினைவு கூர்வோமாக.

நகைமுகன், 'கோலினுஸ்' சிறுவன்





பழமையான பற் பேஸ்டு களைக் கொண்டு திருப்தி யடையாதீர்கள்! க்ளோரோபில் சேர்ந்த 'கோலினுஸ்' உபயோகியுங்கள் — அது பல் சிதைவுக்குக் காரணமான கிருமிகளைத் தடை செய்கிறது. ஈறுகளை ஆரோக்கியமாக வைத்திருக்கிறது.

# உங்கள் பற்களைத் தேய்க்க இதோ மிகச் சிறப்பான புதிய வழி!





உங்கள் சுவாசத்தையும் புது மணம் கமழ வைத்திருக்கிறது. அற்புதமான 'கோலினுஸ்' நுரை க்ளோரோபில் வாயில் பிரஷ் நுழைய முடியாத இடங்களுக்கும் எடுத்துச் செல்கிறது!

மிகச் சிக்கனமானது! உங்கள் பிரஷில் அரையங்குல அளவே தேவை. எனவே 'கோலினுஸ்' அதிகநாள் வருகிறது. உங்கள் பணத்திற்கு மிகச் சிறந்த பெறுமதி இது!

'கோலினுஸ்' புன்னகையில்




ஆரோக்கியம் ததும்புகிறது

## குழந்தைகளுக்கு இலவசம்

உங்கள் பெயர் மற்றும் விலாசத்தை மட்டும் 'நகைமுகன்', டிபார்ட்மெண்ட் 88, த. பெ. 541, பம்பாய் என்ற விலாசத்திற்கு அனுப்பினால், அவன் உங்களுக்கு 'நகைமுகனும் அவனுடைய பிராணி நண்பர்களும்' என்ற தனது ரஸமான சித்திரக் கதையை அனுப்புவான். இப்பொழுதே எழுதுங்கள்!

GK. 9372

# தேன் மொழியாள்

## 7

வீட்டிலிருந்து வெளியே வரும்பொழுது ஒரு கணம் அவர்கள் வெளி வாசலண்டைத் தயங்கி நின்றார்கள். சுற்றும் முற்றும் பார்த்தார்கள்.

தேன்மொழி மெதுவாகப் பெருமூச்சுவிட்டாள். தன் தந்தையின் அருகில் வந்து நின்றாள். தேன்மொழியின் கருங்குழலில் ஒருகட்டு முல்லைச் சரம் இருந்தது. மிகக் கவனமாக ஆடைகளை அணிந்திருந்தாள். புடவைக்கு ஏற்ற ரவிக்கையைப் போட்டுக் கொண்டிருந்தாள். கையில் துல்லியமான வெள்ளை மலர்களை வைத்திருந்தாள்.

தேன்மொழியின் தந்தை ஒருதரம் சாலையின் இருபுறமும் கூர்ந்து நோக்கினார். வழியில் யாரையும் காணாது போகவே தேன்மொழியை அழைத்துக் கொண்டு தாமரைக் குளத்துத் தென்னந் தோட்டத்தை நோக்கிக் கிளம்பினார்.

ஆமாம். அவர்கள் சற்று அவசரம் அவசரமாகவே நடந்தார்கள். என்ன அவசரம்! எங்கு போக அவசரம்! யாரைப் பார்க்க அவசரம்! தேன்மொழியின் காதலன் இனியனைப் பார்ப்பதற்காகத்தான் அவர்கள் சென்று கொண்டிருந்தார்கள். சிந்தனையில் ஆழ்ந்தவர்களாகவே நடந்தார்கள். ஆகாயம் நிர்மலமாயிருந்தது; வெய்யில் காய்ந்து கொண்டிருந்தது. பறவைகள் அங்கு இங்கும் பறந்து திரிந்து கொண்டிருந்தன. தாமரைக் குளத்திலிருந்து இன்பமயமான காற்று ஜிலுஜிலு வென்று அடித்துக் கொண்டிருந்தது. இதையெல்லாம் கவனிக்காமலே தேன்மொழியும் அவள் தந்தையும் சென்று கொண்டிருந்தனர். தேன்மொழியின் மனத்திலே மட்டும் இன்பம் ஊற்றாகப் பெருக்கெடுத்தது. ஒரு புதிய அருவி சலசலத்துக் கொண்டு ஓடுவது போலிருந்தது. கள்ளமற்ற தூய மனத்தில் இருந்த புது உணர்ச்சியை அறிந்து அனுபவித்துக் கொண்டே சென்றாள் தேன்மொழி. அவள் கையில் வைத்திருந்த வெள்ளை மலர்கள் இனிய நறுமணம் கமழ்ந்து அவளுக்கு இதம் தரும் இன்பம் அளித்தது.

தென்னந் தோட்டத்து வேலிப்படலைத் திறந்து கொண்டு அவள் தந்தை தோட்டத்துக்குள் சென்றார். தேன்மொழியும் மெதுவாக நடந்தாள்.

"தேன்மொழி! இனியன் இப்பொழுது இங்கு வருவதாக உன்னிடம் சொல்லியிருந்தாரா!" என்று கேட்டார் தந்தை.

"கட்டாயம் வந்து இருப்பார், அப்பா. வைக்கோல் போருக்கு அப்பால் தாமரைக் குளத்தை ஒட்டினாற் போலிருக்கும் அரச மரத்து நிழலில் இருப்பதாகச் சொல்லியிருந்தார்."

தேன்மொழியின் தந்தை தன் மீசையை முறுக்கி விட்டுக்கொண்டார். தொண்டையை ஒருதரம் கனைத்துக் கொண்டார். தேன்மொழி அங்கேயே கையிலிருந்த வெள்ளை மலர்களைப் போட்டு விட்டாள். அவள் இதயம் படபட வென்று அடித்துக் கொண்டது; கண்கள் மூடி மூடித் திறந்தன.

தேன்மொழியைப் பார்த்து அவள் தந்தை ஒருகணம் தயங்கினார். பிறகு சொன்னார்:

"இனியனிடம் நான் எப்படி அதைப் பற்றிக் கேட்பது என்றே தெரியவில்லை."

"நீங்கள் ஒன்றும் கேட்கவேண்டாம், அப்பா! நம் இருவரையும் பார்த்ததுமே அவர் புரிந்து கொண்டு விடுவார்."

"கடவுள்தான்..." என்று ஏதோ சொல்ல வாயெடுத்தார் தந்தை.

தேன்மொழி குறுக்கிட்டாள். "கடவுள் என்னை ஒரு போதும் கைவிடமாட்டார் அப்பா" என்றாள் மிகுந்த உணர்ச்சியுடன்.

"நான் யாருக்கும் எந்தத் தீங்கும் செய்ததில்லை; செய்ய நினைத்ததுகூட இல்லை. இருந்தாலும் உனக்காக நான் எதையும் செய்யச் சித்தமாயிருக்கிறேன்" என்று சொல்லி விட்டு இனியன் இருக்கும் அரசமரத்தடியை நோக்கிச் சென்றார் தந்தை. தேன்மொழியும் தொடர்ந்து சென்றாள். கீழே கிடந்த இலைச் சருகுகள் அவர்கள் காலடியில் பட்டு 'கல கல' வென்று சத்தத்தை உண்டாக்



னை. 'பளீர்' என்ற வெய்யில் மரங்களின் இடுக்கு வழியாகப் புகுந்து வந்து அவர்கள் முகத்தில் பட்டுப் 'பளபள'வென்று மின்னின.

எத்தனையோ ஆண்டுகளாகப் பண்ணையார் வீட்டில் வேலை செய்திருக்கிறார் தேன்மொழியின் தந்தை. ஆண்டுகள் என்ன, பரம்பரை பரம்பரையாக வேலை செய்து வருகிறார்கள். அவர்கள் இரத்தத்திலேயே பண்ணையார் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் யாரைக் கண்டாலும் எதிரில் நிற்கும் தைரியம் கிடையாது. தங்கள் சொந்த விவகாரங்களை, அதாவது நிலபுலன் சம்பந்தமான விஷயங்களைச் சொல்லுவது என்றாலே வார்த்தைகள் வராது. கையைக் கட்டிக் கொண்டு, உடலைக் குறுக்கிக் கொண்டு, எட்டி நின்று பேசுவார். அப்படிப் பட்டவர் இன்று இனியன் எதிரில் நின்று, "என் மகள் தேன்மொழியை நீ கல்யாணம் செய்து கொள்ளப் போகிறாயா!" என்று எப்படிக்கேட்க முடியும்!

பணத்தை விட, அந்தஸ்தை விட, சாதி வேறு குறுக்கிட்டது. பண்ணையார் உயர்ந்த சாதியைச் சேர்ந்தவர். இவரோ தாழ்ந்த குலத்தைச் சேர்ந்தவர். நூறு நூறு ஆண்டுகளாகத் 'தாழ்ந்த சாதி' 'தாழ்ந்த சாதி' என்று நினைத்து வந்த அந்த மனப்பான்மை அவர் இதயத்தை விட்டு அவ்வளவு விரைவில் நீங்கி விடுமா! அவர் நெஞ்சு 'பட் பட்' என்று அடித்துக் கொள்ள ஆரம்பித்து விட்டது. உடல் இலேசாக நடுக்கம் கண்டது. குளுமையான காற்று வீசிக் கொண்டு இருந்தும்கூட அவர் உடல் வியர்த்து விட்டது. தனக்கு உள்ள தைரியம் அத்தனையும் வரவழைத்துக் கொண்டு இனியன் இருக்கும் இடத்துக்குப் போனார்.

தேன்மொழிக்கு இது போன்ற உணர்ச்சிகள் ஒன்றும் தோன்றவில்லை. அவள் உற்சாகமாகவே வந்தாள். அங்கு இருந்த மலர்ச் செடிகளைப் பார்த்து மகிழ்ந்தாள். சின்னஞ் சிறு குழந்தையைப்போல ஒவ்வொரு செடிக்கு அருகிலும் போய் நின்றாள். பூத்துக் குலுங்கும் மலர்களுக்கு மத்தியில் போய் நின்று அது மலர்ந்து இருக்கும் அழகைப் பார்த்துப் பூரித்தாள்.

கண்ணுக்குப் புலப்படாத, வார்த்தைகளால் வர்ணிக்க முடியாத ஏதோ ஒரு அற்புத சக்தியினால் உலகில் எத்தனையோ காரியங்கள் நடந்து வருகின்றன. சாட்டையைச் சுழற்றி விட்டவுடன் பம்பரம் சுழல்கிறது. அதை எந்தச் சக்தி சுழல வைக்கிறதோ அதே சக்தி இனியனையும் சுழல வைத்துக் கொண்டிருந்தது. இனியன் கையைப் பின்புறமாகக் கட்டிக் கொண்டு அரச மரத்தடியில் முன்னும் பின்னுமாகச் சுற்றிச் சுற்றி நடந்து கொண்டிருந்தான்.

அவனைப் பார்த்தவுடன் தேன்மொழி குதூகலப் பட்டாள். தேன்மொழியின் தந்தை நடுங்கினார். பேசாமல் வந்த வழியே திரும்பி விடலாமா என்று கூட எண்ணினார். அவருக்கு என்ன செய்வது என்றே தெரியாமல் திகைத்துப் போய் நின்றார். உடம்பில் ஒரு மாதிரி சூடு ஏறி விட்டது. நாவறண்டு விட்டது. எந்தத் தைரியத்தில்





நாம் இனியனைக் கண்டு பேச வந்தோம்என்றுஎண்ணும்போது அவருக்குத் தலை சுற்ற ஆரம்பித்து விட்டது. தோப்பு, துரவு எல்லாம் சுழல ஆரம்பித்து விட்டன. காலுக்குக் கீழே உள்ள பூமி வழுக்கிக்கொண்டு போவதுபோல் உணர்ந்தார். அருகில் இருந்த பூவரச மரத்தைப் பலமாகப் பிடித்துக் கொண்டு நின்றார். தன்னை ஒரு தரம் ஆசுவாசப் படுத்திக் கொண்டார்.

தேன் மொழி இனியனின் அருகில் போய் நின்றாள். மெதுவாகக் கனைத்தாள்.

கனைப்புச் சத்தத்தைக் கேட்ட இனியன் திரும்பிப் பார்த்தான். தேன் மொழி அடக்க ஒடுக்கமாகச் சற்று ஒதுங்கியே நின்று கொண்டிருந்தாள். "என் அப்பா வந்திருக்கிறார்" என்றாள்.

"எங்கே!" என்றான்.

மேற்குப் பக்கமாகத் தன் கையை நீட்டிக் காண்பித்தாள் தேன்மொழி.

இனியன் அந்தத் திசையைப் பார்த்தான். கை கூப்பியவண்ணம் தேன்மொழியின் தந்தை நின்று கொண்டிருந்தார். அவர் முகத்திலே எல்லையற்ற பயம் சூழ்ந்து கொண்டிருந்தது.

"மாமா! வணக்கம். வாருங்கள், வாருங்கள். இப்படி வந்து உட்காருங்கள்" என்று வரவேற்றுக் கொண்டே அவர் அருகில் சென்றான் இனியன். அவர் கையை அன்போடு பற்றி அழைத்து வந்தான். அவர் தோளைப் பிடித்து அமுக்கி உட்கார வைத்தான். தானும் அவருக்கு எதிரில் உட்கார்ந்து கொண்டான்.

தேன்மொழி சற்றுத் தூரத்தில் இருந்த ஒரு மலர்ச் செடிக்குப் பின்னால் போய் நின்று இதைக் கவனித்துக் கொண்டிருந்தாள். 'குறு குறு' வென்று பார்த்தவாறே மலர்களை ஒவ்வொன்றாகப் பறித்துக் கொண்டிருந்தாள். இனியனுக்கு அவளைப் பார்க்க வேண்டும் என்று துடியாய்த் துடித்த போதிலும், வேண்டுமென்றே அவன் பக்கம் தன் கண்களைத் திருப்பாமல் இருந்தான்.

தேன்மொழியின் தந்தை இனியனுக்கும் தேன்மொழிக்கும் எந்தவிதமான தொடர்பு இருக்கிறது என்பதை ஒருவாறு ஊகித்து அறிந்து கொண்டார். எனவே அவர் மனத்திலே இதுவரையில் இருந்த பாரம் கொஞ்சம் குறைந்து போயிருந்தது. இருந்தாலும் அதைப் பற்றி அவரால் பேச முடியவில்லை. அவர் காதல் கதைகள் படித்திருக்கிறார். காதலுக்காகச் செய்யும் தியாகங்களைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறார். அது அப்படி தன் பெண்ணின் வாழ்விலேயே வரும் என்று அவர் நினைத்ததில்லை. பணம், பதவி, சாதி இவையெல்லாம் ஒதுக்கித் தள்ளிவிட்டுக் கௌரவம் வாய்ந்த பண்ணையார் வீட்டுப் பையன் காதலுக்காகத் தன் பெண்ணை மணந்து கொள்ள முன் வருவான் என்று அவர் எதிர்பார்க்கவில்லை. இதையெல்லாம் யோசிக்க யோசிக்க அவருக்கு இனியனின் முன் உட்கார்ந்திருப்பதே கஷ்டமாயிருந்தது. தேன்மொழியை அவரால் நினைத்துப் பார்க்க முடியவில்லை. அவர் தன்னைப் பற்றியும் தன் குடும்பத்தைப் பற்றியும் நினைத்தார். கிராமத்தில் ஓய்வென்பதே அறியாமல் அடிமை போல் வாழ்ந்து, களைத்துச் சலித்துப் போன குடும்பம். அந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவள் தேன்மொழி. இனியன் வீட்டில் வேலை செய்யும் ஒரு சாதாரணப் பணிப் பெண்ணாக இருந்து வர வேண்டியவள், அவள் இனியனின் இதய ராணி ஆக முடியுமா! எதிர்காலப் பண்ணையாரின் மனைவியாக முடியுமா!

தன்னையும் அறியாமல் அவர் நிமிர்ந்து இனியனை முகத்துக்கு முகம் நேராகப் பார்த்தார். அவனது சிவந்த முகம், உருண்ட கன்னங்கள், துடிதுடிக்கும் வாட்டமில்லாத உதடுகள், புன்சிரிப்பால் அது அசைந்த கோலம் எல்லாவற்றையும் பார்த்தார். அவன் கண்களில் ஒளி வீசியதைக் கண்டார். அந்தப் பார்வையில் இருந்த ஒரு தைரியத்தையும், தன்னம்பிக்கையும், அன்பையும், கருணையையும் கண்டார். பரம சாது போலக் காணப்படும் இனியன் எதை வேண்டுமானாலும் செய்யும் திறமை யுள்ளவன் என்று அவர் மனத்தில் தெளிவாகப் பட்டது.

அவன் அருகில் சற்று நெருங்கிக் கண்ணோடு கண்ணைப் பார்த்தவாறே பயந் தொனிக்கும் குரலில் மெதுவாகச் சொன்னார்:

"தேன்மொழி சிறு பெண். உலகம் தெரியாதவள். அவளுக்கு ஒன்றும் தெரியாது. தெரியாத்தனமாக அவள் தங்களிடம் அசட்டுப் பிசட்டென்று நடந்து கொண்டு உங்கள் மனத்தைக் கெடுத்திருக்கிறாள். தயவு செய்து நீங்கள்தான் அவளுக்குப் புத்தி சொல்ல வேண்டும்."

பலவித எண்ணங்கள் இனியனின் மனத்திலே பளிச்சிட்டன. அவன் மாமனார் பின்வருமாறு சொல்லுவது போல் அவனுக்குத் தோன்றியது.

"தேன்மொழிதான் புத்தியில்லாதவள். உலகம் தெரியாதவள். உனக்கு எங்கே சென்றது புத்தி! உன் அந்தஸ்து, குடும்ப கௌரவம், சாதி கௌரவம் எல்லாவற்றையும் பார்க்க வேண்டாமா! இம்மாதிரி அசட்டுத்தனமான காரியங்களில் இறங்கலாமா! இதனால் என்ன என்ன விபரீதங்கள் ஏற்படும் என்பதை நினைத்துப் பார்த்தாயா! அதையெல்லாம் தாங்கும் மனவலிமை உனக்கு உண்டா! சாதியின் பெயரால் நடக்கும் அட்டூழியங்களுக்கு உன்னால் சரியானபடி பதில் சொல்ல முடியுமா! உனக்கு என்ன உன் சாதியில், உன் அந்தஸ்துக்கு ஏற்றபடி பெண் கிடைக்காமலா போகிறார்கள்! சாதியிலே, பணத்திலே குறைந்த ஒரு ஏழை வீட்டுப் பெண்ணை மணந்து கொள்கிறேன் என்று சொல்லி அந்தக் குடும்பத்தை நாசமாக்கப் பார்க்கிறாயே!"

தன் தலையை அவன் கோதிவிட்டுக் கொண்டான். வீரம் ததும்பும் ஒருவிதப் புன்னகை அவன் இதழ்களிலே மலர்ந்தது.

"மாமா! நான் தேன்மொழியைக் கல்யாணம் செய்து கொள்வது என்று தீர்மானித்து விட்டேன். தேன்மொழி இல்லாமல் என்னால் வாழ முடியாது. நான் இல்லாமல் அவளாலும் வாழ முடியாது. எங்கள் திருமணம் கட்டாயம் நடந்தே தீரும்" என்றான் கண்டிப்பான குரலில்.

தன் தோளில் கிடந்த துண்டை எடுத்து மடியில் வைத்துக் கொண்டு மரியாதையாகக் குனிந்த வண்ணம் தேன் மொழியின் தந்தை அடக்கமான குரலில் பேச ஆரம்பித்தார்:

"என் சாதி மிகவும் கீழ்ச் சாதிங்க."

"யார் சொன்னது அப்படி! சாதியில் உயர்ந்தது தாழ்ந்தது என்று ஒன்றும் கிடையாது."

"அப்படிச் சொன்னால் முடியுமா!"

"ஏன் முடியாது! சாதி இரண்டுதான். ஒன்று ஆண் சாதி. இன்னொன்று பெண் சாதி. அன்பு செய்து வாழ்பவர்கள் உயர்ந்த சாதியைச் சேர்ந்தவர்கள். அன்பில்லாத மக்கள் தாழ்ந்த சாதியைச் சேர்ந்த மக்கள். அவ்வளவுதான். நீங்கள் செய்யும் தொண்டு, நீங்கள் காட்டும் அன்பு, உங்களுக்கு இருக்கும் பண்பு, உயர்ந்த குணம், இவை மேல் சாதி என்று சொல்லிக் கொள்ளும் யாரிடமும் கிடையாது. நீங்கள்தான் உயர்ந்த சாதியைச் சேர்ந்தவர்கள். நீங்களே உங்களைக் குறைவாக நினைத்துக் கொள்ளாதீர்கள் மாமா. தங்களைத் தாங்களே தாழ்ந்தவர்கள் என்று எண்ணிக் கொள்ளும் மனப்பான்மை இந்த நாட்டைவிட்டே ஒழிய வேண்டும். அடாடா! தேன்மொழி எவ்வளவு உயர்ந்த குலத்தைச் சேர்ந்தவள். அவளா தாழ்ந்த சாதி!" என்றான் இனியன்.

ஒரு பெண்ணின் அன்புக்காக அவன் ஏங்கிக் கிடந்தான். ஆழ்ந்த அன்புக்காக அவன் தவம் கிடந்தான். அவன் இருதய வீணையை மீட்டி, உணர்வைத் தட்டி எழுப்பிய அந்த உத்தமப் பெண் உலகத்தாரால் தாழ்ந்த சாதி என்று சொல்லுவதை அவனால் தாங்க முடியவில்லை. எஃகு போன்ற வலிமை படைத்த அவன் இதயக் கோட்டையிலே அவள் குடிகொண்டு விட்டாள். அதை உடைத்து அவளை எடுக்க முடியாது.

தொண்டையை ஒருதரம் கனைத்து விட்டுக் கொண்டு இனியன் மேலும் கூறினான்:

"மாமா! என்னை மாப்பிள்ளையாக அடைவதில் உங்களுக்குக் கஷ்டமா! உங்கள் பெண்ணுக்கு நான் ஏற்றவன் இல்லையா! உங்கள்

பெண்ணை நான் வைத்துக் காப்பாற்ற மாட்டேனா! அவளைக் கொடுமைப் படுத்துவேன் என்று நீங்கள் நினைக்கிறீர்களா! இல்லை; பிறர் அவளைப் பார்த்துக் குறைவாகப் பேச விட்டு விடுவேன் என்று எண்ணுகிறீர்களா! தயவு செய்து சொல்லுங்கள் மாமா."

"நான் இத் திருமணத்தை ஏற்றுக் கொண்டால் போதுமா! உங்கள் தந்தையார் ஏற்றுக் கொள்ள வேண்டாமா! என் மகளால் உங்கள் குடும்பத்துக்குள் பூசல் ஏற்படுவதை என்னால் பார்த்துக் கொண்டிருக்க முடியாது.'

"அதைப் பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டாம். முதலில் உங்கள் சம்மதத்தைத் தெரிவியுங்கள். என் தந்தை என்மீது அளவற்ற அன்பு கொண்டவர். என் விருப்பத்துக்குச் சரி என்றே சொல்லுவார். அது என் பொறுப்பு. நீங்கள் கவலைப்பட வேண்டாம்" என்றான் இனியன்.

தேன்மொழியின் தந்தையின் கண்களில் கண்ணீர் பெருக ஆரம்பித்து விட்டது. அவர் இரண்டு கையையும் கூப்பி இனியனுக்கு வணங்கினார். "நான் உங்கள் அடிமை. என் பெண் உங்களுடையவள். நான் தவம் செய்து பெற்ற மகள் பாக்கியம் செய்தவள். அந்தப் பெண்ணால் நான் பெருமை அடைகிறேன். தாங்கள் சாதாரண மனிதர் அல்ல. மனிதர்களுக்கெல்லாம் மேம்பட்டவர். வணக்கத்துக்கு உரியவர்" என்றார்.

அவர் மனத்தைக் குழப்பிய சிந்தனையிலிருந்து அவரைத் திருப்ப முயன்றான் இனியன். அவர் இதயத்தை வாட்டி வதைத்துக் கொண்டிருந்த மிகத் தவறான மனப்பான்மையை, 'தாழ்ந்த சாதி'யைச் சேர்ந்தவன் என்ற அடிமை எண்ணத்தை அடியோடு மாற்ற முயன்றான்.

"மாமா! முதலில் நீங்கள் உங்களைப் பற்றி உயர்வாக நினைத்துக் கொள்ளுங்கள். உயர்ந்த குணம் படைத்த பெண்ணுக்குத் தந்தை நீங்கள். உங்கள் மாப்பிள்ளை நான். ஒருவரைப் போல் ஊரை ஏமாற்றி நீங்கள் வாழவில்லை. உழைத்துப் பாடுபட்டு வாழ்கிறீர்கள். உழைத்துப் பாடுபடுபவர்கள்தான் உலகத்தில் பெரியவர்கள். அவர்களை நீண்ட நாளைக்கு அடக்கி அடிமைப் படுத்தி வைத்திருக்க முடியாது. உழைப்பாளிகளைப் பற்றி உழைப்பாளிகளே உணர்ந்து கொள்ளும் காலம் வந்து விட்டது. அதனால் அவர்களை உலகம் மதிக்கத் தொடங்கி விட்டது. ஆகையால் நீங்கள் தலை நிமிர்ந்து நில்லுங்கள்" என்றான் இனியன்.

அவன் சொன்னதைக் கேட்டவாறே தம்முடைய பலம் நிறைந்த கைகளால், உழைத்து உழைத்துக் காய்த்துப் போயிருந்த சொரசொரப்பான உள்ளங் கைகளினால் இனியனின் கையைப் பற்றினார். அப்படியே கண்களில் ஒற்றிக் கொண்டார். கண்ணீர் நிறைந்த அவர் கண்கள் இனியனின் அன்பும் வீரமும் நிறைந்த திருமுகத்தை நோக்கிக் கொண்டிருந்தன. அவன் கைகளைப் பற்றியிருந்த அவர் உறுதி வாய்ந்த கரங்கள் இலேசாக நடுங்கிக் கொண்டிருந்தன.

"கவலைப்படாதீர்கள், மாமா! உங்களுக்கு எங்களால் கஷ்டம் ஏற்படாது" என்றான் இனியன்.

"தேன்மொழி!" என்று தன் அருமை மகளைக் கூப்பிட்டார்.

தேன்மொழி மான்குட்டியைப்போலத் துள்ளிக் கொண்டு ஓடி வந்தாள்.

அவள் மலர்க் கரங்களைப் பற்றி இனியனின் கையில் வைத்தார். "இவள் என் மகள். இனி மேல் உங்களுடையவள்" என்றார்.



ஜனாதிபதி ராஜன்பாபு அவர்களின் காரியதரிசி ஸ்ரீ வி. துரைசாமி அய்யர் அவர்களின் புதல்வி சௌபாக்கியவதி தைலாம்பாளுக்கும், பம்பாய், 'கால்டெக்ஸ்' கம்பெனியைச் சேர்ந்த சிரஞ்சீவி ஏ. ஆர். பலராமன் பி. எஸ்ஸி. க்கும் பிப்ரவரி மாதம் 15-ம் தேதி விமரிசையாகத் திருமணம் நடந்தது. மணமக்கள் ஏராளமான வாழ்த்துக்களும் பரிசுகளும் பெற்றனர். வாழ்க, மணமக்கள்!

அவர் குரலில் தொனித்த பாவம் அதிசயமாக இருந்தது. வெற்றி விழாவின்போது கணீரென்று மணி அடிப்பது போலிருந்தது. தேன்மொழியும் இனியனும் அவர் முகத்தைப் பார்த்தார்கள். வழக்கத்துக்கு மாறாக அதில் மிளிர்ந்த மகிழ்ச்சியைக் கண்டார்கள். அவர் பாதங்களில் விழுந்து இருவரும் வணங்கினார்கள்.

அந்தச் சமயத்திலே ஒரு அதிசயமான விஷயம் நடந்தது. மேகங்கள் எதுவும் காணப்படாமலிருந்தும்கூட, 'படபட' வென்று கைதட்டுவது போல ஆகாயம் அதிர்ந்து இடி இடித்தது. அறிவு நிறைந்த இந்தக் காரியத்துக்குத் தேவர்கள் தங்கள் சம்மதத்தைத் தெரிவித்தனர்.

** ** **

ஊருக்குப் பின்னால் ஐயனார் கோயில் ஒன்று இருந்தது. அந்தக் கோயிலைச் சுற்றி நல்ல புஷ்பத் தோட்டங்கள் இருந்தன. கோயிலுக்கு எதிரில் பெரிய திறந்த வெளி ஒன்று இருந்தது. ஆண்டுதோறும் அந்தத் திறந்த வெளியில் நாடகம் நடத்துவார்கள். "மகா பாரதம்", "ராமாயணம்" முதலிய இதிகாச நாடகங்களை நடத்துவார்கள். இதனால் கிராமத்து ஜனங்களுக்கு ஒரு நல்ல பொழுது போக்கு. அத்துடன் நாடகத்தில் நடிப்பதற்கும், பாடுவதற்கும் ஒரு நல்ல சந்தர்ப்பமும் கிடைத்து வந்தது. இந்த நாடகங்களை ஊரில் உள்ள பெரிய பண்ணையார் ஊக்கப் படுத்தி வந்தார். அதற்கு வேண்டிய பொருள் உதவியும் செய்து வந்தார். அவர்களுடைய உற்சாகத்தையும் வெகுவாகப் புகழ்ந்து பாராட்டி வந்தார். அவருடைய இந்த மனப்பான்மையை ஊரில் உள்ள மக்கள் பாராட்டினர். அதனால் அவருக்கு ஊருக்குள் பெயரும் புகழும் ஏற்பட்டு வந்தது.

அதேபோல்தான் இந்த ஆண்டும் நாடகம் நடத்த ஏற்பாடு செய்திருந்தார்கள். வழக்கமாக நடத்தி வந்த நாடகங்களை விட்டுச் சமூக நாடகமாக நடத்த முன்வந்தனர். ஏதோ புதிய நாடகம் என்பதால் ஜனங்கள் அந்த நாடகத்தைப் பார்க்க மிகுந்த ஆவலுடன் துடித்துக் கொண்டிருந்தனர். புதிய சமூக நாடகத்தைப் பார்ப்பதற்காக ஊரே ஐயனார் கோயிலை நோக்கிக் கிளம்பி விட்டது.

இனியன் காலையிலிருந்தே மிகுந்த உற்சாகத்துடன் இருந்தான். தேன்மொழியின் தந்தை தன்னுடைய முடிவை வரவேற்று விட்டதை நினைந்து நினைந்து மகிழ்ந்து கொண்டிருந்தான். அதனால் அவனுக்கு வேறு ஒன்றிலுமே விருப்பம் ஏற்படவில்லை. உடனே தந்தையைப் பார்த்துத் தன் அபிப்பிராயத்தைச் சொல்லி அவருடைய சம்மதத்தைப் பெறுவதற்குத் துடியாகத் துடித்துக் கொண்டிருந்தான்.

இந்தச் சமயத்தில் பண்ணையின் காரியக்காரர் அங்கு வந்தார். "அப்பா உங்களை அழைத்து வரச் சொல்லுகிறார்கள். நாடகத்துக்கு நாழியாகி விட்டதாம். ஜனங்கள் எல்லாரும் கூடிவிட்டார்கள். அடேயப்பா! அங்கு என்ன கோலாகலம்!" என்றார்.

இனியன் பதில் ஒன்றும் சொல்லாமல் மௌனமாக உடை அணிய ஆரம்பித்தான்.

"பெண்கள் வேறு எல்லா வருஷத்தையும் விட இந்த வருஷம் அதிகமாகக் கூடியிருக்கிறார்கள்" என்றார் காரியக்காரர்.

"இனியா! என்ன இன்னும் கிளம்பவில்லையா!" என்று கேட்டுக் கொண்டே வந்தார் பண்ணையார்.

"இதோ வந்து விட்டேன், அப்பா!"

அவர்கள் அமைதியாகவும் வேகமாகவும் தெருவைக் கடந்து ஐயனார் கோயில் நாடகக் கொட்டகைப் பக்கம் சென்றார்கள். வேகமாக நடந்து வந்ததாலும், மனக் கிளர்ச்சியாலும் இனியனின் இதயம் 'பட பட' வென்று அடித்துக் கொண்டிருந்தது. ஏதோ பெரிய விஷயம் நடக்கப் போவதாக அவனுக்குத் தோன்றியது. நாடகக் கொட்டகைக்கு எதிரில் ஏராளமான கூட்டம் கூடியிருந்தது. பண்ணையாரும் இனியனும் கூட்டத்துக்கு முன்னால் சென்று தங்களுக்காக இருந்த இடத்தில் அமர்ந்தனர். ஜனங்கள் உற்சாகமாகச் 'சள சள' வென்று பேசிக் கொண்டிருந்தனர். கூட்டத்துக்கு முன்னால் ஊரில் உள்ள செல்வாக்குள்ள பிரமுகர்கள் ஐந்தாறு பேர் அமர்ந்திருந்தனர். எல்லாருடைய பார்வையும் பண்ணையாரையும் இனியனையும் நோக்கியே இருந்தது. இதை இனியன் கண்டான்.

நாடக மேடைமீது ஒருவர் வந்து நின்றார். "இன்னும் சற்று நேரத்துக்கெல்லாம் நாடகம் ஆரம்பமாகி விடும். தயவு செய்து சத்தம் செய்யாமல் இருங்கள்" என்று கேட்டுக் கொண்டார்.

"அதோ! தேன்மொழி வருகிறாள்" என்று கூட்டத்தில் யாரோ சிலர் கூவினர்.

"தேன்மொழியா! இங்கே வா!" என்று சில பெண் குரல்கள் அவளை அழைத்தன.

தேன்மொழியைச் சில பெண்மணிகள் முன்னால் தள்ளிக் கொண்டு போய் உட்காரவைத்தனர்.

கூட்டத்தின் குரல்கள் ஒரே உற்சாகமாக ஒன்று சேர்ந்து முழங்கின. நாடகக் கொட்டகையின் முன்னால் ஆர்மோனியத்தை வைத்துக் கொண்டு ஒருவன் இரைந்து பாடும் சத்தமும், அதற்குப் பக்க வாத்தியமாக முழங்கிய வாத்தியங்களின் ஓசை எல்லாவற்றையும் அந்த முழக்கம் மூழ்கடித்து விட்டது. நாலு புறத்திலிருந்தும் இன்னும் மக்கள் வந்து கொண்டிருந்தனர். கைகளை வீசிக் கொண்டும், ஆனந்தமாகப் பேசிச் சிரித்துக் கொண்டும் ஜனங்கள் சந்தோஷமாக இருந்தார்கள். வெகு நாளாக அவர்கள் அப்படி ஒன்று கூடும் சந்தர்ப்பம் ஏற்படாததால் நெஞ்சங்களில் அடைபட்டுக் கிடந்த சந்தோஷம் வெளி வந்து கொண்டிருந்தது. அது மாபெரும் பற

# ★ ★ பொன்னி ★ ★

ஆசிரியர் : **ரா. தணலன்**

★

சிறந்த இலக்கியப் பத்திரிகை
சிறந்த குடும்பப் பத்திரிகை
சிறந்த பொழுது போக்குப் பத்திரிகை

*உங்கள் சிந்தனைக்கு விருந்து*
*சமுதாய சீர்குலைவுக்கு மருந்து*

**1-4-1954** முதல் மீண்டும்
மாதம் இருமுறையாக வெளிவருகிறது

★

## பொன்னி லிமிடெட்

111, பவழக்காரத் தெரு :: சென்னை - 1

---

அம்மா சொல்லுகிறாள் —



## ப்ரூக்லாக்ஸ் உங்களை ஒரே இரவில் குணமாக்கிவிடும்




குழந்தைகள் ப்ரூக்லாக்ஸின் இனிய ருசியை விரும்புகின்றனர். கசந்த கலவையுள்ள மருந்துகளிலிருந்து முற்றிலும் மாறானது. படுக்குமுன் ஒரு சிறு வில்லை சாப்பிட்டால் நிச்சயம் நிவாரணமுண்டு. உங்களுக்கோ, குடும்பத்திற்கோ பேதி மருந்து வேண்டும்போழுது ப்ரூக்லாக்ஸை கேட்டு வாங்குங்கள். மலச்சிக்கலைத் திருத்த அருமையான வழி.

---

லண்டன் வெஸ்ட்மின்ஸ்டர் லாபரேடரீஸ் லிமிடெட் தயாரிப்புகளில் ஒன்று.

ஏஜண்டுகள் : **ஓரியண்டல் மர்க்கண்டைல் ஏஜன்ஸி**

OMA-10 99-ஏ, அரமனைக்காரத் தெரு, மதராஸ்

# குடலை ஒழுங்காக வைத்திருங்கள் — உற்சாகத்துடன் விளங்குங்கள்



திடாரோக்யமே சுகவாழ்வுக்கு அடிப்படை. திடாரோக்யம் பெறும் வழி, குடலில் விஷக்கழிவுகள் தங்காமலிருப்பது தான். தளதளக்கிற ஈனோஸ் 'ப்ரூட் ஸால்ட்' சாப்பிடுங்கள். அதன் சௌமிய விரேசக குணத்தினால், ஹானிகரமான கழிவடைப் பொருள்கள் அவ்வப்பொழுது வெளியேற்றப் படுகின்றன. உங்கள் ரக்தமும் சுத்தியடைந்து, நீங்கள் பூரண ஆரோக்யமும் உற்சாகமும் பெற அது விசேஷ வகையில் உதவுகிறது.

## ஈனோஸ் 'ப்ரூட் ஸால்ட்'

உங்களை தென்பாகவும் சுறுசுறுப்பாகவும் வைத்திருக்கிறது

புதுமை கெடாமலிருக்க புட்டிகளில் விற்கப்படுகிறது.

'ஈனோ' மற்றும் 'ப்ரூட்ஸால்ட்' என்ற பதங்கள் ரிஜிஸ்டர் செய்யப்பட்ட டிரேட் மார்க்குகள்




ENO 8164

வையைப் போல, ஆகாயத்தில் எழும்பி, தன் விசாலமான சிறகுகளை மேலும் மேலும் விரித்து ஜனங்களை ஒருவரோடு ஒருவர் சேர்த்து வைத்துக்கொண்டிருந்தது. கணந்தோறும் புதுமையாகக் கொழுந்து விட்டுக் கிளம்பும் ஆனந்தமாக அது மாறியது. மக்கள் முகங்கள் மலர்ந்து ஒளிவீசித் திகழ்ந்தன.

இனியன் இந்தக் காட்சியை யெல்லாம் பார்த்து அனுபவித்துக் கொண்டிருந்தான். அவனுக்கு அந்தக் கிராமத்து ஜனங்கள் மீது அவனையும் அறியாமல் பரிவும் பாசமும் ஏற்பட்டு விட்டது. அவர்களில் மிகப் பெரும்பாலோர் அவர்களுடைய பண்ணையிலே வேலை செய்பவர்கள்தான். அவர்களை அன்போடு பார்த்தான். தன் தந்தையைப் பார்த்தான். அவர் கம்பீரமாக அமர்ந்திருந்த கோலத்தைப் பார்த்தான். அவர் தன்னைக் கவனிக்கவில்லை என்பதைத் தெரிந்து கொண்டு தேன் மொழி இருக்கும் பக்கமாகத் திரும்பிப் பார்த்தான். அவளும் அவனைத் திரும்பிப் பார்த்தாள். இனியன் தன்னுடைய பார்வையை வேறு பக்கமாகத் திருப்பிக் கொண்டான்.

நாடகமேடையில் 'கண கண' என்று மணி ஒலித்தது. 'கம்'மென்ற மணத்துடன் சாம்பிராணி புகை 'குபு குபு' வென்று வெளியில் வந்தது. அடுத்த கணம் திரை தூக்கப்பட்டது. மேடை மீது ஒரு வயது சென்ற பெரியவர் வந்தார். சபையோருக்கு வணக்கம் சொன்னார். பிறகு பேச ஆரம்பித்தார்:

"இப்பொழுது நாங்கள் நடத்தப் போகும் நாடகம் 'வயலில் நடந்தது!' என்னும் சமூக நாடகம். இது நம் பழைய தமிழகத்து மக்களின் வாழ்க்கையைச் சித்திரிக்கும் ஒரு நாடகம். மக்கள் பாகுபாடு இல்லாது வாழ்ந்த காலம். மக்கள் ஒருவரை ஒருவர் மாய்த்துக் கொண்டு மாள்வதற்கு வித்தியாசம் இல்லாது வாழ்ந்த காலம். மக்களை ஒரு சில செல்வவந்தர்கள் தங்கள் தங்கள் செல்வத்தைப் பெருக்கிக் கொள்ள உபயோகித்துக் கொள்ளாது வாழ்ந்தனர். சிலருடைய நலனுக்காகச் சமூகத்தை நாசப் படுத்தாது மக்கள் காரியங்கள் செய்து வந்தனர். எல்லா மக்களும் உழைத்தார்கள். ஆண் பெண் அனைவரும் உழைத்தார்கள். ஏழை பணக்காரர் எல்லாரும் உழைத்தார்கள். பண்ணையார் குடியானவன் என்ற பாகுபாடு இல்லாமல் உழைத்தார்கள். அப்படி உழைத்து வந்த ஒரு பெரிய பண்ணையாரின் மகன் சாதாரண உழவனின் மகளை வயல் வெளியில் பார்க்கிறான். அவளுடன் அவனும் வேலை செய்கிறான். மேலே கதை தொடருகிறது பாருங்கள்" என்று சொல்லி விட்டு அந்தப் பெரியார் உள்ளே சென்றார்.

அடுத்த கணம் நாடக மேடையில் முரசு கொட்டும் முழக்கம் கேட்கிறது. எல்லாரும் சேர்ந்து 'கணீர்' என்ற குரலில் பாடுகிறார்கள். ஒருவர் முதலில் தனியாகப் பாடுகிறார். அதைத் தொடர்ந்து பலர் பாடுகிறார்கள்.

அன்பென்று கொட்டு முரசே!—மக்கள்
அத்தனை பேரும் நிகராம்
இன்பங்கள் யாவும் பெருகும்—இங்கு
யாவரும் ஒன்றென்று கொண்டால்.

கீதம் பொங்கிப் பெருகி மக்களை அப்படியே தழுவிக் கொண்டது.

ஆண்களும் பெண்களும் ஏர்க் கலப்பையைச் சுமந்து கொண்டு, எருதுக் காளைகளை ஓட்டிக் கொண்டு வயல் வெளிக்குச் செல்லுகிறார்கள். ஒவ்வொருவரும் இதே பாட்டைப் பாடிக் கொண்டே செல்கிறார்கள்.

○ ● ○ ● ○ ● ○ ● ○ ● ○

## சங்கீத சாரம் (முதற் பாகம்)

சங்கீதம் என்றால் என்ன! நாதம் என்றால் என்ன! ஸ்வரம் என்றால் என்ன! ஸ்ருதி என்றால் என்ன! என்று இப்படிக் கேள்வி கேட்க ஆரம்பித்தால் தெளிவாகப் பிறருக்குப் புரியும்படியும் சுருக்கமாகவும் பதில் அளிப்பது என்பது மிகவும் கடினம். அத்தகைய காரியத்தை ஆசிரியர் இந்நூலில் எளிதில் சாதித்திருப்பது மிகவும் பாராட்டுக் குரியது.

முப்பத்தைந்து தாளங்கள், சங்கீத உருப்படிகளின் லட்சணங்கள், மேள கர்த்தாக்களின் அமைப்பு, இசை நூல்களில் உபயோகிக்கப்படும் குறிப்புப் பதங்கள் ஆகிய யாவும் துவக்க நிலையில் உள்ள இசை பயிலும் மாணவர்களுக்குப் பெரிதும் பயன்படக் கூடியவை.

எழுதியவர்: ஆர். வி. கிருஷ்ணன்; கிடைக்குமிடம்; சிந்தாதிரிப்பேட்டை உயர்நிலைப் பள்ளி, சென்னை-2; விலை: ரூ. 1-8-0.

○ ● ○ ● ○ ● ○ ● ○ ● ○

கட்டுமஸ்தான உடல்; களையான முகம்; கருமையான மயிர்; இனிய குரலில் பாடிக் கொண்டே ஒரு வாலிபன் ஏர் உழுகிறான். வரப்பில் அதே பாட்டைப் பாடிக் கொண்டே ஒரு பெண் அண்டை வெட்டுகிறாள். அவள் அன்றாடம் வேலை செய்து பிழைக்கும் சாதாரணப் பெண். அவன் நிலம் படைத்த பண்ணைக்காரன்.

தினம் தினம் இதே காட்சி. கட[illegible] கட்டுப் பயிர்கள் பச்சை கொண்டு பள பள வென்று மின்னிக் கொண்டிருக்கின்றன. அவளும் வருகிறாள்; அவனும் வருகிறான். வேலை செய்யும்போது சேர்ந்து வேலை செய்தார்கள். சாப்பிடும்போதும் ஏற்றத் தாழ்வில்லாமல் ஒரே இடத்தில் அமர்ந்து சாப்பிடுகிறார்கள். வேலையிலும் அவர்களுக்குள் ஏற்றத் தாழ்வு கிடையாது. சாப்பாட்டிலும் ஏற்றத்தாழ்வு கிடையாது. ஏற்றத்தாழ்வு என்பதெல்லாம் அவன் நிலம் படைத்தவன். அவள் நிலம் இல்லாதவள்; அவ்வளவுதான்.

பயிர்கள் நன்றாக வளர்ந்து விட்டன. ஆற்றில் தண்ணீர் வற்றி விட்டது. பயிர்கள் வாடிவிட்டன. மக்கள் எல்லாரும் என்ன செய்வது என்று தெரியாமல் தவிக்கின்றனர். அப்பொழுது அவ்வாலிபன் தைரியமாக அவர்கள் முன் வருகிறான். குளங்களில் உள்ள தண்ணீரை வயலுக்குப் பாய்ச்சுகிறான். கிராமத்தில் உள்ள மக்களைத் திரட்டிக் கொண்டு குளத்தை இன்னும் ஆழப்படுத்துகிறான். தண்ணீர் ஊறுகிறது. ஊறும் தண்ணீரைப் பயிர்களுக்குப் பாய்ச்சுகிறான். கிணறுகளில் உள்ள தண்ணீரை யெல்லாம் பாய்ச்சுகிறான். இப்படியாக முப்பது நாட்கள் பயிர்கள் வாடாமல் காப்பாற்றுகிறான். ஆற்றில் தண்ணீர் வருகிறது. அவர்கள் கவலை யெல்லாம் பறந்து விடுகிறது.

அடாடா! இப்படிப் பாடுபட்டு இந்தப் பயிர்களைக் காப்பாற்றா விட்டால் ஆற்றில் வந்த தண்ணீரை நாம் இப்பொழுது உபயோகப் படுத்திக் கொள்ள முடியுமா! அப்பொழுது மக்களை ஒன்று திரட்டிய அந்த வாலிபனை, அவன் விடா முயற்சியை எல்லோரும் பாராட்டுகின்றனர்.

இன்னொரு சமயம் பயங்கரப் புயல் வீசியது மரங்கள் சல சலத்தன. பல இரவுகள் ஒன்று கூடி விட்டது போல வானம் இருண்டு விட்டது. ஓங்கி வளர்ந்த உறுதியான மரங்கள் 'சர சர' வென்று முறிந்து விழுந்தன. மின்னல் ஒளி இடை

## ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளின் பஞ்சரத்னக் கீர்த்தனைகள்

உலகத்தில், அநுபவ ஞானம் உள்ள ஒருவரைக் குறிப்பிடும்போது, "அவர் நாலும் தெரிந்தவர்" என்று சொல்லுவார்கள். ஆனால் சங்கீதத்தைப் பொறுத்த வரையில் "ஐந்தும் தெரிந்தவர்" என்று சொன்னால்தான் சங்கீத வித்வானுக்குப் பெருமை தருவதாகும். அந்த ஐந்து என்பது, மகான் தியாகப் பிரம்மம் இயற்றிய பஞ்சரத்னக் கீர்த்தனைகளைக் குறிப்பது. நாதோபாசகர்களுக்குத் தாரக மந்திரமாக விளங்கும் அத்தகைய மகத்துவம் வாய்ந்த கீர்த்தனைகளுக்கு இந்நூலில் ஸ்வரம் அமைக்கப்பட்டிருக்கிறது. கீர்த்தனைகள் தமிழிலும் தெலுங்கிலும் பிரசுரிக்கப் பட்டிருக்கின்றன.

ஸ்வரப்படுத்தியவர்: சங்கீத வித்வான் ஆலத்தூர் ஸ்ரீ வெங்கடேசய்யர்; பிரசுரம்: ஸ்ரீ சத்குரு சங்கீத சபா, 16, ரெட்டைமால் தெரு, தெப்பக்குளம் போஸ்ட், திருச்சி; விலை: ரூ. 1—0—0.

இடையே தாக்கியது. மின்னல் ஒளியில் மரங்கள் பேயாட்டம் ஆடிய காட்சி பயங்கரமாயிருந்தது.

இடி இடித்தது. காற்று அடித்தது. மழை 'சோ' வெனக் கொட்டியது.

ஆற்றில் வெள்ளம் அதிகமாகி விட்டது. தண்ணீர் இல்லாமல் காய்ந்த வயல்கள் எல்லாம் இப்பொழுது வெள்ளத்தினால் அழிந்து நாசமாகி விடும் போல் ஆகி விட்டது.

அந்த வாலிபன் மீண்டும் மக்களை ஒன்று திரட்டினான். வயல்களில் இருந்த தண்ணீரை எல்லாம் வடிகாலில் வெட்டி விட்டான். வயல் வரப்புகளை உயர்த்தினான். இரவு பகல் என்று பாராமல் தண்ணீரை வயல்களிலிருந்து வடிவதற்கு வேண்டிய முயற்சிகளை எடுத்துக் கொண்டான். பயங்கர வெள்ளத்திலிருந்து பயிர்களை அழியாமல் காப்பாற்றினான்.

வீடுகள் இழந்த ஏழைகளுக்கு ஊரில் உள்ள வாலிபர்களை யெல்லாம் ஒன்று திரட்டிக் கொண்டு வீடு கட்டிக் கொடுத்தான். சாலைகளைச் செப்பனிட்டான். பாடு பட்டால் பலன் உண்டு என்பதை மக்கள் அறிய உணர்த்தினான்.

அவனுடைய 'மனித அன்பு' என்ற ஜோதியினால் அந்தக் கிராமம் எங்கும் சுபிட்சம் நிலவியது. பயங்கரமாக வந்த இயற்கையின் உற்பாதங்கள் எல்லாம் எங்கோ ஓடி மறைந்தன. மக்கள் மகிழ்ச்சியால் மேலும் மேலும் உழைத்து உற்சாகமாகப் பாடுபட்டார்கள்:

ஏதோ வசியத்தில் கட்டுப் பட்டவர்களைப் போல அவன் சொன்னதை யெல்லாம் கேட்டனர். வயல் வெளிகளில் பயிர்கள் நெற்கதிர்களைத் தாங்கித் தலைசாய்ந்து கிடக்கும் காட்சி கிராம மக்களை வசீகரித்தது. தங்கள் உழைப்பின் பயனை எண்ணி மகிழ்ந்து போகிறார்கள்.

இந்தக் காட்சிகளை எல்லாம் நாடகத்தில் தத்ரூபமாகக் காண்பித்தார்கள். மக்கள் திறந்த வாய் மூடாமல் நாடகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தனர். இளம்பனும் தேன் மொழியும் மட்டும் நாடகத்தை விட்டு ஒருவரை ஒருவர் பார்த்துச் சிரித்துக் கொண்டிருந்தனர்.

வயல்களில் அறுவடை நடக்கிறது. களத்தில் நெற்கள் குவிந்து கிடக்கின்றன. வைக்கோல் போர் போராகக் காட்சி அளிக்கிறது. அந்த வைக்கோல் போருக்குப் பின்னால் அவன் அவளைச் சந்திக்கிறான். காதல் மொழி பேசுகிறான். அவன் காதலை அவள் பெற்றோர்கள் வரவேற்கின்றனர். அப்பொழுதும் சிலர் இந்தக் கல்யாணத்துக்குத் தடை செய்ய முயல்கின்றனர். அவன் அன்றாடம் வேலை செய்து காலம் கழிப்பவன். அவள் பெரிய பண்ணையாரின் மகள். அவன் அவளை மணக்கலாமா என்கின்றனர். பெற்றோர்கள் இந்த வேண்டாத மொழிக்குச் செவி சாய்க்காமல் அவர்களுக்குத் திருமணம் செய்து வைக்கின்றனர்.

அவன் அவளைக் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு வயல் வெளியில் வரப்பு மேல் நடந்து செல்கிறான். சூரியன் பிரகாசித்துக் கொண்டிருந்தது. வயல் வெளியில் அறுவடையான அடி நெற் தாள்களில் சூரிய ஒளி பட்டு ஜ்வலித்தன. அங்கே ஓடிய ஆறு தங்கத் தகடுபோல் மின்னியது. ஒரு சிறு குழந்தை அவர்களை நோக்கி ஓடி வருகிறது. குழந்தையின் மிருதுவான கன்னத்தை வருடிக் கொண்டே அவனும் அவளும் ஒருவரை ஒருவர் பார்த்துச் சிரித்தனர்.

பிறகு குழந்தையைப் பார்த்து அவன் பாடினான் அவனுடன் சேர்ந்து அவளும் பாடினாள்.

**உயிர்கள் இடத்தில் அன்பு வேண்டும்—தெய்வம்**
**உண்மை யென்று தானறிதல் வேண்டும்**
**வயிரமுடைய நெஞ்சு வேண்டும்—இது**
**வாழும் முறைமையடி பாப்பா.**

அந்தப் புதிய கீதம் பழைய நியான மந்திரமாக இல்லை. ஏகாந்தத்தில் துன்பத்தில் உழன்று பரிதவிக்கப் பாடும் பாட்டாக இருக்கவில்லை. அதில் மயக்கம் இல்லை. சோம்பல் உலகத்தின் வாசனையே இந்தப் பாட்டில் இல்லை.

இதுதான் நாடகக் கதை.

இதில் மக்கள் பாடுபட்டு உழைக்க வேண்டும், உழைத்தால்தான் பலன் உண்டு என்பதைப் பலப் பல கோணங்களில் காட்டினார்கள். ஆற்றில் தண்ணீர் திடீர் என்று வற்றிவிட்டால் மேலும் ஆற்றுத் தண்ணீரை எதிர்பார்க்காமல் பத்து பதினைந்து நாட்களுக்காவது பயிரைக் காப்பாற்ற வேண்டியதற்கு முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டிய அவசியத்தை வற்புறுத்தியிருந்தார்கள். மக்களுக்குள் ஏற்றத் தாழ்வு இல்லை. அன்புதான் முக்கியம். அதற்குப் பணிய வேண்டியது மக்களின் கடமை என்பதைத் தெளிவுபடுத்தியிருந்தனர்.

அவனுக்கும் அவளுக்கும் காதல் வளர்ந்த கதையைச் சுவாரஸ்யமாகச் சித்திரித்திருந்தனர்.

இந்த நாடகத்தைப் பார்த்த பண்ணையார் நாடகத்தைப் பாராட்டிக் கடைசியில் பேசினார்.

"நம்முடைய உழைப்பால், வலிமையால் நம்மை நாமே காப்பாற்றிக் கொள்ள வேண்டிய காலம் வந்துவிட்டது. நமக்குள் ஏற்றத் தாழ்வு பாராட்டக் கூடாது. மிகப் பெரிய பண்ணையாரின் மகள் சாதாரண குடியானைப் பெண்ணை மணந்து கொள்கிறான். இதுதான் வாழ்க்கை; இப்படித்தான் வாழ வேண்டும். இப்படிச் செய்தால்தான் நாட்டில் ஏற்றத் தாழ்வு மறையும். மக்கள் எல்லோரும் துவேஷம் இல்லாமல் சரிநிகர் சமானமாக வாழ்வார்கள்" என்றார்.

இந்தச் சமயத்தில் எதிர்பாராத ஒரு சம்பவம் நிகழ்ந்துவிட்டது. நாடகக் கொட்டகையிலிருந்த 'கியாஸ் லைட்' அறுந்து விழுந்துவிட்டது. எங்கும் இருள் சூழ்ந்து கொண்டது. அது பின்னால் நடக்கப் போகும் பயங்கர சம்பவத்தை எடுத்துக் காட்டுவது போல் தோன்றியது. (தொடரும்)

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki Press,
No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras 10.

# க்ஷணத்தில் நுரையும் ஸன்லைட் அடித்துத் துவைக்காமலே வெண்மையாகவும் பிரகாசமாகவும் சலவை செய்யும்



என் மனைவி என் ஆடைகளை மிகவும் ஜாக்கிரதையாக கவனித்துக் கொள்கிறாள். அவள் ஸன்லைட் சோப்பைத்தான உபயோகிக்கிறாள். ஸன்லைட் சோப்பின் அதிசீக்கிரம் வேலை செய்யும் செழிப்பான நுரை ஆடைகளிலுள்ள அழுக்கை அடித்துத் துவைக்காமலே அகற்றி விடுகிறது. அதனால் துணிகள் நீடித்திருக்கின்றன.



ஸன்லைட் சோப்பால் துணிகளை சலவை செய்வது மிகவும் சுலபம் அதனால் பொழுதுபோக்கிற்கு சாவகாசம் கிடைக்கிறது. ஸன்லைட் சோப்பின் சுறுசுறுப்பான நுரை அழுக்கை விரட்டி, கலர் துணிகளை நந்தவனம்போல் பிரகாசமாகச் செய்கிறது.




## ஸன்லைட் சோப்

துணிகளைக் காப்பாற்றுகிறது, சிரமத்தைக் குறைக்கிறது, பணத்தை மிச்சப்படுத்துகிறது

S. 220-50 TM

இந்தியாவில் தயாரித்தது

REGD. NO. M. 4392

*Registered as a newspaper in Ceylon*

கிப்ஸ் உபயோகிக்க
ஆரம்பியுங்கள்—
அது டூத்பேஸ்டை
விட இரு மடங்கு
நீடித்து வரும்.




# வாரம் ஒரு அணா செலவிற்கு பற்களுக்கு முழுப் பாதுகாப்பளிக்கிறது!

சாம்பல், கரிபோன்ற கரகரப்பான பொருள்கள் பற்களில் கீரல் விழச் செய்கின்றன. இந்த கீரல் வழியாக பாக்டீரியா புகுந்து கெடுதல் விளைவிக்கிறது. பற்கள் பூரண ஆரோக்கியத்தோடு இருக்க விஞ்ஞான முறையில் தயாரித்த ஒரு பல் துலக்கும் வஸ்து உங்களுக்குத் தேவை. ஆகையால் கிப்ஸ் டென்டிபிரிஸ் வாங்குங்கள். பற்களுக்கு பூரண ஆரோக்கியத்தைத் தரும் எல்லா பொருள்களையும் ஒன்று சேர்த்து கெட்டியாகச் செய்ததுதான் கிப்ஸ். அன்றியும் ஒரு டூத்பேஸ்ட் செய்யும் எல்லா வேலைகளையும் அதன் பாதி விலைக்குச் செய்கிறது. இதை உபயோகிப்பது மிகவும் சுலபம். பிரஷையோ அல்லது விரலையோ தண்ணீரில் நனைத்துக் கொண்டு கட்டியின்மேல் தேய்க்கவும். அதன் சுவையை நீங்கள் மிகவும் விரும்புவீர்கள். அன்றியும் அதன் மிருதுவான ஊடுருவிப்பாயும் நுரை உங்கள் பற்களை பளிச்சென்று வெண்மையாக இருக்கச்செய்யும்!




உங்களுக்குப் பிரியமான கிப்ஸின் கிளோரோபில் சேர்ந்திருக்க விரும்பினால் கிப்ஸ் கிளோரோபில் டென்டிபிரிஸ் கேளுங்கள். எல்லா இடங்களிலும் விற்கப்படும் வெள்ளை டப்பாவில் பெயரை கவனித்து வாங்குங்கள்.



நீலம், சிவப்பு, பச்சை டப்பிகளில்

# கிப்ஸ் டென்டிபிரிஸ்

GD. 37-50 TM

டி. அன்டு டபிள்யூ. கிப்ஸ் லிட்., லண்டனுக்காக இந்தியாவில் தயாரானது.